உ
குமாரஜெயம்

# அத்தியாச்சிரம சுத்தாத்துவைத வைதிக சைவ சித்தாந்த ஞானபானு

**பாம்பன்**
**ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்**
**அருளிச்செய்த**

31 ஆவதாகிய

## ஸ்ரீ சுப்பிரமணிய வியாசமும்

32ஆவதாகிய

## குருசிஷ்ய சம்பவ வரலாற்று வியாசமும்

**பாம்பன் அடியார்கள்**
**சென்னை**
2021

| | | |
|---|---|---|
| முதல் பதிப்பு | : | 1893 |
| இரண்டாம் பதிப்பு | : | 1925 |
| மூன்றாம் பதிப்பு | : | 1967 |
| நான்காம் பதிப்பு | : | 2001 |
| ஐந்தாம் பதிப்பு | : | 2021 (300 பிரதிகள்) |

**விலை : ரூ.100-00**

அலமு பிரிண்டிங் ஒர்க்ஸ்
9/5, ஐயா முதலித் தெரு,
இராயப்பேட்டை, சென்னை - 14.
போன் : 98840 76145 / 98840 76148

உ

ஓம் குஹப்ரஹ்மணே நம:

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

# நான்காம் பதிப்பின் பதிப்புரை

குருசக்கிரவர்த்தியாம் பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் திருவிராமேச்சுரத்தில் 1850ஆம் ஆண்டு அவதரித்தவர். தம்முடைய பெற்றோருடன் பாம்பன் திருத்தலத்தில் வாழ்ந்து, 1895ஆம் ஆண்டு துறவறம் மேற்கொண்டவர். தம் 13ஆம் வயதிலேயே ஸ்ரீகுமார பரமேஸ்வரன் "கங்கையைச் சடையிற் பரித்து" என்று அடியெடுத்துக் கொடுக்க அந்தப் பரமன்மீது 6666 திருப்பாடல்களால் சாத்திர தோத்திரங்களை ஆக்கியருளியவர். பிரப்பன் வலசை என்னும் திருத்தலத்தில் 1894–ஆம் ஆண்டு கடுந்தவமியற்றி ஸ்ரீ குமார பரமேஸ்வரனிடம் தகரவித்தையை ஞானோபதேசமாகப் பெற்றவர்.

ஸ்ரீமத் சுவாமிகள் தாம் இல்லறவாசியாயிருந்து ஆறுமண்டலங்களுள் முதல் மண்டலமாம் "குமரகுருதாச சுவாமிகள் பாடலை" அருளிய போதே வேத, ஆகம, புராண, இதிகாச ஸ்மிருதி முதலிய ஞான நூல்களின் பொருள் நிச்சயங்களையும், ஜக, ஜீவ, பர லக்ஷணங்களையும் விரிவாக விளக்கி, சுருதி, யுக்தி, அனுபவ வாயிலாக ஸ்தூல, சூக்ஷும அர்த்தங்களுடன் முழுமுதற்பரம்பொருள் பரமேஸ்வரனே என்றும் ஐம்முகப் பரமேஸ்வரனுக்கும் அறுமுகப் பரமேஸ்வரனுக்கும் வேறுபாடு கூறுதல் அடாது என்றும் ஸ்தாபித்து அபேத நிலையை போதித்து முருக பரத்துவத்தை வச்சிரத்தாணுவாய் நாட்டி "திவோதய சடக்கர உபதேசம்" என்றும் அரும்பொருளை "சிவஞான தேசிகம்" என்னும் குருஉபதேச சிஷ்ய பாக்கிய 1000 வினா விடைகள் அங்கிய 10 அரிய விளக்கப் படங்கள் தீட்டிய 32 வியாசங்களாக அமைத்து 1893 – 94 ஆண்டிலேயே அச்சிட்டு வெளியிட்டருளினார்கள்.

ஸ்ரீமத் சுவாமிகள் துறவறம் பூண்டு வெளிப்போந்தபோது விட்டுச் சென்ற 32 வியாசங்களில் தற்போது 8 வியாசங்கள் மட்டுமே கிடைக்கப்பெற்று அச்சேறியுள்ளது. திருவருளும், குருவருளும் முன்னின்று மீதமுள்ள 24 வியாசங்களையும் கண்டு பிடித்து வெளியிட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

தற்போது 31 ஆம் வியாசமாகிய **ஸ்ரீ சுப்பிரமணிய வியாசமும்** 32 ஆம் வியாசமாகிய **குருசிஷ்ய சம்பவ வரலாற்று வியாசமும்** ஒரு புத்தகமாகப் பதிப்பிக்கப்பட்டு வெளியிடப்படுகிறது.

இப்பதிப்பிற்கு அரிய ஆழமான முன்னுரை அளித்துதவிய ‘சிவாகம ரத்னா’’ டாக்டர். **S.P.** சபாரத்தினம் அவர்களுக்கு என்னுடைய நன்றியறிதலை தெரிவிந்துக் கொள்ளுகிறேன்.

இந்த ஞான நூல் வெளிவர அனைத்து உதவிகளையும் ஆற்றிய பேரன்பர்கள் இராஜரத்தினம், கதிர்வேலனார், சத்குரு ஆகியோருக்கு என் நன்றி கலந்த வணக்கத்தை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

பக்த கோடிகளும் பாம்பனடியார்களும் இவ்வரிய பொக்கிஷத்தை படித்து, உணர்ந்து, பயன்பெற்று போற்றிப் பாதுகாக்கும் புண்ணியம் பெற்றுய்வார்களாக!

இங்ஙனம்,
**N. ஜெயராமன்**

குமரகுருநூலகம்
சென்னை – 33.

௧ = 1, ௨ = 2, ௩ = 3, ௪ = 4, ௫ = 5,
௬ = 6, ௭ = 7, ௮ = 8, ௯ = 9, ௧0 / ௰ = 10
௧00 / ௱ = 100, ௧000 / ௲ = 1000

# முன்னுரை

அருள்வளம் கொழிக்கும் அமிழ்தமயப் பாட்டுக்களாலும், ஆகம–வேதப் பொருள்வளம் கொழிக்கும் அரும்பெரும் உரைகளாலும் முருக முதன்மையை நிலைநாட்டி, முழுமையான வழியைக் காட்டி அடியார் உலகைப் பரிபாலிக்க வந்தவர் குருச்சக்கிரவர்த்தி பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள். சுவாமிகளின் **6666** திருப்பாடல்களின் சாரத்தை எடுத்துக் கொடுக்கும் முறையில், சுவாமிகளே அருளிய வியாச வடிவான முப்பத்திரண்டு வசன நூல்களும் விளங்குகின்றன. ஆன்மிக ஆற்றலையும் தெய்விக ஆற்றலையும், இணைத்துக் கொடுக்கும் இணையற்ற ஆற்றல் வாய்ந்தது முப்பத்திரண்டு எனும் எண். இந்த எண்ணின் மகத்துவத்தை ஆகமங்கள் விரிவாக எடுத்துக் கூறுகின்றன. சுவாமிகள் தமக்கே உரித்தான ஒரு கட்டுக் கோப்பான வரையறையில் இந்த முப்பத்திரண்டு வசன நூல்களையும் அடியார்களின் சுகவாழ்வுக்காக அருளியுள்ளார் என்பது திண்ணம்.

சுவாமிகளின் திருக்கரத்தால் தீட்டப்பட்ட முப்பத்திரண்டு வசனநூல்களுள் பெரும்பாலானவை இப்பொழுது கிடைப்பதற்கு அரிதாகி விட்டன. கிடைக்கும் ஒருசில நூல்களையாவது பழுதறப் பயின்று பக்குவம் அடைந்து பரமனின் அருளைப் பெற உளம்கொண்டு உழைப்பது அடியார்களின் கடமையாகும்.

"பழுதற வோதிக் கடந்து பகைவினை தீரத் துறந்து
பலபல யோகத் திருந்து"

என, அருணகிரிப் பெருமான் உரைத்தருள்வது போன்று நன்னெறி நின்று நலம்பல பெற்று வாழ்வதற்கு சுவாமிகளின் வசன நூல்களையும் ஒருமுறை அன்றி, இருமுறை அன்றிப் பலநூறு முறையும் அவசியம் படித்துணர வேண்டும். வசன நூல்களைப் படிப்பதும் வாழ்வுத்திறத்தை வளமாக்க வல்ல பாராயணச் செயலேயாகும்.

பாம்பன் சுவாமிகளின் அரிய பெரிய நூல்களைப் பழுதறப் பதிப்பித்து வெளியிட்டு அடியார்களுக்கு சுவாமிகளின் நூல்கள் தடையின்றிக் கிடைக்க

வழிவகுத்துக் கொடுப்பதையே தமது வாழ்க்கையின் பயனாகக் கொண்டிருக்கும் பேரன்பர் திரு. ஜெயராமன் அவர்கள் இப்பொழுது சுவாமிகளின் 31வது வியாசமான ஸ்ரீ சுப்பிரமணிய வியாசம் என்பதையும் 32வது வியாசமான குருசிஷ்ய சம்பவ வரலாற்று வியாசம் என்பதையும் ஒருசேரப் பதிப்பித்து வெளியிடுகின்றார்கள். அடியார் பேருலகம் அவருக்கும் அவரது இல்லத்தினர்க்கும் பெரிதும் நன்றிக்கடன் பட்டுள்ளது.

மேற்கூறப்பட்ட இரண்டு வசன நூல்களுள் ஸ்ரீ சுப்பிரமணிய வியாசம் என்பது தன்னிகரற்ற தமிழ் வேதமாகும். இந்நூலை ஒருமுறை பயின்றாலும். பயில்பவர் உள்ளத்தே உண்மை ஒளி பெருக்கெடுக்கும்; அரிய பெரிய தத்துவ நுட்பங்கள், விரிந்து மணம்பரப்பும் மலர்க் கூட்டங்களாக அன்னாரின் உள்ளத்தில் உருவெடுக்கும்; குகநெறியில் திடமாகக் காலூன்றி நிற்கும் உறுதிப்பாடு அன்னாரின் இதயத்தே வச்சிரத் தூண் என விளங்கி நிற்கும்; ஊழ்வலியால் நேர உள்ள உபத்திரவங்களையும் தூசென உதறித் தள்ள வல்ல மனோபலம் அன்னார்க்கு வழுவற வாய்த்து நிற்கும். சுவாமிகளின் திருப்பாடல்களை நன்கு உணர்ந்து கொள்ளக் கூடிய ஞானபலம் அன்னார்க்கு நவையற வாய்த்து நிற்கும். வேத பாஷியங்களிலும் காணமுடியாத அரிய பெரிய விளக்கங்கள் இந்த வியாசத்திலே இடம்பெற்றுள்ளன.

சுவாமிகளின் வசன நூல்கள் கடா–விடைப் பாணியில் அதாவது கேள்வி–பதில் வடிவத்தில் அமைந்திருப்பவை. ஸ்ரீ சுப்பிரமணிய வியாசத்தில் 97 கேள்வி – பதில்கள் அமைந்துள்ளன.

"சுப்பிரமணியம் என்பது என்ன" – இது முதலாவது கேள்வி
"ஆதியாயும் அனாதியாயும் உள்ள பரம்பொருள்" – இதுவிடை
"அதுதானோ ஸ்காந்த புராணத்தில் காணப்படுகின்ற அசுர குலாந்தக மூர்த்தி?" – இது இரண்டாவது கேள்வி
"ஆம். அதுவும் ஒரு தருணமே" – இது விடை.
இந்த விடையை அன்பர்கள் ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

"சூரசம்மார மூர்த்தியாக வந்தது ஒரு சமயத்தில்" என்று உணர்த்துகிறார் சுவாமிகள். இந்தக் கூற்று எதனைப் புலப்படுத்துகிறது!

வேறொரு தருணத்தில் வேறு மூர்த்தியாக அப்பரம்பொருள் வெளிப்பட்டுள்ளது என்பதை அன்றோ இது உணர்த்துகிறது! அவ்வாறு வெளிப்பட்டதை நூல்கள் உறுதிசெய்துள்ளனவா எனின் வாதுள ஆகமமும் மகுடம் எனும் ஆகமமும் சுப்பிரமணியப் பரம்பொருள், சிவபெருமானின் இதயத்தினின்று அறுமுகம் தாங்கி வெளிப்பட்டருளிய நிகழ்ச்சியை உறுதிசெய்கின்றன, என விடையளிக்கப்படும். சுவாமிகளே தமது முதன் மண்டலத் திருவேரகப் பதிகத்தில் இதனைப் புலப்படுத்தி அருள்கின்றார்.

சுவாமிகள் வசனம் என வரைந்தாலும் அது ஆணித்தரமாகவும் ஆழ்பொருள் உடையதாகவும் விளங்கும் என்பதை எடுத்துக்காட்டவே இவ்விளக்கம் தரப்பட்டது.

அடுத்து ஒரு தர்க்கரீதியான கேள்வி. முருகன் சிவபெருமானின் திருக்குமரன் தானே. ஈசுவரனின் படைப்பால் தோன்றிய ஒரு குமாரனை எவ்வாறு பரம்பொருள் எனக் கொள்ளலாம்?

இந்தக் கேள்வியைப் படித்தபோது ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வந்தது. சிதம்பரத்தில் இருந்த என் குருநாதரிடம் நான் வேத ஆகமங்களைப் பாடம் கேட்டுக் கொண்டிருந்த காலம். (ஏறக்குறைய முப்பது ஆண்டுகளுக்கு முன்னால்). வேதாந்தத்தில் ஆழ்ந்த பற்றுடைய முதியவர் ஒருவரும் அப்பொழுது உடன் பயின்று கொண்டிருந்தார். சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு நெருப்புப் பொறிகள் கிளர்ந்து எழுந்து, அவை வாயுவாலும் அக்னியாலும் தாங்கப்பெற்று, ஆறுமுகக் குழந்தையாக உருவெடுக்கும் சம்பவத்தை நான் சுலோகங்களாகப் படித்துக் கொண்டிருந்தபோது அந்த வேதாந்த முதியவர், துண்டை உதறிக் கொண்டு திடீரென்று எழுந்து விட்டார். படிப்பதை நிறுத்தி நான் அவரைப் பார்த்தேன். "ஏன் எழுந்து விட்டாய்? இருந்து மீதியையும் கேட்டுவிட்டுப் போயேன்" என்றார் குருநாதர். அதற்கு அந்த "வேதாந்த சீலர்" படீரென்று கூறினார்: "ஈசுவரனின் நெற்றியிலிருந்து நெருப்பாகத் தோன்றியதனால், ஸ்கந்தனுக்கு காலகதியான தோற்றம் உண்டு என்று தெரிகிறது. காலகதியான தோற்றம் உடையவனை நான் எப்படி பரப்பிரம்மாக ஏற்றுக் கொள்ள முடியும்? ஈசுவரன் ஈசுவரன்தான். அவன்மட்டும்தான் பரம்பொருள். பரப்பிரம்மம் அல்லாத கந்தனின் சரித்திரம் எனக்கு வேண்டாம்."

– இவ்வாறு "ஆணித்தரமாகக்" கூறிவிட்டு, தன் வயதைமீறிய வேகத்துடன் வெளியேறி விட்டார் அவர். அவரது பக்குவம் அப்படி! அவர் வெளியேறிய பிறகு என்குருநாதர், இந்தக் கேள்விக்கு விடையாக சுவாமிகள் கூறியுள்ள கருத்தை அப்படியே எனக்கு எடுத்துக் கூறினார்: "அது ஈசுவர சிருஷ்டி அன்று. அதாவது, அதுவரை இல்லாத ஒன்று புதிதாகத் தோன்றுவது என்பது அல்ல. சிவபரம்பொருள் தன்னைத் தானே குழந்தையாக மாற்றிக் கொண்ட நிகழ்ச்சிதான் குமார சம்பவம்".

சுவாமிகள் ஸ்காந்த புராண மேற்கோளுடன், இந்த நுட்பப்பொருளை விடையாக அளித்து அருளாகின்றார்.

இவ்வாறு இந்த வசன நூலின் பெருமையைச் சான்றுகள், தந்து விளக்கிக்கொண்டே போகலாம்.

தெளிவாகவும் ஆழமாகவும் சிந்தித்து உண்மையை உணர்வதாகிய "சிந்தித்தல், தெளிதல் (மனனம், நிதித்தியாசனம்) எனும் இரண்டு ஆன்மிகப் பயிற்சிகளையும் ஒருங்கே நிறைவேற்ற வேண்டுமானால், ஒருவர் சுவாமிகளின் வசனாமிர்த நூல்கள் அவசியம் படித்தே ஆகவேண்டும்.

ஸ்ரீ சுப்பிரமணிய வியாசத்தில் இடம்பெற்றுள்ள மிகமுக்கியமான பகுதிகள் – **6, 63, 64, 68, 75, 81, 86, 87, 90** எனும் எண்ணிட்ட கடா–விடைப் பகுதிகளாகும். இவற்றை அன்பர்கள் நாள்தோறும் பாராயணமாகப் படிப்பது மிகமிகமுக்கியம். முருகப்பெருமான் ஆலயங்களிலும் நாள்தோறும் படிக்கப்படலாம்.

மிக உன்னதமான சிவயோகத்தின் ஓர் அங்கம் அண்ட பிண்ட சமன்பாட்டை உணர்தல் என்பது. புறத்தே அண்ட வெளியில் உள்ள மலைகள், நதிகள், ஏழ்பெரும் கடல்கள் ஏழ்பெரும் தீவுகள். பதினான்கு உலகங்கள் முதலான அனைத்தும் பிண்டமாகிய தேகத்திலும் காணப்படும். இவற்றைக் காண்பதற்குரிய பயிற்சியை அளிக்கும் வகையில் சுவாமிகளின் **32**வது வசனமாகிய குருசிஷ்ய சம்பவ வரலாற்றும் வியாசம் என்பது விளங்குகிறது. அண்ட பிண்ட சமன்பாட்டை அழகிய தமிழ் நடையில் சுவாமிகள்

புலப்படுத்தியிருப்பது போன்று வேறு யாவரும் புலப்படுத்தியதில்லை என்னும் சீரிய உண்மையை அன்பர்கள் கருத்திற்கொள்ள வேண்டும். இந்த வியாசத்தின் நிறைவுப் பகுதியில் குரு கூறுவதாக சுவாமிகள் எழுதியுள்ள ஒரு கூற்று நன்கு உணரப்பட வேண்டும்.

"அன்னவாறு நுவன்றுள்ள நித்திய பாக்கியமாம் முத்திநெறி
கூடும் சீடனைப் பெயர்த்தும் அவ்விவேகபூரணாசாரியர்
அன்போடு அளவளாவித் தழீஇ நின்று" இன்றுதான்
எமது எண்ணம் நிறைவேறிற்று, இனியொன்றும்
குறைவின்று" என்ற கூறினர்."

"எனது எண்ணம் குருவின் உபதேசத்தால் நிறைவேறியது" என்று சீடன் கூறுவதைத்தான் கேள்விப்பட்டிருக்கிறோம் ஆனால் இங்கே குரு கூறுகின்றார் "எமது எண்ணம் நிறைவேறிற்று" என்று. அங்ஙனமாயின். குரு எண்ணியிருந்தது, எதிர்பார்த்து இருந்ததுதான் என்ன?

"தனது சொரூப ஞான அனுபவப் பேற்றை
உள்ளவாறே பெறக் கூடிய சற்சீடன் எனக்கு எப்பொழுது
வாய்ப்பான்? பொன்னையும் பொருளையும் என்னிடம்
வேண்டாமல், என் பரிபூரண ஞானப்பேற்றை விழைந்து
எந்தச் சீடனாவது வரமாட்டானா?

– இதுதான் ஒவ்வொரு சீரிய குருவும் எதிர்பார்ப்பது. இத்தகைய சீடன் தனக்கு உள்ளபடியே வாய்க்கும் பொழுதுதான் தனது எண்ணம் நிறைவேறியதாகக் குரு கருதுவார். ஒரு சற்சீடன் தனக்கு வாய்த்ததாலும், அவன் தன் முன் நன்னிலை பெற்று தன்னோடு ஒப்ப விளங்கும் அளவுக்கு ஞானப்பேறு பெற்று விட்டதாலும் குருவுக்குப் பரம திருப்தி ஏற்படுகிறது. அதனால் கூறுகிறார்" இன்றுதான் எமது எண்ணம் றிறைவேறிற்று" என்று.

பாம்பன் சுவாமிகளின் எண்ணம் நிறைவுற நாம் நடந்து கொள்ள வேண்டாமா? நமது ஞானநெறி ஒழுக்க விழுப்பங்களை உணர்ந்து அவரது நெஞ்சம் குளிர வேண்டாமா!

சுவாமிகளின் வாக்கு வளத்தாலேயே முன்னுரையை நிறைவு செய்கிறேன். "இந்நூலை விவேகிகள் பேரன்போடும் படனம் செய்யூப் பெரும்பேறு உற்று உய்வார்களாக" (நூன்முகத்தில், இறுதியில் சுவாமிகள் கூறும் ஆசியுரை)

அன்பன்
***சபாரத்தினம்***

**டாக்டர் S.P. சபாரத்தினம்**
இயக்குனர், பன்னாட்டு ஆகம
சித்த விஞ்ஞான ஆய்வு நிறுவனம்.
Chief Editor, Agama Saurabha
(International monthly journal)

ஓம
குமாரகுருப்யோநம:

# நூன் முகம்

அறிவருந் தேவதேவனுைய அறுமுகச் சிவபிரானது பரத்துவ வுண்மையைப் பஃறிற ஆசங்கைபாற்றிப் பிரகாசமாகக் கூறுநின்ற விப்புத்தகத்தின் முப்பத்தொன்றும் வியாசமானது வேதாகமாதி தொன்னூல்களெனும் பன்னூல்களினின் றெழுந்து வருவதாயினும் வடமொழிக் காந்தபுராணத்துச் சங்கர சங்கிதையில் கூ௦௦௦ - சுலோகங்கள் கொண்ட சிவரகசிய கண்டத்தையே பெரும்பாலு மேற்கோளாகக் கொண்டு வருவதாகும். பிரபலச் சுருதியாகிய சாந்தோக்யத்தில் "இதிகாச புராணம் பஞ்சமம்" என்றபடி இதிகாசபுராணம் ஐந்தாவது வேதமெனப்படுதலினாலும் மேலைச் *சிவரகசியகண்ட சம்பவகாண்டத்து உ - வது அத்தியாயத்து சுo - வது சுலோகத்திற் "சங்கர சங்கிதை யென்பது முற்றும் வேதத்தா லாதரிக்கப்பட்டது" எனும் பொருள் காணப்படுதலினாலும் மேலைச் சங்கிதை, வேதத்தைப் போற் பிரமாணமாக நிலைபெறு மாண்புடைத்தென்ற றுணிபு. அன்றியும் இச்சங்கிதையொடு வேறைந்து சங்கிதைகளையுமுடைத்தாய் நூறாயிரஞ் சுலோகங்களானிரம்பியுள்ள ஸ்காந்தம், பதினெண் புராணங்களிலொன்றேயாயினும் ஏனைப் புராணங்களை யெண்ணு

---

*இச் சிவரகசியகண்டம், திருவாதி: அனந்தவைத்தியநாத சிவனவர்களாற் கீர்வாண வாணிவிலாஸ அச்சுக்கூடத்தில் விகுருதிஞு சித்திரைமீ கிரந்தவெழுத்திற் பதிப்பிக்கப்பட்டது. இப்பிரதியே இவ்வியாசத்தில் வருபிரமாணங்களுக் குரியது.

விளமைப்படுத்துபு சிரேட்டமா யிருக்கின்ற மகா புராணமுமாம். இஃதினிது விளக்குகின்ற சுப்பிரமணிய பரமான்மாவின் பிரசன்ன முதலிய சரிதங்களுந் தாரக சம்மாராதி பராக்கிரம விருத்தாந்தங்களும் வடமொழிப் பாரதத்துச் சல்லியபர்வத்தின் ௪௪, ௪௫, ௪௬ - ம் அத்தியா யங்களில் யாகாக்கினியை யடைந்த சிவவீரியத்தினின்று கங்கையில் வெளிப்பட்ட கந்தசுவாமியென்பார் தேவர் கட்குச் சேனாதிபதியாகித் தெவ்வனாய தாரகனை முன்பு கோறல்செய் தனேக சைனியமுடைய மகிஷன் முதலிய அசுரரைப் பின்பு நிசாரணஞ் செய்தனரெனப் பெரிதுஞ் சுருங்கிச் சிறிது பேதமாக வருவனபோலச் சைவ புராணத்து ஞானசங்கிதை ௧௬ - வது அத்தியாயத்திலுஞ் சிவ வீரியத்தினின்று கங்கையில் வெளிப்பட்ட கந்த பகவானென்பார் வானோர்க்குச் சேனானியாகிச் சோணித புரத் துறைதருந் தாரன் புதல்வனாய தாரகாசுரனைச் சங் கரித்தனர்: அத்தாரகாசுரன் மக்களே திரிபுரவாசிக ளென வருகின்றன. இவ்வகைய புராணபேதங்கள், குமாரக்கடவுள் பகிர்முகப்பட்ட பிரதமகாலம் அனேக கற்பங்க ளாயினமையா லுண்டாயினவென வூகிப்பதற்கு ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியருந் தென்மொழிக் கந்தபுராண அவையடக்கத்தில் "ஏதி லாக்கற்ப மெண்ணில சென் றன—ஆத லாலிக் கதையு மனந்தமாம்" எனச் சம்மதந் தருபவராயினர். ஆகலின், பல் புராணங்களா லிச்சரி தாதி யெத்திற பேதப்படினு மவைகளைக் கந்தபகவா னின் பிரசன்ன மகிமையாதி திருலீலைகளைச் சால விளக்குநெறியான் ஸ்காந்தமெனப் பெயர்பெற்றுள்ள மஹா புராணத்திற் பிரதிபாதிக்கப் படுகிறபடியே கோடன் மரபாம். இதற்கியைய மேலை அவையடக்கச் செய்யுட்கண் "பேத மாகுமப் பேதத்தினுள்விரித்— தோது காந்தத்தி னுண்மையைக் கூறுவாம்" என்றூரக்

கச்சியப்ப சிவாசாரியரும். அவ்வாசாரியரது திராவிட மொழி பெயர்ப்பென்னும் கந்தபுராண உற்பத்திகாண்டக் *குமாரபுரிப் படலத்தில் ஆயதுகாலையென் றெழும் பாட்டுழை "ஏயென முடிவுசெய்யும் படைக்கலத் திறையை யீந்தான்" எனவும், பின்னர் "மற்றிது நம்பாற் றோன்றும் வான்படை மாயன் வேதாப்—பெற்றுள தன்றி யாரிப் பெரும்படை பரிக்கு நீரார்—முற்றுயி ருண்ணும் வெஞ்சூர் முரட்படை தொலைப்பா னீது—பற்றுதி மைந்த வென்னுப் பராபர னருளிப் போனன்" எனவும் வருங் கூற்றுக்களானே அரி பிரமரும் பெருவிப் படைக்கலத் தரசை யார் தாங்க வல்லார்? தாங்குந் தகைமையுடைக் குமாரனே! வெஞ்சூர் விறற்படைகளை வீட்டுவதற்காக விதனையுன்கரத்திற்கோடியெனப் பரமசிவனார்கொடுத்து மறைந்தாரெனும் பொருளறியப்படும். இவ்விடயத்தில் ஸ்காந்த சம்பவகாண்டத்து ௬௯-ம் அத்தியாயத்துப் ௧௪-ம் சுலோகப்புலம் 'அநுஜக்ராஹஸேநாங்யம் அஸ்த்ரேணஸ் வேநஸங்கர:" எனவரும் வாக்கியங்களானும், "அந்யை ரபிமஹாத்ரைஸ்வை ரௌத்ரபாஸுபதாதிபி:| அந்தர்ஹி தோத்ர பகவா நம்யயாஸஹஸங்கர:||" எனவரும் ௧௨-ம் சுலோகத்தானும் சேனைனிக்குத் தமது சங்கராஸ்திரத் தையும் பாசுபதாஸ்திரம் இரௌத்திராஸ்திர முதலிய

*இக்குமாரபுரியிற் பெற்ற அஸ்திரவிவர பேதமே இங்குக் கூறப்படு தென்மொழி வடமொழியிரண்டிலு முள்ளது. இவ் வஸ்திரங்கட்கு வேறான வேல் முதலிய ஆயுதம் ௧௨ - ம் இவ் வியாசத்து ௬௬ - ம் கடாவிற் குறிப்பிட்ட சம்பவகாண்டத்து ௩எ - ம் அத்தியாயத்திற் போந்துள்ளன. குமாரபிரான் குமாரபுரியை அடைதற்கு முன்னரேயே மாயாபுரியிலே தாரக கிரௌஞ்சரை அவ்வேல்கொடு வதைத்தன னென்பதும் இங்ஙனுணர்ந்துகொள்க.

சிறந்த அஸ்திரங்களையு மீந்து சங்கரர் பார்வதியோடு மறைந்தனரெனு ம் பொருளறியப்படும். இவ்விருதிறப் பொருள்களுள் வடமொழிப் புராணம் புகலுமாறே இவ் வியாசத்து ௬அ-வது கடாவிடைக்கணும் "பரமசிவனிடத் துள்ள பாசுபதாஸ்திரம் இரௌத்திராஸ்திர முதலிய பெற்றுளானும்" என்னுஞ் செய்தி விளக்கப்பட்டிருக் கிறது. ஏனை வித்தியாசங்களும் ஆங்காங்குக் காணக் கிடக்கின்றன.

இவ்வியாசம், வாச்சியார்த்த இலக்ஷியார்த்தங்கள் சகிதம் இகபர சாதகமா யமைந்திருத்தலினாலும், "படிக் கக் கேட்பதனாலேயே கலியுகத்தின தியல்பாம் பாவம் பாற்றிட வல்லதாய கந்தன் புகழ்மையைக் கேண்மின்" எனச் சம்பவகாண்டத்து உ-ம் அத்தியாயத்து ஙு-ம் சுலோகத்திலும், "வேண்டிய பலனை நல்கத்தக்க கந்த னது சரித்திரத்தை நுங்கட் கியம்புவல் ஓ இருடித்தலைவர் காள்! விசுவாசத்தோடு கேண்மின்" என மேலைக்காண் டத்து க-ம் அத்தியாயத்து ௬௬-ம் சுலோகத்திலும் அருத்தமாதலினாலு மிந்நூலை விவேகிகள் பேரன்போடும் படனஞ்செய்யூப் பெரும்பேறுற் றுய்வார்களாக.

நூன்முக முற்றிற்று.

குமரகுருபரன் றிருவடி வாழ்க.

உ

சிவமயம்

ஓம் குமாரபரமேச்வராய நம:

நக - வதாகிய

# ஸ்ரீ சுப்பிரமணிய வியாசம்

கலிநிலைத்துறை

சீருறு சித்திர நவமணி மோலி சிரமேவ
ஏருறு மத்தள வகடது துவள வெலிமேலே
ஆருறு முத்தம *னணனென வருதே வடிபேணிச்
சூரடு சுப்பிர மணியவி யாசஞ் சொலுவேனே.

மறுநாள் தினகரோதயத்திற்

சீடன் ஆசிரியரைப்பரவி யியம்பலுற்றனன்.

எனக் கருமையிலு மருமையாய்ப் பெருமையிலும் பெருமையா யுரிமையொடு வாய்ந்த உத்தமோத்தம விற்பன்ன சுவாமீ! துனியாய வுலகைத்துறந்தேன், நின் னடிக் கடைக்கலம் புகுந்தேன், இனி யென்னைப் பவக் கடல்கடத்தி யாளல் நின்பரமே பரம். ஆகலின், இச் சன்னிதியி லருளியவாறு ஐயந்திரிபற அறநெறியுணர்ந்த தமியேற்கு ஈசுவரோபாசனையைப் பிரசாதித்தருளல் வேண்டும்: நின்னடியே னதனைச் சாதித் துய்யவேண்டு

* அணனென = எனக்கு அண்ணனென்று.

மென் றடிதொழுதனன். அஞ்ஞான்று விவேகபூரணுசாரியர் விளம்பலுற்றனர். அன்ப! நினதெண்ணப்படி முடியவும் எமதெண்ணப்படி யாகவுங் கடாக்ஷித்தருள்பவன் சுப்பிர மணியமெனும் எம்பிரானுகிய தம்பிரானே நின் பிரானுமாம். அவ்வம்பிரானை யுபாசிப்பதற் காறெழுத்தென்னுஞ் சடக்கரமனுவு முண்டு. அதனை விதி ஆளியா யுச்சரிக்கப் பாசநீங்கிப் பரிபூரணம் பிறக்கு மென்றல் சத்தியம். இதில், நின்கருத் தியாதோ? கூறுதி என்றனர். அதுகேட்ட சீடன், பின்வருமாறு கடாவுகின்றனன்—

(க) 1

சீடன்.—சுப்பிரமணியமென்ப தென்ன?

குரு.—ஆதியாயு மனுதியாயுமுள்ள பரம்பொருள்.

(உ) 2

சீடன்.—அது தானே ஸ்காந்தபுராணத்திற் காணப்படுகின்ற அசுர குலாந்தக மூர்த்தி?

குரு.—ஆம். அதுவுமொரு தருணமே.

(ங) 3

சீடன்.—அவர் தந்தை தாயென்பார் யாவர்?

குரு.—பரமேசுரர் பார்வதியாவர். அந்தப்பரமேசுரர் யாரெனின்,— அனந்தங்கோடி கணுதிபர்கட் கதிபரான காலாக்கினிருந்திரரும், பத்திலக்ஷங்கோடி கணுதிபர்கட் கதிபரான ஹாடகேசுர ருத்திரரும், கோடி கோடி கணங்கட் கதிபரான கிருச்மாண்டரும், பத்துக் கோடி கோடி கணங்கட் கதிபரான இரக்தவர்ணரும், ஆயிரங்கோடி கோடி கணங்கட்: கதிபரான கேசராக்ஷ

ரும், எட்டுக் கோடி கோடி கோடி கணங்கட் கதிப ரான வைத்தியுதரும், இலக்ஷங் கோடி கோடி கோடி கணங்கட் கதிபரான விசாகரும், ஆயிரங் கோடி பிரமத கணங்கட் கதிபரான பாரியாத்திரரும், கோடி கோடி கோடி கணங்கட் கதிபரான சருவானனரும், அனேகங் கோடி கணாதிபர்கட் கதிபரான விகுர்தாஸியென்பவரும், இலக்ஷங் கோடி கோடி கணாதிபர்கட் கதிபதியான ஸம்ஹ்றலாதரும், நூறு கோடி கோடி யுருத்திரர்கட் கதி பரான அகண்டரும், கோடி கோடி கணங்கட் கதிப ரான கும்பகரும், நூறு கோடி கணங்கட் கதிபரான மதகரும், ஆயிரங்கோடி கோடி கணங்கட் கதிபரான சந்நாதரும், பத்துக்கோடி கோடி கணங்கட் கதிபரான ஆவேசனியென்பவரும், ஆயிரங்கோடி கணாதிபர்கட் கதிபரான அபவக்திரர் மஹாகேசர் வீரபருவதகரென் பவரும், கணக்கற்ற கணநாதர்கட்குஞ் சந்தானமென்ற கணங்கட்கு மதிபரான பிப்பலர் காகபாதரென்பவரும், ஐந்நூற்றைம்பதுகோடி பிரமதகணங்கட் கதிபரான பஞ்சாக்ஷரும், நூறுகோடி கணங்கட் கதிபரான சதமந் நியுவும், கோடி கோடி பிரதமகணங்கட் கதிபரான மேகபிருத் காஷ்கூடர் சுகேசர் விருஷபர் பலீ என்பவ ரும், எண்ணூறு பிரதமகணங்கட் கதிபரான சதானனர் விசுவரூபர் தாலகேது சுகித்தகர் லோகாந்தகர் சைத்தி ரர் தீப்தாத்மா இலகுளேசுவரரென்பவரும், கோடி கோடி கோடி பிரதமகணங்கட் கதிபரான தைத்தியாந் தகர் மிருத்தியுஜித்து காலஜித்து விஷாதனர் கலி ஜித்து விஷஜித்து பிருங்கிருஷி சூரியவாசி சனிஷ்ட ரென்பவரும், லோகாலோகபருவத வாசியுஞ் சூலங்களைக் கைகளிற்பற்றிய தேவர்கட் கதிபருமான சுவாலாகேச ரும், மகிமைகொண்ட சமதரும், அனேக சைனியங்கட் கதிபரான துந்துபியும், மண்டைமாலைகளைப் பூணுகப்

பூண்ட ஆயிரங்கோடி சைனியங்கட் கதிபரான கபா லீசரும், மதுபிங்கர் நீலர் மஹா பலகணுக்கிரனி யென்ப வரும், புவனுதிபதிகளான பூரணபத்திரர் சதுர்வக்திர ரென்பவரும், தமக்குச் சமானமான அனேக சைனியங் கட் கதிபரும் பிரதமகணங்களின் றளகர்த்தருமான கரணரும், பிரதம கணங்களாற் சூழப்பட்ட பாகுகரும், தேவர்களினும் மேம்பாடுடையவரும் பூமியிலுள்ளவரு மான பத்திலக்ஷ முருத்திரரும், மகாசமுத்திரங்களிலும் ஆகாசத்திலும் சுவர்க்கத்திலும் வசியாநிற்பவரும் கழுத்திற் கறுப்பும் முகத்தின் முக்கண்ணுமுடையவரு மான அனேக ருத்திரரும், பாதாளலோகத்தில் வசிப்ப வரும் நீலகண்டமுடையவருமான எல்லாவுருத்திரரும், பசியநிறஞ் செந்நிறமுடைய வுருத்திரரும், கேசமற்ற வரும் ஜடைத்தலைப் பூதங்களின் றலைவருமான அனேக வுருத்திரரும், மானுடருண்ணு முணவுகளிலுங் குடிக் கின்ற நீர் முதலியவைகளிலும் ஒளிந்திருந்து நாடி முத லியவற்றைப் புரட்டித் துன்பளிக்கும் உருத்திரரும் வைதீக லௌகீகாதி மார்க்கங்களை யனுசரிப்பாரை யிரக்ஷிக்கு முருத்திரரும், காசி பிரயாகையாதி க்ஷேத்ர பரிபாலன வுருத்திரரும், எஞ்ஞான்றுந் திசைகடோறுஞ் சஞ்சரிக்கின்ற வுருத்திரரும், இன்னுமுள்ள பலவகை யுருத்திரரும்,* காளிகள் மோஹினிகள் சாகினிகள் டாகினிகள் யோகினிகள் பைரவிகள் காளராத்திரிகள் முதலிய பெண் கணங்களும், மகாவிஷ்ணுவும், அவரு

---

* இவ்வளவிலுள்ள உருத்திரரையும் கணங்களையும் வட மொழிக் காந்தபுராணத்துச் சம்பவகாண்டத்து ௨0, ௨௧ - ம் அத்தியாயங்களின் கண்ணே காணலாம். இங்ஙனம் தேன் மொழிப்புராணத்திற் பெரும்பாலும் பேதமுண்டு. அனேக நாமங்களும்

டைய தசாவதாரங்களும், பிரத்தியும்ந அநிருத்த சங்கர்ஷண வாசுதேவமென்னுஞ் சதுர்வித விஷ்ணுமூர்த்தங்களும், பிரமாவும், பிரஜாபதிகளும், தேவராசனாகிய மகேந்திரனும், இந்திரன் அக்கினி இயமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானனெனும் அட்டதிக்கு பாலகரும். அச்சுவினிதேவரும், அட்டவசுக்களும், தேவ இருடிகளும், அசுர இருடிகளும், மானுட இருடிகளும், பிதிரர்களும். நாகர் கருடர் யக்ஷர் கந்தருவர் கின்னரர் சித்தர் அசுரர் மானுடர் பிசாசரென்பவரும், ஊர்வசி அரம்பை அலம்புசை கிருதாசி மிசிரகேசி விசுவாசி சுகேசி சுமுசி ஹாசினியாதி கோடி அப்சரஸ்திரீகளும், அவர்களுடைய ஊழியர்களும், பருவதங்கள் வனங்கள் சமுத்திரங்கள் நதிகள் நதங்கள் மிருகங்கள் பக்ஷிகள் ஊருயிர்கள் நீருயிர்கள் கலைகள் காஷ்டைகள் முகூர்த்தங்கள் மாதங்கள் இருதுக்கள் அயனங்கள் வருடங்கள் சூரியாதி கிரகங்கண் முதலியவைகளும். வேதங்கள் ஆகமங்கள் யாகங்கள் தருமங்கள் பிரணவங்கள் ஹூங்காரங்கள் பட்காரங்கள் ஹிங்காரங்கண் முதலியவைகளும் புகழ்ந்து நினைந்து வணங்கித் திருவருளாணையினிற்கு நிரலுணர்ந்தாளு மாண்புடைப் பராபரனுயிருப்பவரும், தம்மா லுண்டாக்கப்பட்ட மஹாவிஷ்ணு வென்பார் தமதிரக்ஷகத்தொழில் செவ்வனே நடவாதுகண்டு வருந்தி அங்ஙன நனிநடக்குமாறு ஸ்காந்த மஹாபுராண சங்கரசங்கிதையின் சிவரகசியகாண்ட யுத்தகாண்டத்து நரு - வது அத்தியாயத்தின் ஙரு - வது சுலோகத்தின் கீழே "மஹா விஷ்ணுவானவர் மேகவுருக்கொண்டு பரமசிவனைச் சுமந்ததுபோல" என வருவண்ணம் மேகவாகன கற்பத்தில் மேகவடிவுகொண்டு திரிநேத்திரதாரியாகிய தம்மைப் பலப்பல யுகங்களாகச் சுமந்து பத்தி செலுத்தியதற்கிரங்கி அவரெண்ணுறுவண்ணம்

அனுக்கிரகித்தவரும், மாகதனென்னு முனிவற்கும் விபூதி யென்னும் அசுரமடவாளுக்கும் புத்திரனாகத் தோன்றிப் பதினாயிரமாண்டு தபஞ்செய்து தம்பாலேற்ற வரவலி யான் மதங்கபுரத் திருந்துகொண்டு அசுரேந்திரன் புத் திரியாய விசித்திரகாமிகையோ டனேக தேவாசுர ஸ்திரீகளையும் மணம்புரிந்து சுரர்கட்குத் துன்புதந்து வந்தவனான கஜமுகாசுரனைக் கணபதியைக்கொண்டு கொல்லுவித்தவரும், தக்ஷப்பிரஜாபதி மகத்தில் வீரபத் திரரைக்கொண்டு விண்டு முதலிய வெல்லாத் தேவர் பராக்கிரமத்தையு மடக்கியாண்டவரும், செந்தாது வெண்டாது கருந்தாதுவெனும் மதில்கள்சூழப்பெற்ற திரி புரத்தைசிரித்தெரித்தவரும்,தேவேந்திரனுடையமமதை யடக்குவான் தமது முகத்தெழுந்த சீற்றக்கனலிற் சனித் துத் திசைக்காவலர்களைச் செயித்து மயனாலமைக் கப்பட்ட ஜலந்தரமெனும் நகருறைந்து பிருந்தையென் பாளை வதுவைசெய்து இருபதினாயிரம் வருடம் போர் தொடுத்தெய்த்த நெடிய விஷ்ணுவினுடைய பெரிய நமற் காரமேற்ற ஜலந்தராசுரனை ஒரு பிரமமுனிபோனின்று காற்பெரு விரல்கொடு நிலத்தில் வலயமாகக் கீறி யுண்டுசெய்த சக்கரத்தாற் பிளந்துகொன்றவரும், மதன வேளையெரித்த சாம்பற்பூழியிற்றானே பார்வதியம்மையா லமைக்கப்பட்ட ஓருருவம், பண்டாசுரனென எழீஇ வந்து அருந்தவமிழைத்துப் பரமசிவனாகிய தம்மிடம் பெற்ற வரவலியானே அரி யய னிந்திரன் முதலிய புத் தேள்களி னிதயத்துண் மறைந்திருந்து அன்னவ ரிந்திரிய மெல்லாமபகரித்துப் புசித்துத் தேவர்களின் வன்மை குறையச் செய்த காலை அவ்விடுக்க ணொழிப்பான் தேவர் முதலிய எழுவகைத் தோற்றத்தையுந் தேவி சமேதராக வெழுந்தருளியிருந்து சருவசங்கார யாகத் திட்டு ஓமஞ்செய்தவரும், அந்த யாகத்தினின்று வரிக்

கரும்புவில், புட்பபாணங்கள், அங்குசம், பாசமென்பவைகளைக் கரங்களிலேந்தித் திரிபுவனத்தொடு வெளிவந்த திரிபுரையெனுஞ் சத்தியைக்கொண்டு அப்பண்டாசுரனை வீட்டுவித்தவரும், அங்ஙனம் அத்திரிபுரையாலுண்டுபண்ணிய திரிபுவனங்களிலும் பிரம விஷ்ணு ருத்திரர்களை அச்சத்தியாற்றானே யுண்டாக்குவித்து முத்தொழிலும் அத்தேவியாலேயே நடக்க அருள் புரிந்தவரும், அத்தேவி, தேவியாகிய பார்வதிதேவியோடைக்கியமாமாறு விரும்பியதற்கு அன்னணம் அனுக்கிரகஞ் செய்தவரும், பிரமசிருட்டியிற் றோன்றிய மகிடாசுரனையும், விஷ்ணு சிருட்டியிற்றோன்றிய வியாக்கிராசுரனையும், பார்வதியம்மையிடந் தோன்றிய துர்க்காதேவியைக் கொண்டு தொலைத்தவரும, அசுரர்களை வதைப்பதற்காக (இந்திரன் விரும்பியபடி) சப்த ருஷிகளால் ஊக்கமின்றி யுஞற்றிய யாககுண்டத்திற் பிறந்து விண்டு முதலிய கடவுளர்க்குத் துயர்தந்த இரக்தாசுரன் இரக்தபீஜாக்ஷன் பஞ்சராவணரென்ற எழுவருள் துர்க்கையைக் கொண்டு முன்னைய விருவரையுங் குண்டோதரனைக் கொண்டு பின்னைய ஐவரையுஞ் சங்கரித்தவரும், இன்னுமெண்ணில் அதிரேகாற்புதம் ஆற்றியவருமான ஸ்ரீகண்டபரமசிவனாராவர்; என்க.

இப்பரமசிவனார், மேன்மிழற்றிய உருத்திரர்கட்குத் தலைவராயிருப்பதுமன்றி ஏகாதசகோடி யுருத்திரர்களு ளொருவருமல்லர். அவ்வேகாதசகோடி யுருத்திரர்களை யுண்டாக்கிய ஏகாதசருத்திரர்களு ளொருவருமல்லர். அவ்வேகாதசகோடி யுருத்திரர்கள், பரமசிவனதுருப் போல மூக்கண்ணுங் காளகண்டமு முடையவுருவர்களே. அவர்களைச்சேர்த்தே தேவர் எண், முப்பத்துமுக்கோடியாம். பிரமாணம்—ஆசுரகாண்டத்து ஏ-வது அத்தியாயத்து சரு, சச - ம் சுலோகங்களிற் "பின்பு சிவ

பிரான் ஏகாதசருத்திரர்களை அவர்கள் உலகத்திற்குப் போம்படி செய்து பதினொருகோடி யுருத்திரரையுந் தேவர்களோடு சேர்த்தனன்" என வருவதாம். தக்ஷ காண்டத்துப் ௬௨ - வது அத்தியாயத்து ௮ - வது சுலோகத்தில் "அவ்வுருத்திரர்கள் அத்தகைய சாரூப்பியத்தை யடைந்திருத்தலினால்" என வருகிறபடி சிவபூஜை யாற் சிவசாரூப்பியம் பெற்ற சிவதொண்டரேயாவர். தொண்டராய இவ்வேகாதசருத்திரர், ஆசுரகாண்டத்து எ - வது அத்தியாயத்து உஎ - முதற்றொடர்ந்துவருஞ் சுலோகங்களின் தாற்பரியப்படி பரமேசுரனை நோக்கித் தவம்புரிந்த பிரமதேவனது புருவமத்தியில் அப்பரமேசுர னாணையால் வெளிப்பட்டு அயனுடைய காரியமாகிய சிருட்டி நடக்குமாறு ஏகாதசகோடி யுருத்திரரை யுண்டாக்கிய மகிமையுடையோர்களே. இவர்களையே அயன் குமாரராகிய வுருத்திரரென்றுபசரித்துரைப்பது. இவருட் சங்கரனென்னும் பெயருடையானுமொருவனுளன். அவன் பரமசங்கரனல்லன். பரமசங்கர நாமந்தரித்த தாசனாவன். சம்பவகாண்டத்து ௫ - வது அத்தியாயத்து ௩௩, ௩௭ - ம் சுலோகங்களில் "ஏகாதசருத்திரர், சூரபதுமனுடைய ஜீவரக்ஷகர்களாகக் காத்து நின்று அவனதரண்மனைக்குள் இரவிலும் விழித்திருந்து மணியடித்துக் கொண்டிருக்கிறார்கள்" என வருதல் காண்க. இவ்வுண்மை யறியாதார், பரமசிவனை ஏகாதசருத்திரரு ளொருவனாய சங்கரனென்றும், பிரமாவின் புத்திரனென்றும் பிதற்றி யிழித்துரைத்துப் பெருநரகடைவர்.

வழுத்திய பரமசிவனானவர், திக்குப்பாலகரு ளொருவராய ஈசான மூர்த்தியோ? எனின், அல்லர். பிரமாணம்—ஆசுரகாண்டத்து ௫ - வது அத்தியாயத்துப் ௬௬, ௧௭ - ம் சுலோகங்களிலே "பின்னர்ச் சூரபதுமன் ஈசா

னனை வெல்லவிரும்பிச் செல்லுங்கால் அவ்வீசானன் மகாதேவனுடைய முக்கண் முதலிய சின்னங்களால் விளங்குகின்றனன் என்பதைக் கேள்வியுற்று உடனே யத்தேவனைவிட்டு'' எனவும், தக்ஷகாண்டத்துப் கஉ-வது அத்தியாயத்துப் கஉ - வது சுலோகத்திற் "பரசிவனார் தந் திருவுருவைக்கொண்ட ஈசானமூர்த்தியைத் திக்குப் பாலகர்களுள் ஒருவராயமைத்து'' எனவும், ௩௩-ம் அத்தியாயத்துப் ௪௩ - ம் சுலோகத்தில் "அஞ்ஞான்று ஏகாதசருத்திரரும் ஈசான தேவனும் பீதி மீக்கொண் டவர்களாய் வேண்டுவார் துன்பு தொலைப்போராய வீர பத்திரரை வணங்க'' எனவும் வருவன காண்க. அன்றியும், சம்பவகாண்டத்து ௫ ம் அத்தியாயத்து உக, ௩0 - ம் சுலோகங்களில் "ஈசானனோவெனின், சூரபதுமன் வேண் டாதபோதும் பல இன்பப்பொருள்களா னுபசரித்துக் கொண்டு நாடோறு மிடைவிடாது அவன் வாயில்காப் போராய தன் கணங்களுடன் சேவை செய்கின்றனன்'' என்பது பெறப்படும். இவ்வீசானரும் சிவபூஜையாற் சிவசாரூப்பியம்பெற்ற ஒரு தொண்டரேயாவர். இப் பசுமையறியாப் பசுக்கள், பரமசிவனைத் திக்குப்பாலகரு ளொருவனென்றுஞ் செப்பிச் சீரழியுங் கண்டாய். நிற்க.

இங்ஙனம் பரமசிவனென்பார், முக்குண முத்தொழில் புரியு மும்மூர்த்திகளு ளொருவராய உருத்திரரோ? எனின்,அல்லர். பிரமாணம்—சம்பவகாண்டத்து உச-வது அத்தியாயத்து உக, ௩0 - ம் சுலோகங்களில் "தயாநிதியாகிய மகா தேவா! இவர் தாம் நினது வடிவுகொண் டவரும் முடிவிற் சருவசகநாசஞ் செய்பவரும் சருவபிர பஞ்சாதார பூதரும் சருவதேவர்க்கும் முதன்மையான வருமாய காலாக்கினிருத்திரர்" என நந்திதேவர், பக வானை உமாபதிக்குக் காட்டினதாகவும், ௩௫ - வது

அத்தியாயத்து ௬௬-வது சுலோகத்திற் "பிரஹ்ம ஸ்வரூபி யான சுப்பிரமணியனுடைய ஆணையின்படி காலாக்கினி ருத்திரன் பிரளயகாலத்திற் சருவசங்காரஞ் செய்பவனு வன்" எனப் பரசிவன், உமாதேவிக் குரைத்ததாக வும், உபதேசகாண்டத்தின் ௭௭ - வது அத்தியாயத்து ௬௭, ௬௮ - ம் சுலோகங்களிற் "சத்தீ! உன்னாற் படைக்கப் பட்ட மூவுலகிலும் பிரம விஷ்ணு மகேசுவரர்களையும் சரசுவதி இலக்குமி அம்பிகை யென்பார்களையு முண் டாக்கி முறைப்படிக்குத் தலைவன் தலைவியாகச் சேர்த் துச் சிருட்டியாதி முத்தொழிலும் புரிவாயாக" எனப் பரமன், திரிபுரைக்குக் கட்டளையிட்டதாகவும், சைவ புராணத்து வாயுசங்கிதையின் பிரமவிட்டுணு வுற்பத்தி அத்தியாயத்தில் "மகேசுவரனிடத் துதித்த பிரம விஷ்ணு ருத்திரராகிய மூவரும் அம்மகேசுரனிடம் பெற்ற வரமாட்சியால் ஒவ்வொருவரும் இரண்டு மூர்த்தி களை மாறி மாறி யொவ்வொருகாலத் துண்டாக்கினர்" என்பதாகவும், ஞானசங்கிதையின் ௭௭ - வது அத்தி யாயத்திற் "சங்காரகாலத் தரிபிரமர்போல வுருத்திரன் மரணமடையாமற் சதாசிவனிடஞ் சேர்வன்" என்பதாக வும், வருதல் காண்க. இவ்வாற்றானே மும்மூர்த்திகளு ளொருவராய *காலாக்கினி ருத்திரரினும் மேம்பட்ட நான்காவது மூர்த்தியாயுள்ளவர் அந்தப் பரமசிவ னென்ப தேற்படுகின்றது. இன்னமும் அதர்வண வேதத்து அதர்வசிகோபநிடதத்திற் "பிரம விஷ்ணு ருத் திரர்கள் காரணராகமாட்டார்கள். இவர்களை யுண்டு

---

* காலாக்கினி ருத்திரப் பெயரினரே மும்மூர்த்திகளு ளொருவரென்று நிச்சயிக்கும் பிரமாணங்கள் பலவற்றையும் இந்நூலாசிரியரது திருப்பாவுரையாகிய தீட்பத்திலே நன்கறிய லாம்.

பண்ணி யொடுக்குஞ் சம்புவே காரணர்" எனவும், இராமதாபிநி உபநிடதத்தில் "நான்காவது தெய்வம் சிவம் எனவும் வருதலின், உபதேசகாண்டத்தின் உ௩-வது அத்தியாயத்து உ, ௩ ம் சுலோகங்களில் வருமாறு "சிவன், பசுபதி, சம்பு, சங்கரன், சந்திரசேகரன், மிருத்தியுஞ்சயன், விரூபாக்ஷன், நீலகண்டன், பரமேசுவரன், பவன், பர்க்கன், மஹாதேவன், ஹரன், உருத்திரன், உமாபதி" என்னு நாமங்களையுடைய மகாருத்திரராகிய உமாபதியென்ப தேற்படுதலின் அச்சிவன், மும்மூர்த்திகட்கும் மேலாயநான்காவது மூர்த்தியேயாகின்றூர். யஜுர்வேதத்துக் கைவல்லியோபநிடதத்தில் (உமா ஸஹாயம் பரமேச்வரம்) "உமாபதியே பரமேசுரன்" என்பதும், யோக தத்துவோபநிடதத்தில் மும்மூர்த்திகட்கும் மேலாக மகேசுவர சதாசிவரெனு மிரண்டு மூர்த்திகளுளரென்பதுஞ் சொல்லப்படும். இன்னணம் எண்ணில் பிரமாணமுள. இந்நிச்சயமறியாதார், பரமேசுவரனை மூவருளொருவனென்னு மூடங்கொண்டுழல்வர்.

இங்ஙனம், மும்மூர்த்திகளும் நான்காவது மூர்த்தியின் அமிசமாவாரோ? எனின்.—பொறகட்டியில் வெட்டப்பட்ட பொடி பொன்னயிருப்பதுபோல வவர்களுமிருத்தல்வேண்டும். அற்றேல், அவர்களை வேதம் நகாரணமென்று கூறுது: பிரம விஷ்ணுக்களுக்கும் பல துன்பமும் மயக்கமுஞ் சம்பவிக்கா. அவ்வாறு சம்பவித்த சரிதம் பல காணப்படுதலின், மூவரும் ஆன்மாக்களேயாவர். பிரமாணம்—தக்ஷகாண்டத்தின் ௪-வது அத்தியாயத்து உ௪, ௩0, ௩௪-ம் சுலோகங்களிற் "பிரமையினற் புத்தி பேதுற்று விஷ்ணு முதலிய வெங்களைச் சகதீசனுக்குச் சமானமாக எவனுரைக்கின்றானே அம்மகாபாதகன் அருநரகே யனுபவிப்பான் : எங்களை அந்தப் பரமேசுரனுக்கடியரென்றே யுரைக்கின்ற ஏனையோர்பால்

யாங்கள் பெருநேயமே பாராட்டுகின்றோம் : மகேசுவர னை சம்புவே பதி: யாங்கள் பசுக்களே'' எனவும், இலிங்க புராண உத்தரகாண்டத்தின் அ-வது பதிபசுபாச முரைத்த அத்தியாயத்து ௪-வது கவியில் ''மலரயன்மால் முதலாக மலர்பொதுளூந் தருவீருய் வாய்த்து நின்ற—நிலைபெறுபல்லுயிர்பரவும் பசுவாகி'' எனவும், பஸ்மஜாபாலோபநிஷத் ''காசி க்ஷேத்திரத்தின் கீழ்த்திசையிற் பிரம னுந் தென்றிசையில் விஷ்ணுவும் வேதவிதிப்படி யுபாசிக் கின்ற பரமசிவன்'' எனவும் அதர்வசிகை யெனு முபநிஷத்திற் ''சம்புவைத் தியானிப்போனாகிய வுருத்திரன்'' என வும் உபதேசகாண்டத்து எசு - ம் அத்தியாயத்து ௬௪ - ம் சுலோகத்திற் ''பின்பு பிரம விஷ்ணு ருத்திரரான அம்மூவ ரும் அம்மகேசுரனைப் பூசித்து மகாபோகங்களை யனுப வித்து வெவ்வேருய் சிருட்டி திதி சங்கார நடாத்திவரு கின்றனர்'' எனவும் வருமாறு காண்க ஆயின்,

பரமனிடமிருந்து மூவரும் அமிசமாகத் தோன்றின ரென்பதாகச் சின்னூல்க ளுணர்த்துமா றெவன்? எனின், — அது, சங்காரகாலத்தில் மகேசுவரருடைய அருட்சத் தியி லொடுங்கிநின்று சிருட்டி காலத்தில் ஈசுவரனுடைய இடது பக்கத்தில் விஷ்ணுவும், வலதுபக்கத்திற் பிரம னும், இதயத்தில் உருத்திரனுமாகத் தோன்றலையே அப் படியதிர்த்த லெனவாம். அன்னோர் தொழில்கட்குரிய மகேசுவர ரருட்சத்தி யமிசம் அவரிடம் பதிதலின், அங் ஙனமவரை மகேசுவராமிச ரென்று முபசரித்துரைக்க லாம். சிவலிங்கந் திரிமூர்த்தி சொரூபமென நூல்க ளுவலுமா றென்னை? எனின்,—அது, முப்பிரணவ முத் தொழில்கட்குரிய மூவரையுந் தன்னுருவி லடக்கிக் கொண்டு ஏகாகார வியாபகமாயுள்ளது அச்சிவலிங்க மெனவாம்.

மூவரிலொருவராய காலாக்கினிருத்திரர், பிரம விஷ்ணுக்கள் தொழில்களையு மொடுக்குகின்ற சங்காரத் தொழிலை யுடையவராகலின், அவ்விருவர்க்கு முதன்மைச் சூரேயாவர். அவ்விருவருளொருவரை முதன்மைச்சூரராக மொழியக்கூடாதோ? எனின்,— அங்ஙன மவர் பக்ஷஞ் சங்காரத்தொழில் சொல்லவேண்டும். சொல்லிற் பிரமன் விஷ்ணுவெனு நாமங்களால் அவர் விளங்காமல் உருத்திர ரென்னு நாமத்தால் விளங்குபவராவர். அன்னணஞ் சுருதியின்று. விஷ்ணு 'ஹரி' என்னு நாமத்தாற் சங்கார கர்த்தாவாக விளங்கலாமேயெனின், அனேக அரக்கர் முதலியோரை அவரும் அவரவதார மூர்த்திகளுஞ் சங்கார தேவனருளாற் சங்கரித்திருத்தலின், அவர்க்கப் பெயர் வந்ததெனலாம். அந்தநாமம், வேதாகமபுராணாதி களில், முடிவுத்தொழின் மூர்த்திக்குச் சொந்தமாக வேற் பட்டுள்ள "ருத்ர" நாமம் போன்றதன்று. உருத்திரன் சங்காரகர்த்தாவென்பது, வேதாகமாதிகள் சம்மதமாக உலகெலாம் பிரசித்தி பெற்ற பெருந்தொனி. ஈண்டு அவ்வுருத்திரன், ஹரி நீங்கலாக ஏனையோரைச் சங் கரிப்பனென் றொருவன் பேசத்துணிந்தால், அங்ஙன மிருவரிருத்தலின், சங்கார மின்றெனவாம். அவ்வுருத் திரனையும் ஹரியே சங்கரித்துத் தனியிருப்பனென் னின், முன்னே விளக்கியவண்ணஞ் சங்காரத்தொழிற் குரிய ருத்ர சப்தத்தாலேயே அவர் விளங்குவதோடு மகாருத்திரனு மாகவேண்டும். அற்றேல், அந்த வுருத்தி ரனது சங்காரத்திற் குரிய நெற்றிக்கண் முதலிய விசேட அங்கங்கள் அந்த அரிக்கு மிருக்கவேண்டும்: முடிவி லிருப்பும் மசான மாகவேண்டும்: மதமும் உருத்திரமத மாகவேண்டும். இல்லையெனின், வீண் கோடணை யென வாம்.

ஆகலின், சிருஷ்டிக்கும் இரக்ஷகத்திற்கும் மேலாய சங்காரகிருத்திய காலாக்கினிருத்திரர், பிரம விஷ்ணுக்

கட்கும் பெரியவராவ ரென்றல் சரதம். இவர் சத்தி-உருத்திராணியாவள். இவர் கிருத்தியம், பிரளய காலத்தி னடக்கத்தக்கது. இவரைப் பிரளய கால ருத்திரனென்றும், சங்கார கால ருத்திரனென்றுஞ் சொல்லலாம். இவரைத் திசைக்காவலரு ளொருவனுய காலனென்னு நமனென்றும், அக்கினி தேவனென்றுஞ் சிலர் அபிப்பிராயப்படுதல் அறியாமை யெனற்குப் பார்வதி தேவி கலியாண மகோற்சவக் காட்சிக் கெழுந்தருளிய சருவ தேவர்களுள், சம்பவகாண் டத்தின் கக-ம் அத்தியாயத்து ௬௪-ம் சுலோகத் தில் நமன் அக்கினி தேவனென்பார் வேறுகவும், ௨௦-ம் அத்தியாயத்து ௬-ம் சுலோகத்திற் காலாக்கினி ருத் திரர் வேறுகவுங் காணப்படல் போதிய கரியாம். இவ ரைப்பற்றிக் காலாக்னிருத்ரோபநிஷத்துங் கழறும். இவ் வுருத்திரர், தம்முடைய கணங்களுடன் பிரமாண்டத் தைக் காவல்கொண்டிருக்கிறூர். அதனுனே இவருக்கும் பிரமவிஷ்ணுக்கட்கும் நெருங்கிய சம்பாஷணை சரிதாதி கள் புராணுதிகளிற் காணப்படவில்லை யெனலாம். உபதேசகாண்டத்து எச-ம் அத்தியாயத்து ருக-ம் சுலோகத்திற் "சிவனுக்குரிய நாமம் சின்னம் செய லென்பன உருத்திரற்கு மேற்பட்டிருக்கின்றன" என வும் ௫௩-ம் சுலோகத்தில் "நாமேயுருத்திரன் உருத் திரனேநாம்: எங்களிருவர்க்கும் பேதமின்று" எனச் சிவனுரருளினரெனவும் வருதலின், இவர், சிவ அருளங் கிசம் பதிந்து விளங்குபவரெனவும், சிவனுர் உருத்திர சப்தத்தானும் விளங்குபவரெனவு மறியலாம்.

ஆகவே, யோகதத்வோபநிஷத்திற்—பிருதிவிக்குப் பிர மன், அப்புவுக்கு விஷ்ணு, தேயுவுக்கு உருத்திரன் தெய்வமென வருமாறு, மண் தண்ணீரிலும், தண்ணீர் தீயிலு மொடுங்குமொழுங்காகப் பிரமன் விஷ்ணுவினிட

மொடுங்கியபின், விஷ்ணுவை யுருத்திரன் வாயிலாக வொடுக்கி, அவ்ருத்திரனைத் தமது வியாபகத்துக்கு ணிறுத்தி, மாயா பந்தநாச மயானத்தில் மகாருத்திரராகத் தனியிருப்பவரும், ஒடுங்கிய விடத்தே யுதிப்புமென்னும் ஆளியாக மீண்டுந் தமதருள் வலியான் அம்மூவரையும் வெளிப்படுத்தி அவருள், பிரமவிஷ்ணுக்களைப் பிரகிருதி காரியசிருஷ்டி திதிகளிலேவித் தாம் காலாக்கினி ருத்திரரை அதிஷ்டித்துக்கொண்டு பிரகிருதிகாரிய முத்தொழின் முதல்வராயிருந்தாள்பவரும் அந்தச் சிவனுரே. ஆளுஞான்று, இனி நடக்கவிருக்கின்ற சங்காரத்தொழி னீங்கலாக மற்றவிரண்டு தொழிலு நடத்தலினிகழுந் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனங்கட்கு அவரே பிரதான விறைவராகக் கைலாசவாசியெனவிருத்தலின், அவ்விருதொழின் மூர்த்திகளாய பிரம விஷ்ணுக்கள் சரித்திரங்களோடவர் சரித்திரமும் விளங்கி நிற்கின்றது. அவ்வளவிற்றுனே அவ்விருவரோடு மஹாதேவனையுஞ் சமப்படுத்திச் சிலர் சொல்லத்துணிந்தனர். அது, விவரித்த நியாயவாயிலாகச் செல்லாதொழிவதையும், பார்வதிபதியாகிய மஹாருத்திரர், முக்குணமூவரின் மேலாந்தெய்வ மென்பதையும், இம்மூவரும் இவர்மேற் சொல்லப்படுகிற மஹேசுர சதாசிவரென்னும் இரண்டு மூர்த்திகளும், அமூர்த்தவத்துவாகிய பிரமமும் சிவசத்தத்திலடங்கலின் எல்லாஞ் சிவமயமென்பதையும் நீ நன்குணர்வாயாக.

(ச) 4

சீட.—நன்று. அந்த ஈசுவர சிருஷ்டியிற் றேன்றிய ஈசுவர சூநுவை எவ்வாறு பரம்பொருளென்னலாம்?

தரு.—சிருஷ்டியன்று. பரப்பிரமமே அப்படி விளங்குகின்றது பிரமாணம்—சம்பவகாண்டத்தின் உக-வது அத்தியாயத்து க-வது பிரவசனம்—

இதிஸச்சிதைசமமிதம்வசசாம் மசஸாமகோசரமநந்தஸுகம்!
சிசுபாவமேத்யஸமலங்க்ருதிமத் ஸமலஞ்சகாரசிவயோஸ்
ஸவிதம்!!

"அநந்தாநந்த சச்சித் பரப்பிரமமானது, இவ்வாறு மிக அலங்காரமான ஒரு குழந்தைத்தன்மைவகித்துப் பார்வதிபரமேசுவரர் அருகினின்று விளையாடி யலங்கரிப்பதாயிற்று" என நிகழ்தல் காண்க.

(ரு) 5

சீட.—யாதொருபொருளைப் பகுதி பண்ணில் அப்பொருள் சிறுத்திடுவதொப்பப் பகவான் பகுபடுவரேல் அவருஞ் சிறுத்திடுவரே. ஆயின், எவ்வாற்று ளைவ்வும்?

குரு.—கேட்டி. யாதொருபொருள், நீளம் அகலம் கனமென்னு மூன்றிலக்கணத்தோடு ஏகாகாரமாயிருப்பது போல, வாக்குமனாதீதமாகிய பரமசிவமும் சத்து சித்து ஆனந்தமென்னு மூன்றிலக்கணத்தோடு ஏகாகாரமாக அனாதியாயிருக்கின்றது. நீளம் அகலம் கனமென்னு மூன்றுளொன்றைப் பிரத்தியேகப்படுத்தற் கெப்படியிசையாதோ, அப்படியே சத்து சித்து ஆனந்தமென்னு மூன்றுளொன்றைப் பிரத்தியேகப்படுத்தற்கெத்துணையு மிசையாது. அந்நீளம் அகலம் கனமெனு மூன்றும் எப்பொருளிலுங் *காணப்படுமாறு சத்து சித்து ஆனந்த

* காணப்படுதலால் இதனை, உவமானப் பிரமமென்றே கூறல்வேண்டும். இப்படி பாவரே காட்டினர்! இஃதிங்ஙனமாக; இவ்வுவமான வுவமேயங்களையும், ஆசங்கை நிவர்த்திகளையும், பின்னர்க் கூறியுள்ள அரன்மகன் முதலிய நாமார்த்தங்களையும், பழநிமலை வரலாற்றையும் ஈ. இரத்தினவேலு முதலியார் தமது சிறப்புப்பெயரகராதியிலே சொற்பிரயோகமும் விடயமும் இருந்தபடியேயிருக்க, சிறுவரை திரித்து

மெனு மூன்றுஞ் சருவான்மாக்களிலும் பிரிவறவுள. இம் மூன்றும் மூர்த்தசத்தம்பொருந்திய அனைத்திற்கும் அதீத மாய அமூர்த்தமாகும். அங்ஙனம், சத்து நித்திய பரமாத்துமாவான சிவமும், சித்து ஞானமாகிய சிவசத்தியும், ஆனந்தம் சிவசுப்பிரமணியமுமெனவாம். இம் மூன்றுமே மூர்த்தநிலையிற் சிவன், உமை, குமாரனென விளங்காநிற்கின்றன. இந்தக்குமாரனை இலைமறை காய் போல மறைந்திருந்து வந்தவனெனக்கோடல்வேண்டும். மூர்த்தநிலையிற் பிரிவில்லையோ? எனின், —ஆன்மாக்களின் பார்வைக்குமட்டும் பிரிவுபோறறோற்றுவதன்றி, உண்மையில் அது ஏகவத்துவாகவே யிருக்குமென்க. அற்றேல், குமாரனை அமிசமெனவும் புராணங்கள் சில ஞாங்கர்களிற் புகறலென்? எனின்,—சச்சிதாநந்த லக்ஷணத்தில் ஆநந்தத்தைச் சொல்லளவிற் போலியாகப் பிரித்துப் பேசுவதேய்ப்ப அதுவுமாமென்க.

---

வரைந்துள்ளார். இந்நூலாசிரியரது வேதவியாசத்திலுள்ள பிள்ளையார் சுழிப்பொருட் பிரயோகங்களும் அவ்வகராதியில் வரையப்பட்டுள. நல்லொழுக்கமும் வாய்மையுமுடைய முதலியார், மேலே குறிப்பிட்டுள்ளவைகள் இன்ன இன்ன புத்தகங்களிலுள்ளனவெனக் குறிப்பிடாமை யாது கருதியென்பது புலப்படவில்லை. இவ்வியாசத்தின் முதற்பதிப்பு 1899-ம் வருடத்தும், வேதவியாசம் 1903-ம் வருடத்தும் அச்சிடப்பட்டவைகளாதலானும், மேற்படி அகராதி 1908-ம் வருடம் அச்சிடப்பட்டதாதலானும் உரைத்த உண்மை தெரிந்துகொள்ளலாம். வேறொருவரும் திருவாசகப் பதிபபு முகப்பிலே பிள்ளையார் சுழிப்பொருட் பிரயோகங்களை யெடுத்து வரைந்துகொண்டவராயினர். வேதவியாசத்துள்ள மகாவாக்கியார்த்தம் முதலியவற்றைச் சித்தாந்தமெனும் பத்திரிகை யெழுதுவோரும் அப்பத்திரிகையில் வரைந்துகொண்டனரால்.

ஐந்துமுக சதாசிவ மூர்த்திதான் ஆறுமுக குமார னெனவுங் கோடல்வேண்டும். இதற்கிசையவே "சதா சிவோம்" என்றுசாற்றிய வேதம் "ஸுப்ரஹ்மண்யோம்" எனவுஞ் சொல்லிற்று. இம்முடிபைத் தானே சம்பவ காண்டத்தின் ௩௪-ம் அத்தியாயத்து ௨௪-௩0-ம் சுலோகங் களில் "வேதத்தில் ஸுப்ரஹ்மண்யோம் என்றுள்ளபடி நீயும், ஸதாசிவோம் என்றுள்ளபடி யானுமே அந்தப் பிரணவப் பொருளாகின்றோம். இப்படி அறிபவர்களெவர்களோ, அவர்கள் நமக்குச்சமானமாகிறார்கள்" என்று குமாரன் முன்னிலையிற் பரசிவன் பகர்ந்ததாகவும், காஞ்சிப்புராணத்தில் —

"எக்கலைக்கும் பூதங்களெவற்றினுக்கும்
பிரமனுக்கு மீச னென்னத்
தக்கமுதல் பரப்பிரமஞ் சதாசிவனே
மெனவேதஞ் சாற்று மல்லான்
முக்கனல்சூழ் வேள்வியிற்சுப் பிரமணிய
னேமெனவு மூக்காற் கூறும்
இக்கருத்தை யறியானை யெவ்வாறு
விடுவிப்ப தியம்பு மின்றே"

என்று தேவர் முன்னிலையிற் பரசிவ னருளியதாகவும் வருமுண்மை காண்க. அன்றியும், சுசீந்திரத்தலபுராணம் வேள்விமலைச்சருக்கத்தில் "ஏர கம்மெனும் வேள்வியங் கிரியது விதன்பாற்—சூர கந்தனை வேல்கொடு குடைந் தவோர் தோன்றல்—கார கம்பெறு கறுங்குழல் வல்லி யைக் கலந்தே—சீர கம்பெற நின்றன னவன்சதா சிவனே" எனப் பரமசிவன் நான்முக வடிவாக நின் றுரைத்ததாக வருவதுமறிக. சதாசிவ மூர்த்தியின் அமூர்த்த நிலையாகிய சச்சிதானந்தப்பிரமமும் அக்குமார னெனற்கு "முருகன் விசுவரூபமுடையவனும்" எனப்

பரமசிவன் சொல்லியதாகவுள்ள சம்பவகாண்டத்துக-கு-ம் அத்தியாயத்துப் கஎ-ம் சுலோகத்திற்ருனே "விசுவங்கட் கதிகப்பட்டவனு மாகின்ருன்" என வருவதூஉம், கரு-ம் சுலோகத்தில் "வேதவேதாந்தங்களில் தகராகாசமானது குஹையெனப்படுதலிற் சருவப் பிராணிகளின் இதய கமலங்களிலு மிருக்கின்றவன் உன்மகன். அதனைற் குஹனெனு நாமத்தால் விளங்குகின்ருன்" என வருவதூஉம், பழநித்தலபுராணத்துச் சிவகிரி சத்திகிரிச் சருக்கத்திற் குமாரனைக்குறித்து "எவர்க்கு மோர்முதலெவனவ னீயென வியம்பித்—துவர்ச்ச டாடவித் தொன்மையோன் சுரரயன் றுளவோன்—தவத்தர் சூழ்தரக் கயிலையந் தடங்கிரி சார்ந்தான்—கவர்த்த பன்முடிச் சிலம்பு சேய் காணிகொண் டிருந்தான்" எனவரு கவியும் போந்த சான்றென்க. இன்னணம் அனேகநூற் பிரமாணமுண்டு. இத்தகைய பிரமாணங்களாற் சிவஞான சித்தியார் உ-ம் சூத்திரத்து எரு-வது செய்யுளில் "எத்திற நின்ருனீச னத்திறமவளு நிற்பள்" என்றருளிச் செய்த வண்ணம் அமூர்த்த சத்தாகிய சிவத்தொடு தாதான்மியமாய்ப் பிரிவின்றி நிற்கிற சித்தாகிய சிவசத்தி, சீவர்களை யிரக்ஷிக்கும் பொருட்டு அச்சிவம் தனது தொழிற் சத்திகளை உடம்பினுள்ளே பதிய வைத்துச் சதாசிவன் மகேசுரன் உருத்திரன் என நிற்கும்போது தானும் மனேன்மனி, மகேசுவரி, உருத்திராணியென நிற்குமாறு போல அவ்வமூர்த்த சத்து சித்தொடு அபின்னமாயுள்ள சிவானந்தமும் மூர்த்த நிலையிலுள்ள சிவன் சத்தி யென்பவர்கட்குக் குமாரனென்னு மூர்த்தியாய் நின்று கொண்டிருக்கும். அதனனே அக்குமாரன், அதீத சிவமும், மூர்த்த சிரேட்ட மகத்துவ மகேசுரனும், உருத்திரனுமாக விளங்கி யிருப்பானெனவு மறி. இதற்குச் சான்ருக

யுத்தகாண்டத்து ௩௩-ம் அத்தியாயத்தின் உக-ம் சுலோகத்தில் வரும் வாக்கியங்களில் "சச்சிதாநந்த பரமாத்ம மூர்த்தியாகிய குஹன்" என வருவதுங் காண்க.

(௬) 6

சீட.—அவ்வாறிருப்பினும் பஞ்சமுகேச்சுரனாகிய பரமசிவனையே பெரியபொருளெனக்கொண்டா லென்னை?

குரு.—அப்படிப் பிரித்துப் பெரிது சிறிது கூறுவதிற் பெரும் பீடையே கதியாக வரும். இதுபற்றிப் பூருவச் சரித்திரமொன்று கூறுதுங் கேட்டி. துவாபரயுகத்திற் சம்புகுத்தன் மாகுத்தனென்னு மிருவர், உருத்திரகோடி மலையி னெடுங்காலந் தவமிழைத்தனர். அஞ்ஞான்றொருநாள் முன்னோனாகிய சம்புகுத்தன் சிவம் பெரிதென்றான். பின்னோனாகிய மாகுத்தன் சத்தி பெரிதென்றான். அங்ஙனம் இருவர்க்கு முண்டாய வாதத்தை, நிவர்த்திக்கு நிமித்தம் இருவருஞ் சில முனிவர்முன் போந்து அது தெரிவித்துக்கொண்டனர். அம்முனிவர்கள் பிரித்துரைப்பது அரிதெனப் பீதி கொளலும் இருவர்க்கு முண்டாய கலாமடங்காமல் அவர், இனியிதற்குப் பரமசிவனே சாக்ஷியெனக் கழுக்குன்றிலுள்ள வேதகிரீசுரர் சன்னிதி குறுகி விண்ணப்பித்தனர். ஆண்டு அப்பெருமானார் பிரசன்னமாகி "நீவிர்! வீண் வாதிடுகின்றீர், சிவம் சத்தியெனு மிரண்டுமொன்றே பேதமின்றென்று" அறைந்தனர். அதுகேட்ட பின்னரும் பின்னோன் எப்படியுஞ் சத்தியே பெரிதென்றான். முன்னோன் எப்படியுஞ் சிவமே பெரிதென்றான். அங்ஙனம் பொன்னும் பணியும் போலத் தாதான்மியமா யிருக்கின்ற தங்களைப் பேதப்படுத்திப் பேசுமவ்விருவரையு நோக்கிச் சிவம் பெரிதென்றவனை நீ

கழுகாகுகவெனப் பரமசிவனுர் சபித்தார். சத்தி பெரி தென்றவனை நீயுங் கழுகாகுகவெனப் பார்வதியார் சபித்தார். அவ்விதமே யிருவருங் கழுகுகளாகி யுண் ணடுங்கி யுருமுற்றுச் சுவாமீ! அடியேங்கள் தப்பைப் பொறுத்தருளல் வேண்டுமென் றனேகந் துதிசெய்த தன்மேல் "இந்த யுகாந்தத்தில் நுங்கட் கனுக்கிரகம் புரிவாம். அதுகாறும் இத்தலமிருந்து தவம்புரிதிர்" எனப் பரமனும் பார்வதியுந் திருவாய்மலர்ந்தருளினர். அவ்வாறே யிருவருந் தவஞ்செய்து கொண்டிருந்து நற்கதிபுக்கனர். அக்கழுகுகள் இக்காற் கழுக்குன்றி லிருக்குங் கழுகுகள் அல்ல.

அன்பின்மிக்கோய்! இச்சரிதத்திலுள்ள சம்புகுத் தன் மாகுத்தனிருவருஞ் சத்துஞ் சித்துமான சிவத் தையுஞ் சத்தியையும் பிரித்துப் பெரிது சிறிது பேசிப் பெரும்பீழை யடைந்தார். அவரொப்ப நீயும் அச்சத் துச் சித்தொடு தாதான்மியமாயுள்ள ஆனந்தமான குமாரனைப் பிரித்துப் பெரிது சிறிது பேசிச் சிவாபராதி யாக வேண்டாம்.

சச்சிதானந்தப்பொருள் சிவமெனுஞ் சொல்லிலடங் கலின், அப்பொருளை வழிபடுநெறி சிவமதமேயாம். அதன் முடிவு சித்தாந்தமெனவாம். இதனலன்றே யுத்த காண்டத்தின் கரு-ம் அத்தியாயத்து உஎ, உஅ-ம் சுலோகங்களிற் "காங்கேயன் கார்த்திகேயன் முதலிய திரு நாமங்கட்கெல்லாம் பரமேசன்றான் பொருளென் பது சிறந்த முனிவர் கொள்கையன்றி வேறின்று; கேவலம் மடமேவோர்தாம் பேதம் பேசுவர்" என இரணிய னென்பான் தன் தந்தையாய சூரபன்மனுக்குச் சொல் லினனென்பதைக் காண்கின்றேம். ஆகலின், உயர்வு கொண்டு சிவனுக்கொரு மதமும், தேவிக்கொரு மத

மும், குமாரற்கொரு மதமுந் தனித்தனி பேசத் துணி வதும் பேத தோடமென்றுணர்க. அன்றி, அனேகே சுர வாதமுமாகும்.

(எ) 7

சீடன்.— தெய்வநிச்சயமின்றித் தெய்வம் வழிபடல் பயன்படாதெனப் பெரியோர் பேசும்வண்ணம் யான் கேட்பன கேட்டுத் தெளிவன தெளியக் கடமைப்பட் டிருக்கிறேன் : உறு சந்தேகங்களை யொழித்தருளல் வேண்டும். கூறுவல்— அந்தப் பரம்பொருள், உமா பதிக்குக் குமாரனை யெதற்காக வந்தது? வந்தது மெவ்விதம்?

குரு.— அசுரேசனென்பானுக்கும் மங்களகேசினிக்கும் பிறந்த சுரசையாகிய மாயையென்பாள், சுக்கிராசாரியன் மந்திரோபதேச பலத்தால் காசியபமுனிவரை அழ குடைத் தேவஸ்திரீயான தன்பேரில் மோஹிக்கும்படி செய்து ஓரிரவிலே தேவரூபங்கொண்ட அவரைக் கூடி முதல் யாமத்தில் அழகிய சூரபன்மனைப் பெற்றாள். அஞ் ஞான் றுண்டாய வியர்வையினின்று முப்பதினாயிரம் வெள்ளம் அசுரர் பிறந்தனர். பின்பு மாயை பெண் சிங்க மும் காசியபர் ஆண் சிங்கமுமாய் இரண்டாம் யாமத்திற் கூடியபோது சிங்கமுக னுதித்தான். அஞ்ஞான் றுண் டாய வியர்வையினின்று சிங்கமுகமுள்ள நாற்பதினா யிரம் வெள்ளம் அவுணர் பிறந்தனர். மூன்றாம் யாமத் தில் மாயை பெண் யானையும் காசியபர் ஆண் யானையு மாகக் கூடியபோது யானைமுகத்துத் தாரகன் பிறந்தான். அஞ்ஞான் றுண்டாய வியர்வையினின்று யானைமுக முள்ள நாற்பதினாயிரம் வெள்ளம் அவுணர் பிறந்தனர். நான்காம் யாமத்தில் மாயை ஆடும் காசியபர் அக் கடாவுமாகக் கூடியபோது அஜாமுகி பிறந்தாள். அஞ்

ஞான் றுண்டாய வியர்வையினின்று முப்பதிறுயிரம் வெள்ளந் தகுவர் தோன்றினர். விடியற்காலத்தில் மாயை, யாளி புலி குதிரை மான் பசு கரடி பன்றி காட்டெருமை செந்நாய் காண்டாமிருகம் கழுதை ஒட்டகம் குரங்கு நரி முதலிய வுருவங்களாக, காசி யபர் அவ்வவ் வுருக்கொண்டு கூடலும் அவ்வம் முகங்க ளுள்ள அறுபதிறுயிரம் வெள்ளம் அவுணர் தோன் றினர். இன்னணந் தோன்றிய *இரண்டிலக்ஷம் வெள்ளம் அசுரக்கூட்டங்கள் சூழ்தர முன்னவனுகிய சூரபன்மன் ஏனைய சிங்கமுகன் தாரகனென்பவர்கள் மாயையி னுபதேசப்படி பரமசிவனை நோக்கி முன் னர்ப் பதிறுயிரமாண்டும் பின்னராயிரமாண்டுஞ் செயற்கரிய வீரயாகஞ்செய்து தரிசிக்கப்பெற்ற பரமனிடம் சூரபன்மன் ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டுகம் ஆளு மாயுளும், இந்திரலோக விமா னமும், சிங்கவாகனமும், பிரபல தேவதாஸ்திரங் களும், வச்சிரதேகமும், யாக குண்டத்தினின் றுண் டாய பல அசுரரோடு பதிறுயிரங்கோடி சங்கியை கொண்ட சதுரங்க பல சைனியங்களும் வாங்கித் தன் குலகுருவாகிய சுக்கிராசாரியனது போதகம் போல வடதிசை முதல் வடமேற்றிசை யந்தம் எண் டிசையுந் திக்கு விஜயஞ்செய்து பாதலம்புக்கு நாக லோகத்தை வசமாக்கிப் பூலோகம் வந்து பற்பல தீவு கட்குஞ் சென்று வந்ததன்மேல் முன்னந் தக்கன் யாகத்தில் நந்திதேவரிட்ட சாபம் நிறைவேறுமாருகத் திருப்பாற் கடலையடைந்து விஷ்ணுவை வெற்றி

---

* "மிகுதிகொண்டிடு மிரண்டுநூருயிரவெள்ளம்" எனத் தென்மொழிக் கந்தபுராணத்திலும், "இரண்டுலக்ஷம் (சேனை) சைனியம்" என வடமொழிக் காந்தபுராணத்திலும் வருகின்றன.

கொண்டு, சக்கிரவாளகிரிக்குச் சென்றங்குள்ள விஞ்ஞை தங்கள் கண்டு, திக்குப்பாலகரு ளொருவனை இந்திரனுக்கு மேலாகச் சொல்லப்படு மஹேந்திரனுடைய சுவர்க்கலோகம்புக்கு அதனை வயப்படுத்தி, மஹா லோகம்புக்கு அங்குள்ள இருடிகளாற்போற்றெடுக்க உவந்து, மேற்சனலோக தபோலோகங்களையுந் தன் வயமாக்கி, சத்தியலோகம்புக்கு அங்குள்ள பிரஜாபதிகளாலும் பிரமதேவனாலுங் கொண்டாடப்பெற்று, விட்டுணுலோகம் புக்குநின்று அதனையும் வயப்படுத்தி, உருத்திர லோகத்தில் உருத்திரனைத் தரிசித்து, உருத்திரர்களாற் காக்கப்படுவனவுந் தனதாளுகைக் குரியனவுமாய மற்றவண்டங்களுக்கும் போந்து, மீண்டும் பூலோகத்திற்கு வந்து இலங்கையெனுந் தீவுக்குச் சில தூரந் தெற்கேயுள்ள இலவணசமுத்திர மத்தியில் எண்பஃதினாயிரம் யோசனை நீளமும் நூறு யோசனை அகலமுமாக விசுவகருமாவினா லுண்டாக்கப்பட்ட வீரமாகேந்திரமென்னு நகருறைந்து, அங்ஙனம் பிரமதேவனால் (சூரபன்மனாகிய) தனக்கு முடிசூட்டப்பெற்று, இந்திரன் பொற்படிக்க மேந்தவும், குபேரன் அடைப்பை தாங்கவும், வாயுதேவன் வெண்சாமரம் இரட்டவும், நிருதி ஜலபாத்திரமெடுக்கவும், சூரிய சந்திரர் கவிகைகள் கவிக்கவும், வருணன் ஆலவட்டமசைக்கவும், கருடகாந்தருவர் சித்த வித்தியாதரர் கீதம்பாடவும், இயமனும் அக்கினியுங் குடிநீரெடுக்கவும், அசுரேந்திரன் உடைவாளேந்தவும், சுக்கிரன் முதலிய புங்கவர்கள் ஆசி கூறவும், அரம்பையாதிமாதர் நடனஞ் செய்யவும், விஷ்ணு வேண்டுஞ் செய்தி கேட்டுப்

---

* இயமன் முத்தலை யயில்வே லேந்திநிற்க, அக்கினித்தேவன் பிரம்புபற்றி நிற்க என்றொலிக்குந் தென்மொழிப் புராணம்.

போகவும், பிரம தேவரும் அவர் மைந்தராய பிரஜா பதிகளும் தினமும் பஞ்சாங்கம் படித்து வரவுமான சமானமற்ற சம்பத்தை யடைந்து, தேவர்களைச் சமுத்திரத்தின் மீன்பிடித்துத் தனதரண்மனைக்குக் கொடுவரும்படி செய்வித்தும்,மகனைய பானுகோபன் தேவ லோகத்தினெருப்பிட்ட ஞான்றொளித்தோடிய இந்தி ராதிதேவர் சிலர் நீங்கலாக இந்திரகுமார ஜயந்தன் முத லிய தேவகுமாரர்களையும் ஏனைய விண்ணவர்களையும் அரம்பாஸ்திரீகளையும் அப்பானுகோபனல் வீரமாகேந்தி ரத்திற் சிறைசெய்வித்தும், சிவபெருமா னினைப்பி லுண் டாக்கிய பல்லாயிரங்கோடி யண்டங்களுள் ஆயிரத் தெட்டு அண்டங்கட்கும் * அவ்வண்டங்கடோறுமுள்ள ஆயிரத்தெட்டுப் பிரம விஷ்ணு முதலிய தேவர்கட்கும் அதிபனுகி, நூற்றெட்டு யுகாந்தம் முன்னும் பின்னும் வாழ்விலினையின்றி ஆண்டு வருவது குறித்துச் சிவ பிரானிடம் விண்ணப்பித்துக்கொண்ட விஷ்ணுமுதலிய தேவர்களுடையவும் முனிவர்களுடையவும் துயர் தொலைத்துத் தம்முடைய அடியவர்க்கெல்லாம் எளி திலருள் பாலிப்பான் பரமசிவனுனவர், அவரது பழைய கோலமாகிய ஆறுமுகத் திருக்கோலங்கொண்டு ஜகதம் பிகையை விருப்புடன் ஆறுமுகங்களானு நோக்கிய தருணம் மேனேக்கும் வீரியத்தையுடைய அவருடைய ஷட்பால நேத்திரங்களினின்றுங் கோடிசூரியப் பிரகாச முள்ள வீரூர்ந்த ஆறுதேஜசு பகிர்முகப்பட்டன. பின் னர்ப் பரமனுர் அத்தேஜசுகளை விளித்து வாயுக்கடவுள் அனற்கடவு ளென்பாரிட மொப்புவித்தனர். பரமனு

---

* இதனை யனுசரித்துத் தக்ஷகாண்டத்து உக-ம் அத்தி யாயத்துப் கசு-ம் சுலோகத்தில் "அவ்வெல்லா அண்டங்கட் கும் அனேக மனேகம் விஷ்ணுபிரமர்கள்" என்பது வரு கின்றது.

ரருள்வலிகொடு மாற்றிமாற்றித் தலையிற் சுமந்தஅவர்களாலே பரமனு ராஞ்ஞாபித்த வண்ணம் பாகீரதியிற் சேர்க்கப்பட்ட அத்தேஜசுகளாறையும் அக்கங்கை, தன்கால்வழியாஞ் சரவணஞ் செறிந்த சரவணப் பொய்கை நடுவிலுள்ள தாமரைக்கமல மத்தியிற் சேர்த்தனள். பின்பு அத்தேஜசுகளாறும் பலகிரணங்கள் மிளிரப்படர்ந்து மிக்கெழில்வாய்ந்த குழவித்திருவுருவாயின. அவ்வுரு, ஸ்வயம்பிரகாசமான அரிய ஷண்முகங்களும் உரிய துவாதச கரங்களும் உபய சரணங்களுமிலங்க அழகினவாய அம்புஜ குசுமபீடிகை மீது விளங்கியிருந்தது. அக்கோலந் தரிசித்த சருவ தேவரும் முனிவருந் திவ்விய புட்பங்களை வாரிவாரிச் சரவணபவன்மீது தூய்க் களித்தனர்.

இவ்வாறுய திருவுருக்கோலங்கண்டு களி தலைமீக்கொண்ட விஷ்ணுமூர்த்தியின் கட்டளைப்படி கார்த்திகைப்பெண்க ளறுவரும் வந்து அந்தப் பிரமக்குழவிக்குத் தன்னியபானஞ் செய்விக்கவென அருகிலுற்றபோழ்து அன்னோ ருளங்களிகூர ஒருநொடிக்குள் ஆறு குழந்தையாய் அழகிய கமலங்களினின்றதக் காரணத்தெய்வம். அன்னண நின்றுள்ள *ஆத்தியோபாந்தரகித சச்சிதானந்தப் பிழம்பாஞ் சரவணசுவாமியானவர், அவ்வாறு பெண்களும் முலை கொடுத்தமுதருத்தி மகிழுமாறு ஆறு மூர்த்தமாய் விளங்கியிருந்தனர். இப்பெரும் பரம்பொருளே தரங்கஞ்சால் சரவணப்பொய்கையின் ஏடவிழ் சரோருக பீடத்தின்கண்ணே ஆறுருவாய்ச் சீருருவாய் விளங்கி யிருக்கும் ஒரு ஞான்று, அங்குப் பரமேசுவரனோ டெழுந்தருளிவந்த பரம்பரையாம் பரை பார்த்து அவ்வாறு குழவிகளையுங் கரங்கொ டணைத்திடலும் ஷட்

*ஆத்தியோபாந்தம் = ஆதியந்தம்.

ப்ரஹ்மவிலாச வக்த்ரம், அஷ்டாதச விலோசநம், துவா தசஹஸ்தம், உபயசரணாரவிந்தமுடைய சர்வாவயவ ஏக மங்களவிக்ரஹ தேஜோமயமாகத் திகழ்ந்தது அச் சிவ மெனுந்தெய்வம். அதுவே அறுமுகச் சிவம். அறிதி.

(அ) 8

சீடன்.—ஸ்ரீகண்ட பரமசிவனார்க்குச் சிவானந்தப் பொருள் மகனாகவந்தது எந்தயுகம்?

குரு.—யுகங்களிற் றலையாயுள்ளது கிரேதாயுகம். அந்தயுகமு மெத்தனையோகொண்டது பிரமகற்பம். அதுவும் எத்தனையோ வாயினவென்ப. ஆதலின், யாதொரு கிரேதாயுகத்தைத்தானே கூறவெனினும், எந்தக் கிரேதாயுகமென நிச்சயிப்ப தரிதாகும். இக் கருத்தே கொண்டு, எந்தப்பொருளுங் கந்தபுராணத்தி லென் றியம்பும் பெருமைபெற்ற கந்தபுராணத்தின் அவையடக்கத்தில்—

" எதி லாக்கற்ப மெண்ணில சென்றன
ஆத லாலிக் கதையு மனந்தமாம்
பேத மாகுமப் பேதத்தி னுள்விரித்
தோது காந்தத்தி னுண்மையைக் கூறுவாம்."

என ஸ்ரீ கச்சியப்பசிவாசாரிய ரருளிச்செய்தது மறிக.

(கூ) 9

சீடன்.—அறுமுகச்சிவத்திற்கு அரன்மகன், அறுமீன்காதலன், அறுமுகன், ஆசான், ஆண்டலைக்கொடி யோன், கங்கைமைந்தன், கடம்பன், கந்தன், கலை யுணர்புலவன், காங்கேயன், கார்த்திகேயன், குகன்,

குழகன், குறிஞ்சிவேந்தன், குமரன், குன்றெறிந் தோன், கௌரிநந்தனன், சண்முகன், சரவணபவன். சிலம்பன், சுரேசன், சூர்ப்பகைவன், செட்டி, செவ் வேள், சேந்தன், சேய், சேவற்கொடியோன், தார கற்செற்றோன், தாரகாரி, தெய்வயானைகாந்தன், தேவ சேனாபதி, பாவகி, மஞ்ஞையூர்தி, மாயோன்மருகன், முருகன், முருகு, வரைபகவெறிந்தோன், வள்ளிமணா ளன், வாகுலேயன், விசாகன், வேலன், வேலிறை வன், வேள், அக்கினிகருப்பன், கதிரையீசன், சங்கத் தலைவன், சாமி, முத்தையன் என்னுநாமங்களுண்டா தற்குக் காரணங்கள் யாவை?

ரு.—அந்நாமங்கட்கு வாச்சியார்த்தமும் இலக்ஷி யார்த்தமுமுள. யாம் முன்னருரைப்பது வாச்சியார்த் மென்றும், பின்னருரைப்பது இலக்ஷியார்த்தமென்றும் நீ கண்டுகொளற்கு, ஈண்டு ஒரோவொன்றாக வினவுதி.

(கo) 10

கூட.—அரன்மகன் என்பதற் கருத்தமென்னை?

ரு.—ஹரன் எனும் வடசொல், (பாப) நாசன், சங் காரகருத்தாவெனப் பொருளாம். அந்தப் பாபநாசனும் எப்பொருட்கு மிறைவரானவர், மகனும் அழல்விழித் தேஜசுகட்குக் காரணமாயிருத்தலிற் பிதாவெனவாவர். அம்முறைமையிற் பரம்பொருள், அரன்மகனெனப் படுவ தாயிற்று.

ஹரனென்பது, பாவ ஏதுவாம் மலங்களைப் பரி கரித்தருள்பவனெனப் பொருளாதலின் அவன் கேடற்ற மங்களனெனவுமாவன். அந்த மங்களமே மோக்கமாகிய சிவமென்றும், அச்சிவமாக விருப்பவன் சிவனென்றும்

அதனைக் கொடுப்பவன் சிவனென்றும் பொருள்கொள்ளலாம். காண்டற்கரிதாய் மறைந்திருக்கின்ற அந்தச் சிவனாகிய அதீதப்பொருள், ஒருவனுடைய சிவயோகானுபவத்தில் வெளிப்பட்டுப் பிரகாசிக்கின்ற ஆனந்த சொரூபமே மகன் எனவுமாம். இதனானே அரன்மகன் சிவானுபவப் பொருளென்றும், அப்பொருளைக் காணாமல் எந்த வுயிரும் பரமுத்தியடைவதில்லையென்றுமறிவாயாக.

(கக) 11

சீட.—அறுமீன்காதலன் என்பதற் கருத்தமென்னை?

குரு.—அறுமீனாய் வானத்தியங்கு கார்த்திகை மின்கட்கு, காதலன் = மகன் எனப் பொருள்காண்புழிக் கார்த்திகைமாதர் முலையுண்ட பிள்ளை யெனவாம்.

கார்த்திகை மாதர் குறைபாடுற்று நோற்ற நோன்பில், அவர்கள் காதலாய்க் கருதிநின்ற கருத்தனெனவாம்.

(கஉ) 12

சீட.—அறுமுகன் என்பதற் கருத்தமென்னை?

குரு — ஆறு வதனமுடையவனெனவாம். விவரம் :—சிற்சத்தியாகிய சிவசத்தியினுடைய முகமொன்றும், சிவனுடைய முகமைந்துமாம். இந்த ஆறு முகங்களும் ஆன்மாக்கள் விருப்பு நிறைவேறுமாறு அருளாற் செய்யப்படுஞ் சிருட்டியாதி பஞ்சகிருத்திய நிமித்தம் அபேத சிவசத்தியாய சிற்சத்தியிற் பத்திலொருகூறு வலியுள்ள மஹாசாதாக்கிய மென்னுந் தத்துவமும் மஹாசாதாக்கியனென்னு மூர்த்தியும் பொருந்தின கீழ்நோக்காயுள்ள அதோ முகமும்,

பராசத்தியிற் பத்திலொரு கூறு வலியுள்ள சாதாக்கியமென்னுந் தத்துவமும் சதாசிவனென்னு மூர்த்தியும் பொருந்தின மேனோக்காயுள்ள ஈசானமுகமும், ஆதி சத்தியிற் பத்திலொருகூறு வலியுள்ள அமூர்த்திசாதாக்கிய மென்னுந் தத்துவமும் ஈசனென்னு மூர்த்தியும் பொருந்தின மேற்கு நோக்காயுள்ள சத்தியோசாத முகமும், இச்சாசத்தியிற் பத்திலொருகூறு வலியுள்ள மூர்த்திசாதாக்கியமென்னுந் தத்துவமும் பிரமீசனென்னு மூர்த்தியும் பொருந்தின வடக்குநோக்காயுள்ள வாமதேவமுகமும், ஞானசத்தியிற் பத்திலொரு கூறு வலியுள்ள கர்த்திருசாதாக்கிய மென்னுந் தத்துவமும், ஈசுரனென்னு மூர்த்தியும் பொருந்தின தெற்கு நோக்காயுள்ள அகோரமுகமும், கிரியாசத்தியிற் பத்திலொருகூறு வலியுள்ள கன்மசாதாக்கியமென்னுந் தத்துவமும் ஈசானனென்னு மூர்த்தியும் பொருந்தின கிழக்கு நோக்காயுள்ள தற்புருட முகமுமாம் என்ப. அறுமுகங்கட்குமுரிய பிரமாணம் — சம்பவகாண்டத்து ந௩-ம் அத்தியாயத்து எ-ம் சுலோகத்தில் "நங்குமாரன் உனது சுவரூபத்தையும், எனது சுவரூபத்தையுங் கொண்டவன். ஆகலின் அறுமுகனுயினன்" எனக் கிரிகுமாரிக்குக் கிரிவில்லி கிளத்தியதாக வருவதூஉம், திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பாவில் "வெந்தகுவர்க் காற்ருத விண்ணோர் முறைக்கிரங்கி—யைந்து முகத்தோடதோமுகமுந்—தந்து திருமுகங்க ளாறுகிச் செந்தழற்க ணறும்—ஒருமுகமாய்த் தீப்பொறியா றுய்ப்ப" எனக் குமரகுருபரசுவாமிகள் கூயின்றதாக வருவதூஉமாம். சண்முகங்களுள், சாற்றிய கலிவெண்பாக் கூறுமாறு சூரனைத்தடிந்து பகைவருயிர் சிந்திய முகம்-க, உயிர்களின் ஊழ்வினையை மாற்றிப் பேரின்ப சுகந்தரு முகம்-க, வேதங்களையு மாகமங்களையு முடிக்கு

முகம் - க, பாசவிருளை நீக்கிச் சோதிமயமாய் விளங்கு முகம் - க, தேவசேனைக்கும் வள்ளியம்மைக்கு மோக முதவு முகம் - க, தன்னடி சேர்வார்க்கு வரமளித்தருளு முகம் - க எனவுஞ் சிலர் கூறுப.*

கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, மேல், கீழ் என்னும் ஆறு முகத்துஞ் சிதாகாசமாக நிறைந்திருக் கும் பரமான்மா ஷண்முகனெனவாம். ஷட் + முகம் = ஷண்முகம். ஷட் = ஆறு.

(கங) 13

சீட.—ஆசான் என்பதற் கருத்தமெவன்?

குரு.—பிரமவித்தியா சம்பிரதாயப் பிரவர்த்தக தேசிக சிகாமணியாகிய குருவெனவாம். எனவே, அரனார்க்கும், அகத்தியனார்க்கும், நந்திதேவர்க்கும், தசரத ராமர்க்கும், வாமதேவமுனிவர்க்கும், நாரதர்க் கும், பராசரபுத்திர ரறுவர்க்குங் குருவாதல் பற்றி வேதவேதாந்த சித்தாந்தத்திற்குஞ் சருவ கலைகட்கும் பரமாசாரியனென்பது பெறப்படுமால். இது பற்றியே சம்பவகாண்டம் உசு - ம் அத்தியாயத்துப் கரு-ம் சுலோ கத்தில் "அந்தக் கலியாண குணசீலரும் உலோக குருவுமான கந்தபிரான்" எனவும், ௩௨ - ம் அத்தியா யத்துப் கசு - ம் சுலோகத்தில் "தேவசேனாபதி ஜகத் குருவெனத் தேவர்கள் கூறி" எனவும், ௩௩ - ம் அத் தியாயத்துப் ௪0-கக - ம் சுலோகங்களில் "ஜகங்கட்குக்

---

*அறுமுகம்பற்றி யின்னு மறியவேண்டிய வுண்மையை, இந்நூலாசிரியரது செக்கர்வேள் செம்மாப்பின் நடத்த சம் பந்த வாரத்துறைக் கண்டுகொளலாம்.

குருவாகிய குஹமூர்த்தியானவர்" எனவும், பிரமாண்ட புராணம் பிரமாவினால் நாரதருக் குபதேசிக்கப்பட்ட ஷண்முக ஸஹஸ்ரநாமத்தில் "ஜகத்குரு" எனவுங் கூறுகின்றன. அரனெனுஞ் சுவாமிக் குபதேசித்ததுபற்றி அறுமுகதேவுக்குச் சுவாமிநாதனெனவும் ஒரு திருநாமம் விளங்குகிறது. பராசர புத்திர ரறுவரென்றது, வியாசருக்குத் தமையன்மார்களாய தப்தர், அனந்தர், நந்தி, சதுர்முகர், சக்கரபாணி, மாலியென்பவர்களை.

குருவெனும் வடசொல் பெரிது, பிதா, அரசனெனப் பொருளாதலிற் பெரிய பொருளாகவும், பரம பிதாவாகவும், பரம ராஜனாகவுமுள்ளவன் எனவாம். கு = அந்தகாரம் = அஞ்ஞானம், ரு = நிரோதித்தருள்வோன் எனவும் பொருள்படுதலின் ஆன்மாக்களின் மூலாஞ்ஞானத்தைத் தொலைப்பவன் குருவெனவுங் குரவனெனவுங் கூறப்படுவன்.*

(கச) 14

சீட.—ஆண்டலைக்கொடியோன் என்பதற் கருத்த மென்னை?

குரு.—ஆண்டலை = கோழி. அதனால், என்றுங் கோழிக்கொடியை யுடையானெனவாம். சூரசங்கார யுத்தத்திற் சூரனாற்கண்டிக்கப்பட்ட கோழிக்கொடிக்குப் பதிலாகக் குகபிரான்றேரிற் கொடியாயிருக்குமாறு(யுத்த காண்டத்து ௩௧ - ம் அத்தியாயம் ௩௭, ௩௮ - ம் சுலோ

---

*இக் குருசப்தார்த்தத்திற்குரிய சுருதிப்பிரமாணம், இந் நூலாசிரியது பரிபூரணானந்தபோத வுரையாகிய சிவசூரியப் பிரகாசத்திற் காணக்கிடக்கின்றது.

கங்களிலுள்ளபடி) கோழியான அக்கினிதேவனையும், சூரனுடற்பிளப் பொன்றிற் றேன்றிய வலிய கோழி யையும் துவஜமாக வுடையானெனவும் விரியும்.

பரமபதிக் கென்றும் அடிமையாயுள்ள அரி அயன் இந்திரன் முதலிய தேவர் முனிவரெனுஞ் சற்குண சற்கிருத்திய ஆன்மாக்கள், செருக்கெனுந் தக்ஷப்பிர ஜாபதி வயப்பட்டு வேதவிரோதமாகப் பரமபதியை விலக்கிச் சொந்தமுயற்சியாற் சுகந்தேடக் கருதுபு கருமமியற்றுங் கருமபூமியாய மகச்சாலையெனும் க்ஷேத் திரத்திலே தங்களு ளொருவராய விஷ்ணுவெனு மோரான்மாவைப் பரமபதியாகக் கொண்ட பதித் துரோகம், பசுக்களாகிய அன்னோர்க்கனுபவமாமாறு சிவ உக்கிரமெனும் வீரபத்திரராற் பலவாறு தண் டிக்கப்பட்டுந் தீர்ந்திலராய அவர்கள் பின்னுஞ் சிவாதிகாரத்தாற் றூண்டப்பட்ட காரண மாயையின் முக்குண மூல அகங்காரத்திற் பிரதிபலித்த சூரபன்ம னெனும் ஆணவமலத்தானும், அம்மலச்சார்பாய் அம் மாயையில்வருஞ் சிங்கமுகனெனுங் கன்மமலத்தானும், அச்சார்பிற்றேனே அம்மாயையின் காரியமுளையா யெழு கின்ற தாரகனெனு மாயாமலத்தானும், மொழிந்த மூன்றசுரர்களின் சகோதர புத்திர மித்திர கணங்களெ னும் மும்மலப் பிரிவுகளானும், அவர்களுடைய மற்றைச் சைனியங்களெனும் அரிஷம் சோஷம் அராகம் விஷாதம் மதம் மோஹம் வைசித்திரியமாதி குணவிருத்திகளானும் பீடிக்கப்பட்டுத் துயருழந்ததன் மேல்தங்கள் செயலையுந் தலைவன் செயலையு நிறுத்து மதித்து ஆ கெட்டோம் ஆ கெட்டோமெனக் சுலுழ்ந்து ஓ தயாநிதியாகிய பரமபதீ! யாங்கள் யாது பிழை யிழைத்திருப்பினும் மன்னித்தருடி: இனி இவ்வல்லலினின்று மெத்துணையு மெங்களா லெங் களைக் காக்கவியலாது: நீயே காத்தருடியெனப் பெரு

விண்ணப்பஞ் செய்து மெய்ப்பத்திகொடு நெடுநாளாகச் சிவாலய வாயில் காத்து நின்ற ஞான்று அத்தேவர் முனைவர் துயரெருக்கி விண்குடியேற்றலெனும் இன்ப வீடளிப்பாமென்று சிவனாகிய சச்சிதானந்தப் பிரமந் தானே நவநாத தத்துவ சொரூபமாகிய வீரபாகு முதலிய சீடர்களுடன் சுப்பிரமணியமெனுந் திருப்பெயர் விளங்கத் திருவருண்மேனி தாங்கி ஓர் பரமாசாரிய சுவாமியென வெளிப்பட்டு விசுவரூபமாகிய தனது விபுத் துவத்தை அத்தேவான்மாக்கட்குத் தரிசனமாமாறு காட்டிக் கடாக்ஷதீக்ஷை செய்து நுங்கள் வேண்டு கோளின்படி பகையொழித்துக் காத்தருள்வாம்: மனந் தளரற்கவென்று அபயாஸ்தமருளி அவர்களை மெய் யடியாராக ஒப்புக்கொண்டு அருகிலிருக்கக் கட்டளையிட் டெழீஇப் பூத சைனியங்களாகிய சிவதத்துவ விருத்தி கள் சூழ்தர இகலோரிருக்கும் இடநேடிச்சென்று தாரக னாகிய மாயாமலத்தையுங் கிரௌஞ்சனாகிய முக்குண விகற்ப அகங்கார கடினத்தையும் வேலெனு ஞான சத்தியான் முதலின் முருக்கியொடுக்கிப் பின்பு வீர மகேந்திரமெனும் அவித்தியாபுரம் புக்குச் சிங்கமுகனா கிய கன்மமலத்தை வச்சிராயுதமெனும் வீரஞான சத்தியால் நசித்தொடுக்கி மேற் பல சம்பிரதாயத் துடன் மகாவிசுவரூப விபுத்துவங் காட்டிச் சூரபன்ம னாகிய அஞ்ஞானாந்தகார ஆணவமலத்தைச் சோதி மய மான எஃகமெனும் அகண்ட ஞானசத்தியால் இரு கூறுகப் போழ்ந்தபோது ஒருகூற்றின் மயிலெனவந்த மலவலியைத் தூய மாயையின் அதோபாகத்திலடக்கி யூர்தியெனக்கொண்டு அதன்மிசை யாரோகணித்தும் பிறிதொரு கூற்றிற் கோழியென வந்த மலவலியை அம் மாயையின் ஊர்த்துவபாகத்திலடக்கித் தேர்க்கொடி யெனத் தன்வயங் கொண்டவனெனவாம்.

இவ்வாறு செய்துகொண்டவனும், வீரமாகேந்திர மெனும் அவித்தியாபுரத்தில் மாயையின் வலியானே வாதைதரும் பழைய வாசனையேதுந் தோன்ருமே மனோ நாசமெனும் பெரும்பிரவாகத்தில் அதனைக் கரைத்து அதனிடை யாழ்த்துவித்தவனுமான அந்தப் பரமா சாரியன், தனது ஞானதீக்ஷையெனும் வெற்றியாற் பந்த விடுதலைபெற்ற தேவான்மாக்களாகிய தன்னடி யார்களைத் திருச்செந்திலெனுந் தனது சன்னிதிவயி னிறுத்தியிடலுஞ் சீவசுதந்திரத்தைச் சிவசுதந்திரத்தி லொப்புவித்து ஆண்டாராதித்தலெனும் ஒருநோக்க மாகிய சிவயோகத்திருந்து தங்களுண்மையையுந் தங்களையறிவித்த திருவருளையும் அவ்வருளுயகமாய் ஆனந்தமயமாய் வெளிப்பட்ட அதீத சுப்பிரமணியப் பிரமத்தையுந் தரிசித்துக் களிப்பெய்திச் சீவன் முத்தர்களாக நின்ற அவ்வடியவர்களை அவ்வதீதப் பொருளானது தனதுண்மை நிலையி லொடுக்கிக் கொண்ட சதானந்த பரமுத்தி விண்குடியேற்றலெனப் படும்.

இப்படி இலக்ஷியார்த்தஞ் செய்யப்படுதலின்றிச் சூர சங்காரமென்பதொன்று நடந்திருப்பதில்லையென நினைய லாமோவெனின், விளக்குதும்—“ வலங்கைமான் மழு வோன் போற்றும் வாளர வரசை நோக்கி—யலந்திடும் பிண்ட மண்ட மவைசம மாத லாலே” எனக் **கோயிற்புராணத்தில்** ஸ்ரீ உமாபதி சிவாசாரியர் திருவாக் குங் காணப்படுமாறு அண்டத்திலுளது பிண்டத்திலுள தாம். அண்டத்திலுள்ள சுவர்க்கவாசிகளாய அரி பிரமாதி கடவுளர்துயரப் பெருந்துன்பிழைத்த சூர பதுமனுதியரைத் தொலைக்கச் சிவகுமாரன் வெளிவந்த துண்மை. அதுபோலப் பிண்டத்திலுள்ள முன்னைய தேவாசுரர் நரர் முதலிய ஆன்மாக்கள் துயரப்

பெருந்துன்பிழைத்த மும்மலாதிகளைத் தொலைப்பதற்கு அந்தச் சிவகுமாரன் சிவானுபவத்தில் வெளிவந்தனன்: பின்னைய ஆன்மாக்களை யிரக்ஷிப்பதற்கு வருகின்றனன்; வருவனென்பதுமுண்மை. புராணத்தில் வெளியாகின்ற தேவாதிகட்குத் துக்கமுண்டான வழியுஞ் சுகமுண்டான வழியும் வாச்சியார்த்தத்திற் காணப்படுத லெவ்வணமோ அவ்வணமே அவை எல்லா வுயிர்கட்கும் இலக்ஷியார்த்தத்துங் காணப்படுமென்பதூஉம், வாச்சியார்த் தம் தூலம் இலக்ஷியார்த்தம் சூக்குமமென்பதூஉம், இங்ஙனம் பெறப்படும். இதனால், அண்டத்திலும் பிண்டத்திலு முண்டாகாநின்ற உயிர்த் துயரத்தை விடுதலை செய்து இரக்ஷிப்பவன் சிவகுமாரனெனப் புத்தியுளாராற் பொருள் நனி துணியப்படுமென்க.

முற்சொற்றகோழியை வடநூலார் குக்குடமென்பர். அதனாற் குமாரனைக் 'குக்குடத்வஜன்' எனவுங் கூறுப. த்வஜம் = கொடி. கு = பூமி, குடம் = வக்கிரமாகக் கிளைத்தல் எனவாம். ஆதலிற் பூமியைக் காலாற் கிளைக்கு நீர்மையுடைப் பறவையைக் குக்குட மென்றதென்க. ஈண்டுக் கடவுளாகிய நம்மாற் பிரபஞ்சம் ஆளப் படுகிறது: அதனைக்கடந்து எம்முண்மையை யடைய அவாவுவோர்க்கு எமதருள்வேண்டும்: அவ்வருளான் முத்தியளிக்குந் தலைவனு நாமே யெனலுணர்த்த என்னிறைவ னுளனென்பதை யறிவிக்கின்றது நித்திய குக்குடத்துவஜரூபம் எனும்பொருளும் பெறலாமென்க. இது, வாச்சியார்த்தப்படி மூர்த்த நிலையிலும் இலக்ஷியார்த்தப்படி அதீத நிலையிலும் ஒத்து நிற்பது மறிக.

(கரு) 15

சீடன்.—கங்கைமைந்தன் என்பதற் கருத்தமெவன்?

தரு.—சுரநதியிற் றிருவுருக்கொண்ட காரணத் தானே, கங்கைக்கு மகனென ஒரு நாமம் ஏற்றவனென வாம்.

பவித்திர கங்கைக்கு மூன்று பகுதியாந் திரிபதகை யென்ற நாமமுண்டு. விவரம்—உமை கரத்தினின் றொரு முறையும், ஹிமவானுக்குப்புத்திரியா யொருமுறையும், வாமனபாத சம்பந்தத் தொருமுறையுமாம். ஹிமவா னுக்குப் புத்திரியாயிருந்த குடிலையென்பாள், அந்த ஹிமவானுடைய இளையபுத்திரியாய உமையென்பாட்கு மூத்தாளாவள். அக்குடிலையைத் தேவர்கள் விண்ணுல குக்கு அழைத்தபோழ்து ஒருகாரணத்தாற்பிரமா கங்கை யாகச் சபித்தார். அதனாலவள் நதி ரூபமாகி அவ ணிருந்தனள். அவளே பரமனுடைய ஜடாடவிக்கண்வதி பவளும். ஆண்டலைக்கொடியோன், உமையம்மைக்கு மகனாது போலக் குடிலையம்மையாகிய கங்கைக்கும் மகனாவது முறைமையாமென இந்நாமம் விளக்கும்.

ஆணவமலமெனும் அழுக்கைப்போக்கித் தண்ணென வுண்மகிழ்ச்சியைத் தராநின்ற அருட்பிரவாக சத்தியி னிடம் விளங்கிநிற்கின்ற சிவானந்த சொரூபங் கங்கை மைந்தனெனவாம்.

(கசு) 16

சீட.—கடம்பன் என்பதற் கருத்தமென்?

தரு.—கடப்பமலர் மாலையைச் சூடிக்கொள்பவனென வாம்.

சுகந்த வாசனை கமழவுளோனெனவாம். இது, பரிசுத்தத்தையுணர்த்தும்.

(கஎ) 17

சீட.—கந்தன் என்பதற் கருத்தம் யாது?

தரு —சம்பவகாண்டத்தின் ௩டு-ம் அத்தியாயம்—

ஆக்ரம்யசயதோஸ்கந்தத் விக்ரமேணஜகத்த்ரயம்।
தேநஸ்கந்தோயமாக்யாதஸ் ஸுதஸ்தேகிரி ஸம்பவே॥

"பார்வதீ! உன் மைந்தன் மூவுலகிலும் பராக்கிர மத்துடன் ஆக்கிரமித்து நிற்றலினுல் (ஸ்கந்த:) கந்த னெனப்படுகின்ருன்" எனக் கூறுமாற்ருன் அதன்பொரு ளறியப்படுகின்றது. ஸ்கந்தம் என்னும் வடமொழி 'தோள்' என்னும் பொருளில் வருதலினுற் புஜபல முடையா னென்பதையே குறிப்பிடுகின்ற தென்றல் பொருந்தும். கந்தபுராணத்தில் "சேயவன் வடிவ மாறுந் திரட்டிநீ யொன்ருய்ச் செய்தாய்—ஆயத ஞலே கந்த ஞெனு நாமம் பெற்ருன்" என்று பொருள்கூறினமை போந்த வடமொழியோடு மாறுபடுகின்றது.

சருவசத்தித்துவமுடையா னெனவாம்.

(கஅ) 18

சீட.—கலையுணர்புலவன் என்பதற் கருத்தமென்னை?

தரு.—தளிமஞ்சான்ற தண்ணந்தமிழை யுலகில் வளர்க்கும் பொருட்டு மதுரைமூதூரி லேற்பட்ட மூன்று சங்கங்களில் முதற்சங்க மிருந்து தமிழாராய்ந்த அகத் தியர், முரஞ்சியூர் முடிநாகராயர், நிதியின் கிழவன் முதலியோரோடும் ஸ்ரீ சோமசுந்தரக் கடவுளோடு மிருந்துவந்த ஒரு மகாபுலவனும், மதுரை உப்பூரி குடி

கிழாருக்கு மகனெனவாகி ஓதாதொருங்குணர்ந்து கடைச்சங்கப் புலவர்களாய நக்கீர தேவராதியோர்க் குற்ற கல்விக்கலகத்தை ஐந்துவயதிற்றனே தீர்த்து அன்னவர் வந்தனமேற் றவணெழுந்தருளியிருந்த ஒரு கலையுணர் கவிஞனுமாவனெனக் கூறுப. கலைமகளங்கிச வித்துவ சிரோமணியாகிய ஒளவையை ஒருகாலத்திற் பரிட்சிக்கவெனத் திருவுளத்தெண்ணிக் கரிய எருமை களை மேய்க்குஞ் சிறுக்கனைப்போலாகி ஒரு சம்பு விருக்கத்திலேறிக் கிளைகளை யசைத்துக் கனிகளை யுகுத்திடுஞான்று அக்கனி விரும்பிய அம்மூதாட்டியைக் கண்ணுற்றுச் சுட்டகனி வேண்டுங்கொல்? சுடாக் கனி வேண்டுங்கொல்? எனக் கடாவி, அன்னாள் சுடாக்கனி வேண்டுமென்ற ஞான்று தன்னால் மண்ணில் வீழ்தர வுகுத்த கனிகளை அம்மூதாட்டி யெடுத்து மண் போக வாயாலூதக் கண்ணுற்றீஇ ஏ அம்மே! சுடுகின் றதோ? எனப் பரிகாசஞ் செய்து, பின்னர்த் தனது திருவுருவைக் காட்டிப் பெரிது அரிது முதலியன வினவி, வினாவுக்கு உத்தரமாகச் சொற்ற கவிமூலம் அவளுடைய சொன்னயம் பொருணய முதலியவற்றைக் கண்டு மகிழ்ந்து, அக்கிழவாட்டி வேண்டியபடி யாசீர் வதித்தருளிய புலமைத் தலைவனெனும் பொருள் கொள்ளலாம்.

இப்பெரும் புலமைத்தன்மை பிரமக்குழவிக் கிருத் தலினாலன்றோ, அதனை யுபாசிப்பார்க்கெல்லாம் நாளு ளும் வித்தை விருத்தியாகின்றது.

கலை = அதியற்புதமான அறுபத்துநான்கு கலைகளை யும், உணர் = ஓதாதுணர்வுறு, புலவன் = அறிஞன் = தேவன் எனப் பொருளாகும். அதனால், சகலகலா நாதன் என்னுமொரு திருநாமம் கந்தசுவாமிக்கு விளங்கு வதுமுண்டு.

(௧௯) 19

சீட.—காங்கேயன் என்பதற் கருத்தமென்னை?

குரு.—அது, கங்கை மைந்தனென்ற நாமார்த்தத்தையே பொருந்தும்.

(௨०) 20

சீட.—கார்த்திகேயன் என்பதற் கருத்தமென்னை?

குரு.—அறுமீன் காதலனென்ற நாமார்த்தமே ஆம்.

(௨௧) 21

சீட.—குகன் என்பதற் கருத்தமென்னை?

குரு.—மலைக்குகைகளில் திருக்கோவில்கொண் டிருப்பவனெனச் சிலர் கூறுவர். அவ்வாறு மாகலாம்.

குஹா என்னும் வடசொல் குகையெனப்படும். அது, தகராகாசமெனவாம். தகரமாகிய இதய புண்டரீகத்திற் சிதாகாசமாகிய வித்தை யிருத்தலின், அது *தகரவித்தை யென்றுஞ் சொல்லப்படும். இந்தத் தகரவித்தை யஜுர்வேதத்துப் பிருஹதாரண்யகோபநிஷத்தில் இனிது விளக்கப்பட்டிருக்கிறது. இந்தக் குகையி

* இந்தத் தகரவித்தையை நன்கு விளக்கும்பொருட்டே தகராலயரகசிய மெனுமொரு நூலினை இந்நூலாசிரியர் செய்துள்ளார். அதனுரை, சதானந்தசாகர மென வேதம் முதலிய பலதிறப் பெரும்பிரமாணங்களாலும் யுத்தி அனுபவங்களாலும் ஒரு பெருநூலாய் விளங்குகின்றது.

விருப்பவன் குகனெனப்படுவன். அதனுற் குகன் சரு வான்மாக்களின் இதயகமலங்களில் வாசஞ்செய்கின்ற பரமான்மாவாகிய அந்தரியாமியெனவாம். அந்த அந் தரியாமியே பசுவாகிய ஆன்மாவின் அறிவுக்கறிவாகவும் அசைவுக்கசைவாகவு நிற்றலின் பசுபதியெனவும், அசைத்தாட்டு நடனநடேசனெனவு மாவன். அங்ஙனமே ஐந்தொழிலுஞ் சொல்லப்படும். ஹ்ர்தயபத்மத்தில் ஆத்மாவிருத்தலின் அவனுங் குகனென்படுவன். அதனுல் ஆன்மாவுக் கான்மாவான அந்தரியாமி குகனுக்குக் குகனெனவுமாவன். இந்தக் குகனை யுபா சிப்பதே தகரோபாசனை. இதனை அதர்வணவேதத்துப் பிரசிநோபநிடதம், சாமவேதத்துச்சாந்தோக்கியோபநிடதம், யஜுர்வேதத்துக் கடவல்லியுபநிடதம், கைவல்லியோ பநிடத மென்பவைகள் கூறும். இத்தகைய வேத வேதாந்தங்களில் வெளியாகுங் 'குஹ' சப்தம், எந்த மூர்த்திக்குமில்லாமற் குமார னெருவனுக்கே சொந்த நாமமாக விளங்கி நிற்பதையும், அது சிவவெனும் மகா மந்திரம்போன்ற (குஹவெனு) மகாமந்திரமாக வுள தென்பதையும் நீ மதித்துக்கொள்வாயாக. ஈண்டுப் பிரகாசப்படுத்திய அருத்தம் உறுதியெனற்குச் சான்று- சம்பவகாண்டத்தின் ௩௫ - ம் அத்தியாயத்திற் ௬௫ - ம் சுலோகத்தில் "வேதவேதாந்தங்களில் தகராகாச மானது குஹையெனக் கூறப்படுமன்றே: சகலப்பிராணி களின் இருதய கமலங்களில் வசித்திருப்போன் உன் மகனுகலின் அவன் குஹனெனப்படுகின்றனன்" என உமாதேவிக்கு உமாபதி யுரைத்ததாகவும், ௫0 - ம் அத்தியாயத்து ௩௪ - ம் சுலோகத்தில் "யோகீசுர ருடைய தகராகாசத்தில் விளங்காநிற்கும் (முருகக் கடவுளாகிய) பிரபுவுக்கு'' என நைமிசாரணிய முனிவர் கட்குச் சூதமா முனிவர் சொன்னதாகவும் வரும்.

**௬௩.—குமரன் என்பதற் கருத்தமென்னே?**

தரு.—* குமரன் என்பதே குமாரனெனப்படும். இஃது அரன் மகன் எனும் நாமார்த்தத்தைப் பொருந் தும். குமாரனென்பது இளம்பிராயமுடையானென்பது குறிக்குமாற்ருனே பிரமசாரியெனும் பொருளுந்தரும். **சம்பவகாண்டம்**, க - வது அத்தியாயத்துப் கo - வது சுலோகத்தில் "ப்ரஹ்மசாரி" எனவுஞ் சண்முகனைக் கூறுகின்றது. இதனுல், குமாரக்கடவுளின் தேவிகளை யும் நித்திய கன்னிகைகளெனவே யறியவேண்டும். அற்ருகலினன்றே **சிவஞானசித்தியார்** உ-ம் சூத்திரத்தில் "சிவஞ்சத்தி தன்னையீன்றுஞ் சத்திதான் சிவத்தையீன் றும் — உலந்திரு வரும்புணர்ந்திங் குலகுயிரெல்லாமீன் றும் — பவன்பிரம சாரியாகும் பான்மொழி கன்னி யாகுந் — தவந்தரு ஞானத்தோர்க்கித் தன்மைதான் றெரியுமன்றே" எனப்பிதா பக்ஷத்திலும் அத்திறம் விளக் கப்பட்டுளது. பதினறு பிராயமுடையான் 'குமரன்' என்றுங் கூறுப.

கு = அருவருப்பு, குற்சிதமெனவும், மாரன் = நாசஞ்செய்பவன் எனவும் வடநூலார் பொருளாக்குவர் அதனுல், குமாரனென்பதற்கு ஆன்மாக்களின் மலபந்

---

* "ஓடி மீளமழு வான பாணிதன
தூர்பு குந்தனறு வந்துபல்
கோடி தேரரசர் துதியெ டுக்கநதி
குமர னுந்தனகர் குறுகினுன்"

என நிகழ் செய்யுளில் நதிகுமாரன் எனற்பாலது "நதிகுமரன்" என வருதலுங் காண்க. இன்னன பல.

தத்தைக் கெடுத்தருள்பவ னென்னும்பொருள் கொளப்படும்.

(உரு) 23

சஎ.—குழகன் என்பதற் கருத்தமென்னை?

தரு.—அழகுடையா னெனவாம்.

குழகு - அழகெனக் குறிக்குமாற்றூற் பாஞ்சபூத பௌதிகமான விசித்திரப் பிரபஞ்சத்தைத் தேகமாகவும், அத்தேக ரோமங்களிற் புன்னுனியிற் பனித்துளி போல நிறீஇய அண்டகோடிகளையெல்லாம் அழகினவாய திருவாபரணங்களாகவு முடையானெனற்கு ஓரமையம் இந்திராதி தேவர் நிமித்தமும், ஓரமையஞ் சூரபதுமன் நிமித்தமுங் காட்சிப்படுத்திய அவனது தொன்மை மகாவிசுவரூப விநோதஞ் சாக்ஷியாம். அவ்விநோதமே குழகு. கந்தபுராண உற்பத்திகாண்டத்துத் திருவிளையாட்டுப் படலத்தில்,

"முண்டக னொருவன் றஞ்ச முராரிபே ருருவாய் நேமிக்
கண்டுயி லகந்தை நீங்கக் கண்ணுதற் பகவ னெல்லா
அண்டமு மணிப்பூ ணார மாகவே யாங்கோர் மேனி
கொண்டன னென்னுந் தன்மை குமரநின்வடிவிற் கண்டேம்"

என நிகழ் செய்யுள், "திருமா லுந்திக்கமலத் துதித்த பிரமனொருவன் இறந்தபோது விஷ்ணுவானவர் விசுவரூபத்தைத்தாங்கி எல்லாம் நாமேயெனும் மமதையாற் பாற்கடலிற் பள்ளிகொண்டிருந்தார். அம் மமதையை முருக்கியாள்வான் சிவபிரானனவர் திருவுளத்தெண்ணி ஹரி பிரமிக்கும்படி உடனே சகல அண்டங்களுந் தமக்குத் திருவாபரணங்களாகத் தேக ரோமங்கடோறு நிற்க மகாவிசுவரூபத்தினைக்கொண்டாரெனப்பிரமாணங்

கள் கோடிக்கும். அவ்விவரத்தைத் தேவரீர் திருவடிவிற் றரிசித்தனம்'' என்று இந்திராதி தேவர்கள் சொல்லின ரெனும் பொருளையும், உயுத்தகாண்டத்துச் சூரபன்மன் வதைப்படலத்தில்,

"கோலமா மஞ்ஞை தன்னிற் குலவிய குமரன் றன்னைப்
பாலனென் றிருந்தே னந்நாட் பரிசிவை யுணர்ந்தி லேன்யான்
மாலயன் றனக்கு மேனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற மூர்த்தியிம் மூர்த்தி யன்றோ.

மீயுயர் வடிவங் கொண்டு மேவிய தூதன் சொற்ற
வாய்மைகள் சரத மம்மா மற்றியான் பெற்ற வண்டம்
ஆயவை முழுது மற்று மறுமுகம் படைத்த செம்மல்
தூயபொற் பதரோ மத்திற் றோன்றியே நிற்கு மன்றே"

என்று சூரபன்மன் சுப்பிரமணியத்தி னனுக்கிரகத்தால் ஞானதிருட்டி கொண்டு மகாவிசுவரூபந் தரிசித்த தொன்று அச்சூரபன்மன் சொல்லின னென்பதையுங் காண்டி.

தேவர்கள் கண்டு களிகொண்டதன்மேல் அவர்களை மோக்க வீட்டுக்குப் பாத்திரராகச் செய்த அந்த மங்களவிக்கிரகப் பேருருவாகிய பாரமேசுவரரூபத்திலே திருவடிகளி னுட்புறத்திற் சப்த பாதலங்களும், புறவடியிற் சமுத்திராதிகளும், விரல் நகங்களில் நக்ஷத்திர கிரகங்களும் மின்னல்களும், பரடுகளில் வருணன் சூரியன் சந்திரன் நிருதி முதலியோரும், கணைக்கால்களிற் சிந்தாமணியும் ஆரிடரும், முழந்தாள்களில் விஞ்சையரும், தொடைகளில் இந்திரனும் அவன் புத்திரனாகிய ஜயந்தனும், இடையிற் காலனும், இயமனும், * முதுகில் அசுரக் கூட்டங்களும், விலாப்புறங்களிற்

* "கடிதடத்தசுரர்'' என்பது தென்மொழிப்புராணம்.

சிறந்த கடவுளர்களும், அபானத்துவாராதிகளில் நாக ரும், ஆண் குறியிற் சர்வஜகோத்பத்தியும், மார்பகத் திற் கலைஞானங்களும், முப்புரி நூலில் அசைவற்றுச் சொலிக்கின்றஞானமும், பாதாதிகேசம் வரையிலுமுள்ள ரோமங்களிற் பல்லாயிரங்கோடி அண்டங்களும், அங் கையில் அகில போகங்களும், புயங்களிற் பிரமனும் விஷ்ணுவும், விரல்களிற் சரச்சுவதி இலக்குமியாதி தேவ மங்கையரும், கழுத்திற் சகல தொனிகளும், வாய்நடு விற் சதுர்வேதங்களும், தந்தங்களில் எல்லா அக்ஷரங் களும், நாவிற் சிவாகமங்களும், அதரத்திற் சப்தகோடி மகா மந்திரங்களும், நாசியில் வாயுதேவனும், விழிகளிற் சூரிய சந்திரர்களும், செவிகளில் திசைகளும், நெற்றியிற் குடிலைப்பொருளும், சிரத்திற் பரமசிவமும் நிலைபெற் றிருக்கச் சூரபன்மன் தரிசித்தனனென்று யுத்தகாண் டத்து ௩௫-ம் அத்தியாயம் மொழிகின்றது.

(உச) 24

௲ட.—குறிஞ்சிவேந்தன் என்பதற் கருத்தமென்னை?

௲௩.—பூதரச்சாரலுறை இறைவனெனவாம். விவ ரிக்கின், பரபருவதமாகிய திருப்பரங்குன்றம், சந்தன சயிலமாகிய திருச்செந்தூரெனுஞ் சீரலைவாய், திருவா வினன்குடிப் பழநிமலை, சாமிமலை யென்று சொல்லப் படுங் குருகிரி யாகிய திருவேரகம், சருவ பருவதங் களுமாகிய குன்றுதோறாடல், அழகர்கோயின் மலை யென்னும் பழமுதிர் சோலையாகிய சோலைமலை எனப் படும் பிரதான ஸ்தலங்களாம் உன்னத ஸ்தானங் களில் அடியவர் மாட்டுறும் அன்பினால் அவர்க் கருள் புரியும் பொருட்டுத் திருக்கோவில் கொண்டெழுந்தருளி யிருக்கும் இறைவனெனவாம்.

சாற்றிய தலங்களாறும் மூலாதாரம் முதலிய தானங்களெனு நியதியால் அவ்வாறுதார தெய்வமாக விருப்பவனெனவாம்.

(உரு) 25

சீட.—குன்றெறிந்தோன் என்பதற் கருத்தமென்?

குரு.—முன்னர்ச் சூரபன்மனுக்குப் பெந்துவாய் மாயவித்தைகளிற் சிறந்து இருடி புங்கவராதியோர் துயர இடர்விளைத்தலைப்பவனையும், பின்னர் அகஸ்திய முனிவர் சாபத்தால் அன்றில் வடிவாய மலையுருப்பெற்று நிற்கின்றவனையுமுள்ள கிரௌஞ்சனைத் தடிவான் உடம்பிடியோச்சினோனெனவாம். இப்பெயரை வட நூலார் "க்ரௌஞ்சஜித்" என்ப.

மாயையின் முக்குணமூல அகங்காரத்திற் பிரதிபலித்த அனேக பிரமாண்டாதிபதியாகிய ஆணவமலமென்னுஞ் சூரனுக்குச் சினேக பெந்துவாயிருந்த முக்குணவிகற்ப அகங்கார கடினத்தை ஞானசத்தியெனும் வேல்கொண்டொழித்த இறைவனெனவாம்.

(உசு) 26

சீட.—கௌரிநந்தனன் என்பதற் கருத்தமென்?

குரு.—கௌரி=கௌரி யென்னும் ஜகதம்பிகைக்கு, நந்தனன்=மைந்தன் எனவாம்.

அண்டங்களை யெல்லாம் அருள்விலாச கருப்பத்தில் வைத்திருந்து என்றுங் கன்னியென வேதம் முறையிட நிற்கின்ற பராசக்திக்கு என்றும் பிள்ளைத்தன்மை பாராட்டியிருக்கின்ற பெரும்பொருளெனப் பொருளாம்.

(உஎ) 27

சீட.—சண்முகன் என்பதற் கருத்தமென்ன?

குரு.—அறுமுகனென்னு நாமார்த்தமே ஆம்.

(உஅ) 28

சீட.—சரவணபவன் என்பதற் கருத்தமெவன்?

குரு.—சரவணமெனு நாணற் புற்கள் செறிந்து சூழுற்ற பொய்கையில், பவன் = தோன்றினவன் என வடமொழியில் அருத்தமாம். சரம் = நாணற்புல்லாக லின், அதனிடை வெளியான சுவாமியைச் சரஜந்மன் எனவுங்கூறுப (சரவணபவன்) என்பது சர+வண+பவ எனப்பிரிக்கப்படுமாயின், ரகரத்தின்முன்வந்த நகரம் ஒருமொழிக்கண்ணதாயின் ணகரமாய்த் திரியுமென்னும் வடமொழி மதம்பற்றி 'ந' 'ண' ஆயிற்றென்க. மந்திர மாக உச்சரிக்குஞான்றும் இந்த "ணகரம்" பொருந்தவே உச்சரிக்கவேண்டும். நார+அயநம் எனப் பிரிக்கப்படு நாராயண சத்தம் மந்திரமுறையில் ஓம் நமோ நாராயணய என உச்சரிக்குமாறு நிற்றலுமுணர்க. சரம் = நாணல் எனும்பொருள் பயக்குங்கால், வநம் = செறிவு, நீர் எனும் பொருள் பயக்கும். பயக்கு மதரான் நாணல் சூழ்ந்த பொய்கை யெனல் கொளப் படும். ச = மங்களம், ர = ஒளி, கொடை, வ = சாத் துவிகம், ந = போர் எனப் பொருள்கொளுங்கால் இவைகளோடு பவன் உதயமானவனே 'சரவணபவன்' என்றலுமாம்.

ஐந்துமுகம் ஆறுமுகமாயினாற்போல ஐந்தக்கரத் துடன் முப் பிரணவத்தையும் ஐக்கியஞ்செய்துள்ள

நாதப்பிரமமாகிய மூலமுஞ் சேர்ந்து "ஓம் நமச்சிவாய" என நிற்பதுதானே "சரவணபவ" என வெழுந்த மோக்ஷமந்திரமாகிய புராதன தாரகப்பிரமமெனும் ஆறெழுத்தாயதனால் அவ்வாறெழுத்திற்கு முடையானெனப் பொருளாம். உற்பத்தி காண்டத்துத் திருவிளையாட்டுப்படலத்தில்,

"நன்முக மிருமூன் றுண்டா னமக்கவை தாமே கந்தன்
தன்முக மாகி யுற்ற தாரகப் பிரம மாகி
முன்மொழி கின்ற நந்த மூவிரண்டெழுத்து மொன்றாய்
உன்மக னுமைத் தோரா றெழுத்தென வுற்ற வன்றே"

எனவருதலுங் காண்க. இவ்வாறெழுத்தையுமே *ஷடக்ஷரமென்பது. இவ்வெழுத்துக்கள் ஏனையவெழுத்துக்களைப்போன்ற வடிவுற்றிருப்பினும் அவைகளைப்போலப் பலனற்றன அல்ல. திருட்டாந்தம், சிதாபாச ஜீவனாகிய மனிதன் தேவனைப்போன்ற வடிவுளனாயினும் அந்தத் தேவனாகமாட்டான் என்று கூறுக. ஆறெழுத்தாயுள்ள இந்த மஹா மநுவைத்தான் வள்ளி தெய்வயானையென்னும் பிராட்டிகளிருவரும் பூர்வத்திற் செபித்தார்களெனச் சம்பவகாண்டம், ௩௬-ம் அத்தியாயத்து ௩௩-ம்

---

* ஷட், அக்ஷரம் என்னும் இரண்டும் ஷடக்ஷரமென வடமொழியிற் புணருமன்றி ஷடாக்ஷரமெனப்புணரா. சிலர் ஷடாக்ஷரமெனச் சொல்லுவதும் எழுதுவதும் வழக்கத்தில் வந்த வழுவாகும். இவ்வழுவொழிப்பைக் காண்டலு மரிதே.

இச் சடக்ஷர மந்திரம்பற்றிய விவரம் அனுட்டிப்பு முதலியவெல்லாம், இந்நூலாசிரியருடைய தகராலயரகசியவுரை, சிவஞானதீபம், திருவலங்கற்றிரட்டின் ௨-ம் கண்டம், சண்முக சகச்சிரநாமத்துறு அங்கந்யாஸம் முதலிய நூல்களிற் காணலாம்.

சுலோகத்தில் "ஸ்ரீ ஸுப்ரஹமண்ய ஷடக்ஷர மகாமந்திரத்தைப் பத்தியுடன் செபித்துக்கொண்டு" என்னும் வாக்கியங்களாலுணர்த்துகின்றது.

(உ௯) 29

சீட.—சிலம்பன் என்பதற் கருத்தம் யாது?

குரு.—நூபுரமெனுஞ் சிலம்பைச் சரணத்திற் றரித்தவனெனவும், சிலம்பெனும் மலைகளிலிருப்போனெனவுங் கூறுப.

சிலம்பெனும் ஒலியாம் நாதஞ்சிலம்ப நடிப்பவனெனவும், நாதனெனவும் பொருளாமாற்றூற் பரவிந்துவின் மேலதாய பரநாதத்தை நடாத்து நாதாதீதனென்பது கொளப்படும்.

(௩௦) 30

சீட.—சுரேசன் என்பதற் கருத்தமென்னை?

குரு.—சூரபன்மன் சிங்கமுகன் தாரகன் பானுகோபன் முதலிய அசுரர் புரிந்த செய்கைகளாற் பதனழிந்துபோய உம்பருலகத்தை மீட்டுஞ் சிறப்புறச் செய்து தேவேந்திரற்கு முடிசூட்டி யிரக்ஷித்தனனாகலின் அந்தச் சுரராகிய தேவர்கட்கு ஈசனெனவாம்.

எஞ்ஞான்றுந் தேவர்கட்கு ஈசனென்பதே சிறந்த பொருள்.

(௩௧) 31

சீட.—சூர்ப்பகைவன் என்பதற் கருத்தமென்னை?

தரு.—சிவனடியாராகிய தேவர், முனிவர்கட்கு இடர் விளைத்த சூரனுக்குச் சத்துருவானவ னெனவாம். சூர் - சூரன் என்பதன் விகாரம்.

சூர் என்னும் அச்சந் துன்பமனைத்திற்குஞ் சத்துரு வெனவாம். இஃது ஆண்டலைக்கொடியோ னென்னு நாமார்த்தத்தில் விளக்கிய இலக்ஷியார்த்தத்தைப் பொருந்தும்.

(௩௨) 32

சீட.—செட்டி என்பதற் கருத்தமென்னை?

தரு.—இவ்வியாசம் ௪௮-வது கடாவிடையிற் சொற்ற உப்பூரி குடிகிழாருக்கு மகனாய் உருத்திரசன்மனெனும் பெயர்தாங்கி வைசிய குலத்திருந்தவன் எனவாம்.

அருளெனும் பொருளை அன்பர்மாட்டளித்துவிருத்தி செய் வருத்தகனாகிய செட்டி யெனவாம். [செட்டு = வியாபாரம். அதனையுடையான் செட்டி.]

(௩௩) 33

சீட.—செவ்வேள் என்பதற்கருத்தமென்னை?

தரு.—செந்நிறமுடைய விரும்பப்படுபவன் எனவாம். ஆண்மக னெனவுமாமென்பர். வேள்—முருகன், மன் மதன் என இருவரிருத்தலிற் பிரித்துணர்த்துவான் நிறங் கணித்து மன்மதனைக் கருவேளெனக் கழறுவதுபோல நிறங்கணித்து முருகனைச் செவ்வேளெனத் தெரிப்ப தாம். கருவேள் தன்னுருவால் தன்றந்தையுருவுங் கறுப் பெனக் காட்டுவன். செவ்வேள், தன் சோதிச் செவ் வுருவால் தன்றந்தை யுருவுஞ் சோதிச் செவ்வுருவெனக்

காட்டுவன். கருவேள், தனது அனங்கனெனும் பெயரால் தன்றந்தைக்கு உடம்புண்டாக்கும் வலியிலையெனக் காட்டுவன். செவ்வேள், தனது வலியால் தன்றந்தைக் கெல்லாவலியு முளவெனக் காட்டுவன். கருவேள், தன்றெழிலால் தன்றந்தையையும் மாயோனெனக் காட்டுவன். செவ்வேள், தன்றெழிலால் தன்றந்தையையும் மாயாதீதனெனக் காட்டுவன். கருவேள், ஆன்மாக்கட்குப் பெந்த மங்கை யிச்சையை யெழுப்புவன். செவ்வேள், ஆன்மாக்கட்கு மோக்ஷ மங்கை யிச்சையை யெழுப்புவன். கருவேள், ஆன்மாக்களைச் சிற்றின்பத் தழுத்துவன். செவ்வேள், ஆன்மாக்களைப் பேரின்பத் தழுத்துவன்.

சோதிசொரூபமா யிருப்பவன் செவ்வே ளெனவாம்.

(௩௪) 34

சீட.—சேந்தன் என்பதற் கருத்தமென்னை?

குரு.—"செக்கருஞ் செம்மையுஞ் சேந்து பாடலமும்" எனப் பிங்கலந்தை கூறுமாற்றானே சேந்து = சிவப்பு ஆகலிற் செந்நிறமுடையான், செந்தழல் வடிவா யிருப்பவ னெனவாம்.

சோதிசொரூப பரம னெனவாம்.

(௩௫) 35

சீட.—சேய் என்பதற் கருத்தமென்னை?

குரு.—செம்மையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் முதனீண்டு முன்னின்ற மகரமெய் யகரமாத்திரிந்த

சொல்லே 'சேய்' ஆகலிற் செந்நிறமுடையான், கட்டிளமையோன், அரன்மகனென்னு மருத்தங்கள் கொள்ளப்படும். "செவ்வாய் முருக னிளமை புத்திரன் — இவ்வா றெல்லாஞ் சேயென விசைப்பர்" என்று சே - திவாகரங் கூறுதலுங் காண்க. சேயென்பதுதானே பாலசுப்பிரமணிய மெனவும் பகரப்படுகின்றது.

அரன்மகனென்னு நாமார்த்தமும், சேந்தனென்னு நாமார்த்தமுமாம். இளமையென்பது என்றும் ஒருபடித்தாயுள்ள முழுமூலசுபாவப்பொரு ளென்பதை யுணர்த்தும்.

(௩௬) 36

சீட.—சேவற்கொடியோன் என்பதற் கருத்த மென்னை?

குரு.— ஆண்டலைக்கொடியோனென்னு நாமார்த்தமே ஆம்.

(௩௭) 37

சீட.— தாரகற்செற்றோன் என்பதற் கருத்தமென்?

குரு.—ஏமகூடபருவத சரகத்திற் கிரௌஞ்சகிரிக் கருகில் மாயமாபுரி யென்னு நகரிலுள்ளவனும், பிரமாஸ்திரத்தை விழுங்கினவனும், விஷ்ணுகோபித்தேவிய சக்கராயுதத்தைத் தனக்குக் கழுத்தணியாகத் தரித்து விஷ்ணுவைச் செயங்கொண்டவனும், சூரபதுமனுடைய அனுசனுமான தாரகாசுரனைத் தடிந்தோனெனவாம்.

இப்பெயர்க்குரிய இலக்ஷியார்த்தத்தை ஆண்டலைக் கொடியோனென்னு நாமார்த்தத்தி லறிக.

(௩அ) 38

சீட.—தாரகாரி என்பதற் கருத்தமென்?

குரு.—இதுவும் தாரகற்செற்றோனென்னு நாமார்த்தத்தையே பொருந்தும். அரியென்பதும், செற்றோனென்பதும் ஒருபொருட் கிளவிகள்.

(௩௯) 39

சீட.—தெய்வயானைகாந்தன் என்பதற் கருத்தமென்னை?

குரு.—தேவேந்திரபுத்திரியாகிய கஜநாயகிக்கு, காந்தன் = நாயகன் எனவாம்.

பிரபஞ்சம் அனைத்தையும் பிரகாசிக்கச் செயற்கு ஆதாரமாய் நிற்கின்ற பிரபஞ்சைசுவரிய சருவாதார சைதன்னிய இலக்ஷணமாயுள்ள தெய்வயானையென்னு ஞானசத்தியால், காந்தன் = சுந்தரமா யலங்கரிக்கப் பட்டவ னெனவாம். காந்தனென்பது எப்பொருட்கும் இறைவனெனவுமாம்.

(௪0) 40

சீட.—தேவசேனாபதி என்பதற் கருத்தமெவன்?

குரு.—சம்பவகாண்டத்தின் ௩உ-ம் அத்தியாயத்து அ, க-ம் சுலோகங்களில் "வேத வேதாந்தங்களின் கரையைக்கண்ட வசிட்டர் முதலிய பிரமவிருடிகள் பிரமாண்டத்தின் மேலுள்ள புண்ணிய க்ஷேத்திர தீர்த்தங்களால் ஜகத்குருவாகிய ஸ்ரீ சுப்பிரமணிய மூர்த்திக்கு, பிரமவிஷ்ணுக்கண் முதலிய சேனைகட்குச் சேனாதிபதி

யாமாறு பற்பல வேதமந்திரங்களை யோதிக்கொண்டு பட்டாபிடேகஞ் செய்தனர்" எனவருமாறு திருக்கந்த கிரியில் அம்முனிவர்களான் முடிசூட்டப்பெற்று "எங்களுடைய ஜகத்பதி! ஜகத்குரு! தேவசேனாபதி!" என விஷ்ணு முதலிய தேவர்கள் போற்றெடுப்ப நனிவிளங்கி யிருந்த சேனானி யெனவும், சிங்கமுகாசுரனைக் கோறல் செய்யு நிமித்தம் எழுந்தருளிய ஞான்று யுத்தகாண்டத்து உ௫-வது அத்தியாயத்துள்ளவாறு பிரமன் கொடுவந்து வைத்த இரத்தினப் பாதுகைகளைத் திவ்விய திருவடிக் கமலங்களிற் பூண்டு அரிபிரமர்கள் *மலர்மாரி சொரிய; இந்திரன் சாமரமிரட்ட; சந்திராதித்தர் தரளக்குடைகள் கவிக்க; அக்கினிதேவன் பகற்றீவத்தி பிடிக்க; நமன் வாளேந்த; நிருதி காகளமூத; வருணன் படிக்கமேந்த; குபேரன் பொன்வெள்ளிலைப்பெட்டி சுமக்க; ஈசானன் சூலம் பிடிக்க; ஏனைத்தேவர்கள் ஆலவட்டமசைக்க; வாயுதேவன் தேர்நடத்தச் சென்ற சேனானி யெனவு மாம்.

சம்பவகாண்டத்தின் ௩௫ - ம் அத்தியாயத்து உச - ம் சுலோகத்தில் "மகாசேனைகளாகிய ஆத்துமத்திரள்கள் அந்தரங்க புத்தியோடு நமற்கரித்து அவனது சுவாதீனத்தி லிருக்கின்ற காரணத்தால் (பரமேசுரியாகிய) உன் திருமகன் மகாசேன னெனப்படுகின்றான்" என வருமாறு தேவசேனாபதி யென்பது ஆன்மாக்களை ஆளுநாயக னெனவாம்.

(௪௧) 41

சீட.—பாவகி என்பதற் கருத்தமென்னை?

---

* மலர்மாரி சொரிதல், தீவத்திபிடித்தல்; காகளமூதல், சூலம்பிடித்தல் என்பன தென்மொழிப்புராணத்தில் இல.

தரு.—அங்க முடையானை அங்கியென்பது போலப் பாவகமெனும் அக்கினியை உடம்பாக வுடையானைப் பாவகி யெனலாம். அவ்வக்கினி, சிவபிரானுடைய நெற்றி நேத்திரத்தினின்றெழுந்த தேஜசு எனவறிக. பகவானாகிய முருகையனுக்குப் 'பாவகாத்மஜன்' என ஒரு பெயரும் வடநூலார் வழங்குப. அஃது அக்கினி குமாரன் அக்கினிபூ வெனும் அருத்தந் தரும். இவ் வருத்தங்கொண்டே சம்பவகாண்டத்தின் ௩௫ - ம் அத்தி யாயம் கஉ-வது சுலோகத்தில் "அடியார்களை (க் கருவி கரணபந்தங் கடத்தி அந்தமாகிய) [நுனி] அக்கிரத் திற்குக் கொண்டுவருதலின் (பரசிவமாகிய) நாம் அக்கினியாவோம். (உமையாகிய) உன் மகன் நம்மி னின் றுவிர்ப்பவித்தது பற்றி அக்கினிபூ வெனப் படுகின்றான்" எனவும், கங - வது சுலோகத்தில் "எமது வீரியம் மேனோக்கிச் செல்லாநின்ற அக்கினிநேத்திரத்தி னின் றுவிர்ப்பவித்தமையாலும் (குமாரனை) அக்கினிபூ வென்னலாம்" எனவும், கச-வது சுலோகத்தில் "எமது தேஜசை அக்கினிதேவ னெடுத்துச் சென்றமையாலும் (தேவீ!) உன் மகனை அக்கினிபூ வென்னலாம்" எனவும் வருவன காண்க.

பாவகமெனும் வடசொல் சுத்தமெனும் பொருள் பயக்கும். ஆகலிற் பரிசுத்தமுடையான் பாவகியென வாம்.

(சஉ) 42

சீட.—மஞ்ஞையூர்தி என்பதற் கருத்தமென்னை?

தரு.—மஞ்ஞை = மயில்; ஊர்தி = வாகனம் எனும் பொருள் பயத்தலின் மயில்வாகன னெனவாம். இவ் வாகனம், சூரபன்மனோடு சமர்புரியுஞான்று வாகனமா

யுற்ற இந்திரனுகியமயிலேயும், அச்சூரபன்மனுடைய ஒரு கூற்றி லெழீஇ வந்த மயிலேயும் உளப்படுத்திக்கொள்ளும். மயிலே மஞ்ஞையென்பது திசைச்சொல்.

நானுவித விசித்திரதர அலங்கார முக்குணப் பிரபஞ்ச நாமரூப விலாசமான கலாபத்தை விரித்தாடாநின்ற மகாமாயை யெனும் மயூரத்தி லெழுந்தருளியிருப்பவ னெனவாம். மயூரம் = மயில்; வடகிளவி.

(௪௩) 43

சீட.—மாயோன் மருகனென்பதற் கருத்தமெவன்?

தரு.—மாயோனெனும் பெயரிய திருமாலின் சோதரியாம் பார்வதியாருக்குப் பிள்ளையெனு முறையினிற்பது போல அத்திருமாற்கு மருகனெனு முறையினிற்போனெனவாம். அற்றுகலினன்றே "அனுதினம் விழிதுயில்பவர் தங்கச்சிக்கொரு புதல்வோனே" என்றுர் அருணகிரிநாதரும். மருகன் = மருமகன்.

கிருபா சொரூப சத்தி குமாரனெனவாம். ஆனந்தப் பொருளென்னலாம்.

(௪௪) 44

சீட.—முருகன் என்பதற் கருத்தமென்னை?

தரு.—முருகு என்பது இளமை, வாசனை, தேன், அழகு, திருவிழா எனும் பலபொருளொரு சொல்லாம். ஆகலின், என்றும் இளமையுடையான், தெய்வத் திருமணங்கமழு மேனியன், கட்டழகுடையான், திருவிழாவுக்குரிய தேவனுயிருப்போன் முருகனெனவாம். இளமையுடையோனென்பது அரன்மகன், கௌரிநந்தனன், சேய்

என்னு நாமார்த்தங்களையு நல்கும். தேன் இன்பப் பொருளில்லைத் தெண்ணப்படுமாற்றானே ஆனந்த சொரூபன் முருகனெனவுமாம்.*

(சரு) 45

சீட.—முருகு என்பதற் கருத்தமென்ன?

குரு.—முருகனென்னு நாமார்த்தமே ஆம்.

(சசு) 46

சீட.—வரைபகவெறிந்தோன் என்பதற் கருத்த மென்னேயோ?

குரு.—குன்றெறிந்தோனென்னு நாமார்த்தமே ஆம். அங்ஙனம் பகவெறிந்தோனென்பதற்குப் பிளவுபட வெறிந்தோனெனப் பொருள் கூட்டிக்கோடல்வேண்டும். வரை = குன்று.

(சஎ) 47

சீட.—வள்ளிமணாளன் என்பதற் கருத்தமென்னை?

குரு.—வள்ளி = (வள்ளி மலையில் வள்ளிக் கொடி படர்ந்த பாங்கர் நடுவின் மானீன்ற காரணத்தான்

---

*தமிழ் எனும் பெயரிய ஒரு சிறுபுத்தகத்திற் "காட்டேறி, பேய், பூவாடைக்காரி" என்னும் பெயர்களோடு "முருகன்" என்பதையுங் கூட்டிக்கொண்டு (இத்தேவதைகள் பண்டைக் காலத்திற்) "சில்லரைத் தெய்வங்களாக வணங்கப்பட்டு வந்தன" என வரைந்தார் கூற்று, சிலைபேறுறல் இவ்வாற்றானும் மற்றெவ்வாற்றானுங் கூடாதன்றே.

வள்ளியெனும் பெயர்பூண்ட) வள்ளிமா தேவிக்கு மணாளன் = மணநாயகன் எனவாம். வள்ளி 'லவலி' என்றுஞ் சொல்லப்படும். வடசொல்லாகிய லவலி என்பது வள்ளிக்கொடி யெனும் பொருள் தரும்.

சரியை கிரியையின் பயனெனும் விசேஷ செல்வங் களாகிய குசுமங்கள் (=பூக்கள்) விகசிக்கத்தக்க வல்லி யெனுங் கிரியாசத்திக்குத் தலைவனெனவாம்.

(சஅ) 48

கேட.—வாகுலேயன் என்பதற் கருத்தமெவன்?

தரு.—வாகுலை = கார்த்திகை. அதனாற் கார்த்தி கேயனென்னு நாமார்த்தமேயாம். 'பாஹுலேயன்' என் னும் வடமொழி தென்மொழியில் வாகுலேயன் எனத் திரிந்தது.

(சகூ) 49

கேட.—விசாகன் என்பதற் கருத்தமென்னை?

தரு.—வடநூல்களில் 'விசாகநக்ஷத்ர ஜந்மன்' எனச் சொல்லப் படுதலினால் வைசாகமெனும் வைகாசி மாதத்து விசாகநக்ஷத்திரத்திற் றோன்றினவ னெனப் படுமெனச் சிலர் கூறுப. வி = பக்ஷி, சாகன் = சஞ் சரிக்கிறவன் என வடநூலிற் பொருளாதலிற் பக்ஷி வாகனன் = மயில் வாகனனென்ப தினிது பொருந்தும்.

ஸம்ஸ்க்ருதத்திற் சருவ வியாபியாகிய சிவனுக்கு 'விசாகன்' எனும் அங்வர்த்த நாமமொன்று சொல்லப் படுதலால், அச்சிவனே முருகன், அவன் சருவ வியாபி யென இந்நாமம் விளக்கவுளதாம்.

(௫௦) 50

சீட.—வேலன் என்பதற் கருத்தமென்னே?

குரு.—பரமபதியாகிய பரமசிவனளித்த படையர செனும் வேற்படையை யுடையா னெனவாம்.

மணிகண்டனாகிய சிவபிரான் திருக்கரத்தில் இச்சை ஞானம் கிரியையென்னு மூன்று சத்திகளை விளக்குவதாய் அஸ்திரதேவரூபமாய்த் திரிசூலமிருப்பது கடுப்ப, திரிவிதபேதங் காட்டாமலொன்ருய் விளங்கும் அகண்ட சிற்சத்தியையே அஸ்திரதேவரூபமா யுடையானென வாம். சிற்சத்தி யென்பது ஞானசத்தி; அதனல் முருகப் பிரபுவை 'ஜ்ஞாநசத்திதரன்' எனவும் வட நூலார் கூறுப.

(௫௧) 51

சீட.—வேலிறைவன் என்பதற் கருத்தமென்னே?

குரு.—வேலனென்னு நாமார்த்தமே ஆம். இறை வன் = கடவுள்.

(௫௨) 52

சீட.—வேள் என்பதற் கருத்தமென்னே?

குரு.—செவ்வேளென்ற பெயர்ப்பொருளில் வேளென் றதற்காய தாற்பரிய முறும்.

(௫௩) 53

சீட.—அக்கினிகருப்பன் என்பதற் கருத்தமென்னே?

குரு.—அக்கினிபூ வெனவாம். ஆதலிற் பாவகி யென்னு நாமார்த்தமே ஆம். கர்ப்பம் - கருப்பமென விகாரப்பட்டது.

(ருச) 54

சீட.—கதிரையீசன் என்பதற் கருத்தமெவன்?

குரு.—அடியவர்க்கருள்புரியு நிமித்தம் இலங்கைத்தீவி லுள்ள கதிர்காமமெனுந் திவ்வியக்ஷேத்திரத்தில் திருக் கோவில்கொண்டெழுந்தருளியிருக்குங் குமாரசுவாமிக்கு உற்ற திருப்பெயரெனக் கூறலாம். கதிரையீசன் என் பது 'கதிரேசன்' எனவும் மரீஇ வழங்கப்படுகின்றது.

(ருரு) 55

சீட.—சங்கத்தலைவன் என்பதற்கருத்தமென்கொல்?

குரு.—கலையுணர்புலவ னென்னு நாமார்த்தமே ஆம். சங்கம் = சவை, புலவர்.

(ருசு) 56

சீட.—சாமி என்பதற் கருத்தமென்ன?

குரு.—'ஸ்வாமி' என்னும் வடமொழி, தென்மொழி யிற் சாமியென விகாரப்பட்டது. சுவாமியென்றுஞ் சொல்லப்படும். ஸ்வம் = சம்பத்து. அதனையுடையான் ஸ்வாமியெனவாம். அந்தச் சம்பத்து, பரம சம்பத்தாக லின் ஆன்மகோடிகட்கு அதனை அருளாலருள் பரம குருவென்று பொருள் படுத்தப்படும். அதனல், ஆசா னென்னு நாமப் பொருளையும் பொருந்தும். வேதத் தில் வெளிப்படும் ஆன்ம குகையி லிருத்தலிற் குக னென்னும் பெயர் குமரனொருவனுக்கே வழங்கப்படு தல் போல இந்தச் சாமியெனும் பெயரும் அவனொரு வனுக்கே வழங்கப்படுவதாயிற்று. அதனலன்றோ சரவணபவ னிருக்குஞ் சயிலம் சாமிமலையென விளங்கு கின்றது. ஆகலின், மகேசுரனடியாரை மகேசுரரெனச்

சொல்லுமாற்றாற் சாமியினடியாரைச் சாமிகளெனச் சொல்லலும் மரபே. இதனை ஏனையோர்க்குச் சொல்லு வதும், யாதொரு பெயரோடு புனைவதுஞ் சிறப்புண் டாக்கும் பொருட்டே ஆம். என்னை? அந்நுவற்சி அத்துணைச் சிறப்பிற்றாகலின்.

(ருஎ) 57

சீட.—முத்தையன் என்பதற் கருத்தம் யாது?

தரு.—முத்து = (மணி விசேடம் போல) மேம்பட்ட, ஐயன் = குரு எனப் பொருளாமாற்றானே பரமாசாரி யன் எனவாம். இத்திருநாமம், சிறந்த மேன்மையெல் லாம் விளக்கும் பெற்றியதென்க.

(ருஅ) 58

சீட.—அரன்மகனாதியாய் முத்தைய னிறுதியாயுள்ள நாற்பத்தெட்டு நாமங்கட்கும் அருத்த மருளிச்செய்தது போலச் சுப்பிரமணியன் என்னு நாமத்திற்கு மருளிச் செய்யவேண்டும்.

தரு.—சுகுணம் எனும் பதத்திற் குணத்திற்குமுன் வரும் (ஸு) சு - எனும் உபசர்க்கம் விசேடார்த்தம் பயந்து நிற்பது போலவே (ஸுப்ரஹ்மண்யஃ) சுப்பிர மணியன் எனும் பெயரிலே பிரமணியனுக்கு முன்வரும் (ஸு) சு உம் விசேடார்த்தம் பயந்து நிற்பதாயிற்று. பிர மணியன் என்பது பிராமணர்கட்கும் வேதத்திற்கும் முக் கிய தேவ னெனவாம். ஆதலின், சுப்பிரமணியனென்பது அங்ஙனம் விசேட தேவனெனவாம். பிரமாணம்—சம்பவ காண்டத்தின் ருகு-ம் அத்தியாயத்து உ0-ம் சுலோகத்திற் "பிராமணர்கட்கு அல்லது வேதங்கட்கு யாம் முக்கிய

தெய்வமாகலின் யாம் பிரமணியமாவோம். பிரிய நாயகீ! குமாரன் அங்ஙனம் விசேடஞகலிற் சுராசுரர் களால் வந்திக்கத்தக்க சுப்பிரமணியனெனப்படுகின் ருன்" எனப் பரமசிவன் பார்வதியம்மையை நோக்கிப் பகர்ந்ததாக வருதல் காண்க. இதனுனே, சுருதியில் நாதப் பிரமமாகிய பிரணவ சப்த சக்தியாற் பிரண வத்தின் பூரணப் பொருளாகப் பரமசிவனுபதேசிக் கப்பட் டிருப்பது போலச் சுப்பிரமணியமு முப தேசிக்கப்பட்டிருக்கின்றது; அந்தச் சிவற்குஞ் சுப் பிரமணியத்திற்கும் அணுமாத்திரமேனும் வேற்றுமை யில்லையென அறியலாம். வேதம் விளம்புகின்ற இந்தச் சுப்பிரமணியமெனு நாமமொன்ருலேயே வேதத்திற் பிரதிபாதிக்கப்படுகிற பிரமமெனும் பரம்பொருள் குமாரனெனக் கரதலாமலகம்போற் காண்பர் கரிலி லார். சருவான்மாக்களிலும் அந்தரான்மாவாய் அத் துவைதமாயிராநின்ற குஹன் எனுந் தொனி எப்படிக் குமாரசுவாமிக்குச் சுதந்திரநாமமாக விளங்குகின்றதோ, அப்படியே விசேடப் பிரம சப்தமாகிய சுப்பிரமணிய நாமமும் அவனுக்குச் சுதந்திரமாக விளங்காநிற்கும்; ஏனைய மூர்த்திகட்கு அன்னணம் விளங்குவதன்று. பிரமா, பிரமசத்தத்தால் விளங்குகின்ருரேயெனின், அவர் பிரணவார்த்தம் வழுவாயுரைத்துக் குமாரனுற் குட்டப்பட்டுப் பெருஞ்சிறையிருந்ததனுல் அப்பிரமப் பெயர் அவர்க்குச் சொந்தமாகமாட்டாதென்க. இந்தப் பிரமசத்தம் வேதம், வேள்வி, பெரிது எனவும் பொரு ளாம். ஆதலாற் பிரமநாமத்தையுடைய சுப்பிரமணி யன், வேதநாயகன், வேள்வி நாயகன் எனவுங் கூறப் படுவன். பிறிதொரு பெரிதென்பது உலகமாகவு மிருத் தலின் அஃது அறிவுடைமைச் சித்தெனும் பசுக்க ளெனவும், அறிவின்மை அசித்தெனும் பாசமெனவும்

இருதிறப்படும். அங்ஙனம் இரண்டனையும் ஆளுகின்ற பதிப்பொருள் சுப்பிரமணிய மெனவுமாம்.

ஸு = ஆனந்தம், ப்ரஹ்ம = பரவஸ்து, (ண்யம்) ண்யம் = அதினின் றுதித்துப் பிரகாசிப்பது என வட நூலிற் பொருளாகும். ஆகவே *"ஆனந்தம் ப்ரஹ்மம்" என்றுபதேசித்த சுருதிப்படி ஆநந்தத்தையே சொரூப லக்ஷணமாகவுள்ள அவிகார பரவஸ்துவின்பாலுதித்து ஞானப்பிரகாசம், ஞானகாசப்பிரகாசம், சருவஞான வியாபகப்பிரகாசம், சுத்தஞானசாக்ஷிப்பிரகாசம், சருவ பரிசுத்த பிரமஞானனந்த அருட்பிரகாசம், அனாதி நித்தியப்பிரமஞானனந்த சிவப்பிரகாச மென்றோதவுள்ள பரஞ்சோதியாய்ப் பிரகாசிப்பதான அனுபவ சொரூபமே சுப்பிரமணியமென் றறியவேண்டும். இதனால், சுப்பிரமணியமெனும் ஆனந்தம் வெளிப்படுதற்கிடமாயிருக்கின்ற தந்தை, சத்தான பிரமமெனவும் அது சிவமெனவும் அதனாற் சிவமே பிரமம் சுப்பிரமணியமே பிரமகுமாரன் சிவகுமாரனெனவுமாம்.

இந்தச் சிவானுபவ சொரூபமாகிய சுப்பிரமணியத்தை எந்த யோகியும் எந்த ஞானியும் அதனருளாற் காணாது கரிசறு கதியடைவது எஞ்ஞான்றும் இல்லையென்பதாக யாஞ் சத்தியமா யுனக்குரைத்தேம். இந்தத் தரிசனத்தையே சிவதரிசனமென்றும், பரவஸ்து தரிசனமென்றும், பிரம தரிசனமென்றும், சோதி தரிசனமென்றுஞ் சிலர் சொல்லுவதுமன்றிப் பல பாடையிற் பலவிதமாகவுஞ் சொல்லுவர். நிற்க.

புராணத்தில் "அசிந்த்யசக்திః" என்னு நாமத்தை முதற்கட்கொண்டுள்ள ஷண்முக ஸஹஸ்ர நாமங்கட்கும்

---

* "ஆநந்தம்ப்ரஹ்ம" என்றுபதேசித்த சுருதி, தைத்திரீயோபநிஷத்தின் ஆநந்தவல்லியாம்.

ஏனைய அனந்தநாமங்கட்கும் வழங்கியவாறு வாச்சி யார்த்தமும் இலக்ஷியார்த்தமுங் கண்டுகொளல் கருத் துளார் கருத்தன்றோ.

(ருகூ) 59

சீட.—ஸ்ரீமத் - அருணகிரிநாதர், கந்தரனுபூதியில்—

"நாதா குமரா நமவென் றரனார்
ஓதா யெனவோ தியதெப் பொருடான்
வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே"

என மொழிதருமாறு சிவபிரானுனவர் சிஷ்யபாவங் கொண்டு "நாதா குமரா நமஃ" எனத் துதித்து நமற் கரித்துச் செவிசாய்த்து நின்று பிரணவத்திற்குப் பொருள் ஓதுவாயாக என; அதனை உபதேசித்த பரமாசாரியராகிய பாலசுப்பிரமணியர் அங்ஙனம் ஈசு வரற்கும் நாதனென வாயினர். ஆகவே இரண்டுமொன் றென்று முடிக்கும் யாதொரு முடிவு இவ்வுழிப் பேதி யாதோ?

தரு.—பிரமதேவன், குழந்தையென அவமதித்துத் துயருழந்ததுபோல மற்றையோரும் ஆகாமற் பரப்பிரம மாகிய பால சுப்பிரமணியத்தை ஞானகுருவென் றறிந் துய்யு நிமித்தமும், ஞானதீக்ஷையில் இளமை முதுமை யின்று; தந்தையும் புதல்வரிடத்து ஞானம்பெறலாம் "சுதனே குருவாஞ் சுவாமிநா தற்கெனி — னதிகமெய்ஞ் ஞான மல்லவோ வென்றேன்" எனத் தாயுமானுர் சொல்லினரென அருளையர் அதிர்ப்பது கடுப்ப ஞானமே பெரிது அதைப்பெற்றுக்கொள்ளுஞ் சீடரிலக்கணம் இத் தன்மைத்தென எவருமறியு நிமித்தமும், அஃது உலகில்

அபிவிர்த்தியாகிவரு நிமித்தமும் ஐந்தொழில்களுள் அனுக்கிரகத்தையும் ஒருதொழிலாகக் கொண்டுள்ள கடவுள் தாமே சீடராகவும் அவரே ஆசிரியராகவும் நின்று அருணடக நடித்துக் காட்டினாராகலின் அது பேதியாதன்றே. ஆயின், இவண் ஒன்று விசேடமென் றுணர இடனுண்டு. அதாவது, கல்லாலின்கண் ணெழுந் தருளியிருந்த பரமாசாரியரே சிஷ்யபாவஞ் செய்தபடி யாற் குருமூர்த்தங்களுள் குமாரகுரு வடிவு பிரதான மென்பதறிவிக்கப்பட்டது : அக்கருணைவழி யாவரும் எளிதிற் பேரின்பப்பேறு பெறலாமென்பதே.

ஈதறியாதார், சிவன் சத்தி குமாரனென்பார் நடிப் பிற் காணப்படும் யாதொரு சரிதத்தை உலக வியவ காரம்போல்வதா யருந்தம் பண்ணி இங்ஙனங் குமாரன் பெரிதென்றும், அங்ஙனஞ் சத்தி பெரிதென்றும், இங் ஙனஞ் சிவம் பெரிதென்றும் பெரு மயக்கங்கொண் டுழலுவர்.

(சூ0) 60

சீட.—சருவ சத்தித்துவ முள்ள கடவுள், குமார மூர்த்தங் கோடற்குத் திருவுளங்கொளின், அந்நிமிடமே பன்னிருகரமுறு ஆறு முகத்திருவுருக் கோடலாமே. அது தவிர்த்து அனற்கடவுள் வளிக்கடவுள் வழியாப் புனற்றடமருவி மிளிர்ந்ததென்ப தென்கொல்?

ஆரு.—அறியாது கடாயினாய்! காரணமின்றிக் காரிய மொன்றுமின்று. யாவையுஞ் சுடும் அக்கினியையுஞ் சுடத்தக்கது சிவதேஜசு. அதனைக் குளிர்ந்த காற்று லாற்றும் வலியுடை வாயுவும் ஆற்றுந் திறலுடைய தன்றெனப் பிறர்க்கறிவுறுத்துவான், அவைகளின் கட

வுளர்களால் அத்தேஜசுகள் சுமக்கப்பட்டனவெனலாம். *சரவண இலஞ்சியின் மீனுய்க் கிடக்கின்ற பராசர புத்திரர் அறுவருக்குமுற்ற சாபந் தவிர்த்தருள்வான், அப்பரஞ்சுடர்கள் பாகீரதித்தட மடைந்தனவெனலாம்.

---

* இந்தச் சரவண இலஞ்சி இமயமலையிலிருத்தலின் இதனை யடுத்துத்தானே நெற்றிக்கட்பொறிகளாறையுந்தந்த முகங்களுடைச் சிவனுருறை கைலாயமலை யிருத்தல் வேண்டும்; அஃது அப்பிராகிருத சிவலோகமாதல் யாங்ஙனம்? என்று சித்தாந்த சைவரெனத் தம்மைக் கூறிக் கொள்ளுஞ் சிலர் கடாவுகின்றனர். அவரை நோக்கி நுங்கருத்துப்படி சரவண இலஞ்சியை அடுத்துளது விண்ணுறுஎக் கைலாய சிவலோகமு மல்லாத இமயமலைக்கப்புறத்து வடகீழ்த்திசைக் கண்ணதாய (பூலோக கைலாயமெனும்) கைலாயமலையேயாமென்பதேற் படுமாகலின் விண்ணுறு கைலாயத்தை இலஞ்சிக்கு அண்மைப் படுத்தி யிழுக்கங்கூறவெண்ணும் நுங்கருத்து நிரம்பாதென்றும்,

(ததூர்த்வமுந்மநாலோகாத் ஸோமலோகமலௌகிகம்
ஸோமஸ்ஸஹோமயாயத்ர நித்யம்நிவஸதீச்வரః|
ததூர்த்வமுந்மநாலோகாத்யம்ப்ராப்யேநநிவர்த்ததே||)

"உன்மனுலோகத்திற்கும் மேலாகவுள்ளது அந்த அலௌகிக சோமலோகம்: உமையோடேய்ந்து சோமனெனவிருக்கும் ஈசுவரன் எச்சோமலோகத்தில் வசிக்கின்றனனே அது நித்தியம்: உன்மனுலோகத்திற்கும் மேலாயுள்ள அவ்வுலகத்தினை அடைந்துளோன் பிறவியினின்று நீங்கினவனுவன்" எனச் சைவபுராண வாயுசங்கிதையின் உத்தரபாக மோதுகின்றதென்றும் அவர் வாயை அடக்குக. இதன் விவர விரிவுகளைத் திட்பத்திற் கடவுள் வணக்கச் செய்யுளுரையிற் கண்ணுறலாம். துவாதசாந்தத்தின்மேலே கந்தன்றந்தை யிருக்கின்றனனென் பதைத் துவாதசாந்தத்தலமாகிய மதுரையுமுணர்த்து மென்பதை யறியீர்கொலோ? எனக்கடாவியும் அவர்கடாவை மறுக்க.

இன்னும் பல காரணங்கள் பரமனுள்ளத் திருத்தல் கூடுமெனவும் ஊகிக்க வேண்டும்.

(சுக) 61

சீட.—நன்று. சூரசங்காரத்தைப் பராபரனுகிய பஞ்சமுகப் பிரமந்தானே நேரி லாற்ருது, சண்முகத் திருவுருவங்கொண் டாற்றிய தென்பதென்னே?

குரு.—அவ்வசுரர்க ளயர்ந்த அருந்தவத்திற்கு அப் பெருமா னிரங்கி அவர்கள் நோக்கம்போலத் தனது சரீரமாகிய சமத்த தேவர்களையும் வென்றிகொளத் தக்க பராக்கிரமத்தையுந் தலைமையையும் வரமா யீந்த நிமித்தஞ் சத்தியைத்தானே ஒரு முகமாகவுடைய ஆறு முகத் திருக்கோலங்கொண்டு அமர்விளைத்தான். அவ் வமர், சிவதவப் பேற்றைச் சிவமே மாற்ற முயன்ற தென்றறி. சமத்த தேவர்களுஞ் சிவனுடைய சரீரமா யிருக்கிருர்க ளென்பதைக் கூர்மபுராணந் தெற்றெனத் தெரிக்கும்.

(சுஉ) 62

சீட.—அற்றேல், ஈசுவரன் அழற்கண் சுடராறையுந் தருபோழ்து அறுமுகமா யிருந்தனனென்று தானே புராணந் தெரிக்கின்றது. அம் முகங்கொண்டசுரரை அட்டிடாததென்னே?

குரு.—வீரயாகமெனத் தனது சரீரத்தின் மாமிசங் களையே சமித்தாகவும் உதிரத்தையே நெய்யாகவும் யாகாக்கினியில் ஆயிரம் வருடஞ் சொரிந்தெரிக்கும் ஆற்றலும், விண்ணிலெழுந்து யூபஸ்தம்பத்தின் நுனி யில் விழுந்து கபால மூளைகிழிய வுருவிக்கொண்டு அவ்

வக்கினியில் உடலெல்லா மெரிந்தழியச்செய்யு முறுதியு மாய அரிய கருமங்களை ஆற்றிய அசுரர்கோற்கும், அரிய தவங்களைச்செய்த அவன் சகோதரர்கட்கும், பரமேசுரர் பரமேசுவரி சமேதராக விருடபத்தின் மிசைத் தரிசனங்கொடுத்துப் பற்பல ஆயுதங்களையும் பதினையிரங்கோடி சங்கியைகொண்ட சதுரங்க சைனியங்களையும் வாக்குவலியா லுண்டாக்கிக்கொடுத்து வேண்டிய வரங்களையு முதவியபோது, ஆசுர காண்டத்தின் ௲ - ம் அத்தியாயத்தில்—

"அபிவாஸமரம்ப்ராப்ய விநாமச்சக்திமவ்யயாம் |
அந்யைஸ்ஸுரகணைர்நாசோ மாஸ்துவோ
[மரணந்த்ருவம் ||"

"விஷ்ணு முதலிய எல்லாத் தேவரோடு முனக்குப் போர்நேரினும் நமதழிவற்ற சத்தியாலன்றி மற்றை யாவரானு முனக்கு நாசமுண்டாவதில்லை; ஆனாலுனக்குச் சத்தியமாகச் சாவுண்டு" என வருமாறு திருவுருவெடுத்ததென்றும், அது சைவம் பாசுபதம் வாமம் பைரவம் காளாமுகம் மஹாவிரதம் என்னும் உட்சமயமாறுக்கும் அதீத வைதிக சைவசித்தாந்த மார்க்கத்திற்கும் உரிய கதிகளளித்தற்காய காரண பிரசன்னமென்றும், சிவபெருமாற்கு ஐம்முகமன்றி மற்றொரு முகமுண்டு-அஃது இரகசியமேயன்றி வெளிப்படையன்று - தேஜசுகளை வெளியிடும்போதும் அது பிரசன்ன இரகசியமே - அந்த இரகசிய முகசத்தி வேறுருவாய் வெளிப்பட்டுப் பிரகாசித்ததே ஆறுமுகத் திருக்கோலமாகும் - அதுவே புதுவதல்லாப் புராதனம்- அதுவே அசுரரை முடித்ததென்றும் ஓர்தி.

சீட.—சிவன்பாற் பிரசன்னமான பைரவர், வீரபத்திரர், விக்கினேச்சுரர், சாஸ்தா முதலான மூர்த்திகளொடு சேர்ந்தவொரு மூர்த்தியாகத் தானே கந்தபிரானையுங் கணிக்கவேண்டும். கந்தபிராற்கு மட்டும் பரத்துவம் பகர்வதென்னை?

குரு.—நீ வெளியிட்ட மூர்த்திகள்மாத்திரஞ் சிவன்பாற்றோன்றினவரல்லர். காமிகாகமத்திலும் ஞானசங்கிதையிலுமுள்ளபடி கௌசிகர் காசியபர் பரத்துவாசர் *அத்திரி கௌதமரெனும் ஆதிசைவ வேதியராகிய ஐந்திருடிகளும், வேறு புராணங்களிலுள்ளபடி துர்வாச முனிவரும், ஜலந்தரனென்னும் அசுரனும், இன்னும் பலரும் அன்னணந் தோன்றினவர்களே. இன்னோருள் ஜலந்தராசுரனை யாதொரு சீவான்மாவென்பதிற் சந்தேகமேயில்லை. யாதொரு பிந்துவில் யாதொரு சீவான்மாவானது ஈசுரனாணையால் †உருக்கொளல் போலச் சிவசீற்றத்திற் சிவசங்கற்பத்தால் அவ்வசுரனுமுருக்கொண்டவனாயினன். இன்னணமே யாதொரு காரிய நிமித்தம் யாதொரு மூர்த்தஞ் சிவாங்கிசத்தில் ஏற்றங் குறைவாக வுண்டாயிற்றெனவறியவேண்டும். அவ்வாறுண்டாய மூர்த்தங்களுள் ஒன்றையொக்குமென்று கந்தமூர்த்தத்தையுங் கணிக்க இடனின்றிச் சிவ பரிபூரணத்துவந் தெற்றெனச் சுருதிகளாற் கோடிக்கப்படுதலின், அம்மூர்த்தி பிரணவப்பொருளாய சச்சி

* சில நூல்கள், அத்திரியை நீக்கி அகத்தியரைச் சொல்லும்.

† இப்படியுருக்கொள்ளுதலிற்றானே கண்ணுடியிற்றோன்றிய சிவபெருமானது சக்கரத்தினையுடர்பாகக்கொண்ட ஆலாலசுந்தரர் வரலாறும் வைத்தெண்ணப்படும்.

தானந்த பரப்பிரமமே ஆவர். அவரைப் பிரணவப் பொருளாகச் சொல்வதுபோல விக்கினேச்சுரரையுஞ் சுருதிகள் சொல்லுகின்றன., அதனாற்றான் அவ்விக்கி னேச்சுரமூர்த்தி சிவபிராற்கு மூத்தபிள்ளையாராயினர். சத்தையுஞ் சித்தையும் நீங்காத ஆனந்தந்தானே சித்தின் பூரிப்பாக மூத்தபிள்ளையாராகவும், சத்தின் பூரிப்பாக இளைய பிள்ளையாராகவும் விளங்காநிற்கு மென்க. இந்நியாயத்தைச் சித்தாகிய உமையவ ளுருவினின்று விநாயகர் வெளியாயினா ரெனச் சைவ புராண ஞானசங்கிதை ௩௨-ம் அத்தியாயத்துப் ௧௭, ௧௮-ம் சுலோகங்களிலும், சத்தாகிய சிவபிரானின் இலலாட நேத்திரத்தினின்று கந்தர் வெளியாயின ரெனக் ஸ்காந்தபுராணத்தும் வருஞ் சரிதங்களாற் றெளிக. ஆன்மாக்களை யிரக்ஷிக்குநிமித்தந் தந்தையாகவுந் தாயாகவுங் குமாரர்களாகவும் விளங்கியுள்ள மூர்த்தங் கள் பிரணவ சொரூபத்தில் அடங்கும். அந்தப் பிரண வப்பொருள் கந்தசுவாமியாகலின் அது சிவமயமாயும், சத்திமயமாயும், கணபதிமயமாயும் விளங்கும். அத னானே சத்தியாக நாடினார்க்குச் சித்தியின்பத்தையும், சிவமாக நாடினார்க்கு முத்தியின்பத்தையும் நல்கு முழு முதற் பரம்பொருள் முருகவேளென அறிதி. இன்ன மும் தன்வயத்தனாதல், முதலிலனாதல், உடம்பில னாதல், எல்லாநலமு முளனாதல், எங்கணும் வியாபக னாதல், எவற்றிற்குங் காரணனாத லெனும் ஐசுவரிய குணம் ஆறையு முடைய ஷாட்குண்யன் சரவணபவ னெனவுமுணர்.

இம்மூர்த்தி, சிவாலயங்கடோறுஞ் சத்தியையுஞ் சிவத்தையும் நீங்காதிருத்தலினால் இம்மூர்த்தியைச் சிவாலய வழிபாடுசெய்யும் யாவனொருவன் சத்தியை வழி படுவதுபோல அவசியம் வழிபடல் வேண்டும். செய்யா

விடிற் சிவத்தை அவமதித்த அதிபாதகமெய்தும். மூன்றுமொன்றென முடித்த முடிவில் இப்படிப் பேத முண்டாக்குவதென்? எனின்,—அங்ஙனம் விலக்கி வழி படுதல் பேதமாமேயன்றி விலக்காமல் வழிபடச் சொன்னது பேதமாகாதென்க. விலக்கி வழிபடு பேதம் பீடைதருமெனற்குச் சம்பவகாண்டத்தின் ௩௩ - ம் அத் தியாயத்துப் ௪௨, ௪௩ - ம் சுலோகங்களில் "மிகச் சிரேஷ்டமான பிரபு குமார மூர்த்தி யென்பதைக் கவனியாது ஒரு குழந்தையென நினைத்துப் பிரம தேவரானவர் மகேசுர சன்னிதானத்துக்குச் சென்று விட்டனர்: அங்கு மகாதேவனை நெடுநேரம் பத்தியோ டாராதித்து விடைபெற்றுச் சாத்தியர்களுடன் சத்திய லோகஞ் செல்ல வெளிவந்தனர்" என வருமாறு சிவபிரானை மட்டும் மதித்து நனிபூசித்துக் குமாரதெய் வத்தைப் பூசியாது வந்த பிரமதேவர் அக்குமார தெய்வத்தாலே தண்டிக்கப்பட்டுத் தனது தொழிலும் பவுள்சுமிழந்து துயருழந்து சிறையிருந்தாரெனுஞ் சரித்திரமே சான்றாகும். இன்னணம் பிதாமகனாகிய பிரமதேவரே தண்டிக்கப்படுவரேல் ஏனையோர்கதி யென்னாகு மென்பதை நீயே மதி. இங்ஙனம் சைவ சமயாச்சாரியராய ஸ்ரீமத் — ஞானசம்பந்தராதி நால் வருஞ் சிவாலயவழிபாடு செய்து பாடிய பாடல்களிற் குமாரனை வழிபட்டமை வெளியாகவில்லையே எனச் சிலர் சொல்லத் துணிந்தக்கால் அன்னோர்க்கு, அன் னோர் பாடல்களுட் சிவசத்தியைத் தனித்துத் துதித் தல் காணப்படாததுபோலச் சிவகுமாரனையுந் தனித் துத் துதித்தல் காணப்படவில்லை. அதனால் சச்சிதா னந்தப் பிரமமாகிய சிவம், தந்தை தாய் குமார னென மூர்த்தங்கொண்டு நிற்கும்நிரலிலே தம்மை ஆண்டருளுங் குருவாய் முன்றொடர்புபற்றி எந்த

மூர்த்தம் பிரசன்னமாமோ அந்த மூர்த்தத்தையே பூரணப்பொருளென வழிபடல் சற்சீடர் கடப்பாடென் புது கொண்டு அந்நால்வருந் தங்களை ஆட்கொண்ட கோலத்தையே விவரித்துப் பாடி வழிபட்டாரென விடையிறுக்கவேண்டும். அவ்வாறே ஸ்ரீமத்-அருணகிரி நாதருந் தம்மை ஆட்கொண்ட குமார மூர்த்தத்தையே விவரித்துப்பாடி வழிபட்டனரென்பது முண்மை. இவ் வாறு நடந்தோரும் பல காலங்களிற் பலராவரே. அருணந்தி சிவாசாரியருந் தம்மை ஆட்கொண்ட குருவாகிய மெய்கண்டதேவரைத் தானே பரசிவ மாகிய முழுமுதற்கடவுளென இருபாவிருபஃதிற் பாடித் துதித்திருக்கின்றனர். ஆட்கொண்ட பெருமானைப் பாடுவோர் ஆலய வழிபாட்டின் முத்திற மூர்த்தங்களை யுந் தந்தம் பெருமானாகவே கருதி வழிபடுவர். அதீத சிவானுபவத்திலும் மூர்த்திபேதம் அற்ற சச்சிதானந்தப் பிரமும் ஒன்றே கண்டு மகிழ்வர். அதனாற் பேதமின் றெனவும், இது திருவருட் செல்வர்கட்கொத்த நடை யெனவும், பிரமாவைப்போற் சீவபோதமுனைப்பாற் பராமுகங்கொள்வோர் நடையே பேதமெனவும் அறிய லாம்.

பைரவர், ஸ்ரீ காலாக்கினிருத்திரரோடு சங்கார நடாத்துபவராவர்.

(சுச) 64

சீட.—ஷாட்குண்யமும் பொருந்திய பரமேசுவரர், இந்தச் சண்முகத்தோற்றம் நாமே, அது எமது பூரண மென் றருளியதற்குப்பிரமாண முண்டுகொல்?

தரு.—நமச்சிவாய மந்திர தெய்வமானது பார்வதி தேவியை நோக்கி "நான் சிருட்டியாதி ஐந்துதொழிற்

கதிபனும் ஐந்து திருமுகமுடையோனு மாகிய சதா சிவன்: நீ பலவாருகவிருப்பினும் ஒரு திருமுகமுடைய பரமேசுவரி: குமாரன் உனது சுவரூபத்தையும், எனது சுவரூபத்தையு மொன்ருகக் கொண்டுளோன். ஆகலின் அவன் சண்முகனென விளங்குகின்றனன். மேலுமவன் பிரபஞ்சங்களி னிமித்தம் ஐந்தொழிலும் விளையாட் டாகவே புரியும் வல்லுந ஞவன்'' எனச் சம்பவ காண்டத்தின் ௩டு - வது அத்தியாயத்து எ, அ - ம் சுலோகங்களிலும், ''முருகனுகிய அவன் ஒளிப்பொருட் கெல்லாம் மிக்க ஒளி யுடையோனும் இணையற்ற பரஞ்சோதிப் பொருளுமாவன். அவனது பேரொளிக்கு முன்னே இரவி மதி உடுக்களெல்லாஞ் சோபியா. அப்பெரிய அவனொளிக்கெதிரில் இம்மின்களும் அக் கினியும் எவ்வளவினவாகும்! சருவமும் அவனருளால் விளங்குவனவன்றி வேறில்லை'' என உஎ, உஅ - ம் சுலோகங்களிலும், ''இவ்வுருவம் அவனுக்குச் சுபாவத்தி லுள்ளது. வேறென்றே வெனின் ஸ்தாபர ஜங்கம மயமாகிய புவனங்களினுருவம். அதற்குச் சுவர்க்கமே சிரம்: வானமே நாபி: ஏழுகீழுலகே பாதம்: அக்கினி ஆதித்தன் சோமனென்பவைகளே முக்கண்: திசைகளே புயங்கள்: ஓடதிகளே உரோமங்கள்: பஞ்சமஹா பூதங்களே புலன்கள்: பஞ்சதன்மாத்திரைகளே அப் புலன்களின் விடயம்" என ௩0, ௩க, ௩உ - ம் சுலோகங் களிலும், ''உலோகானுக்கிரகார்த்தமான சண்முகத்திரு வுருவுடைய இம்மூர்த்தியின் திருவடிகளிற் பக்தி பண்ணுகின்றவ ரெவரோ அவர் தேவரானும் வணங்கத் தக்கவரும் எனக்குமுனக்கும் மிகப் பிரீதியுள்ளவரு மாவர்'' என ௩டு, ௩சு - ம் சுலோகங்களிலும், ''உன் குமார னுத்தரவினலேயே அக்கினிதேவன் தனது காரியத்தை நடாத்துகின்றனன்: நமன் பாபிகளை

வாணாளில் நோய்களானும் மரித்தபின் நரக யாதனை களானுந் தண்டிக்கின்றனன்: நான்முகன் நவப்பிரசா பதிகளுடன் சிருஷ்டி செய்கின்றனன்: நாராயணன் திதிசெய்கின்றனன்: காலாக்கினிருத்திரன் பிரளய காலத்திற் சருவசக சங்காரஞ் செய்கின்றனன்: பிராணி களைப் படைக்கின்றதுஞ் சங்கரிக்கின்றதுங் காலந்தான்: அக்காலமோ, இச்சுப்பிரமணியன் கைவசத்துளதே" என ௩௬ - முதல் ௪௭ - வரையிலுமுள்ள சுலோகங்களி லும், "யாவராலும் இம்மூர்த்தியின் கண்ணியமுடைய உத்தரவை மீறமுடியாதன்றோ? இப்புவனம் மலைகள் சாகரங்கள் பானுமுதலிய ஒளித்திரள்கள் விட்டுணு முதலிய தேவர்கள் சருவ சராசரங்கள் ஆகிய எல்லாஞ் சுப்பிரமணியனது திருவாக்கின் கட்டளை வசமாகவே யிருக்கின்றன" என ௪௯, ௫0-ம் சுலோகங் களிலும், "கந்தன் சகலதேவ சுவரூபனும், சகலலோக சுவரூபனும், சகலப்பிராணி சுவரூபனும், நித்திய சாக்ஷாத் பிரமசுவரூபனுமாவன். கிரிகுமாரீ! உலகிலே சித்து அசித்தென்னும் பொருள்களுள் எதனிடம் மகிமை இலக்குமிவிலாசம் தார்ட்டிய மென்பன வுளவோ அவையெல்லாம், குமாரன் மகிமையில் ஒரு இலேச விலாசமே யென்பதையுணர்" என ௩௬ - வது அத்தி யாயத்து ௩, ௪ - ம் சுலோகங்களிலும்,

"அளப்பிலா உருத்திர கோடிகளுள் இம்மூர்த்தியே காலாக்கினிருத்திரன். சங்கு சக்கரந் தரித்த அனேக விட்டுணுக்களுள் இம்மூர்த்தியே மகாவிட்டுணு. பிரசா பதிகளுள் இம்மூர்த்தியே பிரமா. மனுக்களுள் இம் மூர்த்தியே சுவாயம்புமனு. தேவர்களுள் இம்மூர்த்தியே தேவேந்திரன். தேசுப்பொருள்களுள் இம்மூர்த்தியே அக்கினி. பிதிருலகருள் இம்மூர்த்தியே இயமன். இரக்ஷஸுகளுள் இம்மூர்த்தியே நிருதி. நீர்ப்பிராணிகளுள்

இம்மூர்த்தியே வருணன். பலவான்களுள் இம் மூர்த்தியே வாயு. கந்தருவர்களுள் இம்மூர்த்தியே சித்திர ரதன். திரவியவான்களுள் இம்மூர்த்தியே குபேரன். திக்குப் பாலகர்களுள் இம்மூர்த்தியே ஈசானன். திக்குக்களிறுகளுள் இம்மூர்த்தியே ஐரா வதம். நதிகளுள் இம்மூர்த்தியே கங்கை. ஏகாதச ருத்திரர்களுள் இம்மூர்த்தியே சங்கரன். அட்டவசுக் களுள் இம்மூர்த்தியே பாவகன். துவாதசாதித்தர் களுள் இம்மூர்த்தியே விட்டுணுவெனும் ஆதித்தன். வைத்தியர்களுள் இம்மூர்த்தியே அச்சுவினிதேவர். சர்ப்பங்களுள் இம்மூர்த்தியே வாசுகி. மிருகங்களுள் இம்மூர்த்தியே சிங்கம். பறவைகளுள் இம்மூர்த்தியே கருடன். பிரம விருடிகளுள் இம்மூர்த்தியே வசிட்டன். தேவவிருடிகளுள் இம்மூர்த்தியே நாரதன். விருக்ஷங் களுள் இம்மூர்த்தியே அரசு. இன்னும் இவ்வுலகில் தேவர் மானுடர் விலங்கு முதலிய பிராணிகளிற் காணப்படுகிற பராக்கிரமம் சம்பத்து காந்தி கல்வி அறிவென்னும் அனைத்தும் இக்கந்தமூர்த்தி மகிமையே யென்பது நிச்சயமென இங்ஙனஞ் சுருங்கச் சொன்னேன். விரித்துச்சொல்லத் துணியின் நூறு கோடிவருடம் இடைவிடாதோதினு முடிவுபெறுவ தன்றே" என எ - முதல் கஅ - வரையிலுள்ள சுலோகங் களிலும் பரமசிவன் திருவாய் மலர்ந்தருளிய திருமொழி களாக வருமுண்மை யுணர்க. முடிவுபெறுவதன்றே என முடியும் கஅ - ம் சுலோகம்—

"ஸம்க்ஷிப்யோக்தாவிபூதிஸ்தே புத்ரஸ்யபுவநேச்வரி ।
நசக்யம்விஸ்தராத்வக்தும் வர்ஷகோடிசதைரபி ॥"

என வருவதே. தென்மொழிப்புராணத்துத் திருவிளை யாட்டுப் படலத்தில்—

(ஆதவி னமது சத்தி யறுமுக னவனும் யாமும்
பேதக மன்று னம்போற் பிரிவிலன் யாண்டு நின்றான்
ஏதமில் குழவி போல்வான் யாவையு முணர்ந்தான் சீரும்
போதமு மழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான்.)

"ஆதலால், அறுமுகன் நமது சத்துவத்தினைக் கொண்டவன். அவனுக்கும் நமக்கும் பேதமின்று. நம்மைப்போன்றே சராசரப் பிரபஞ்சங்களிற் பரிபூரண மாகத்தோன்றி நிற்கின்றனன். குற்றமிலாத குழந்தையை யொப்பான். எல்லாந்தெரி சருவஞ்ஞன். தன்னைப் பக்தியுடன் பூசித்துப் பணியும் புண்ணியவான்கட்கு இம்மையிற் சகல சம்பத்துக்களையும், ஞானபோதக முதலான பேறுகளையும் நல்கி மறுமையிற் சலனமறு மோக்ஷத்தையுந் தரவல்லுநன்" என்பதும் பெறப்படும். இன்னவாறு பரமன் பகர்ந்த உண்மையாக வருந் திண்மையெலா மோர்தி.

(சுரு) 65

சீட.—இன்னுமோரைய மறுக்கவேண்டும். சம்பவ காண்டத்து ௩௭ - வது அத்தியாயம், ௬, ௭ - ம் சுலோகங் களிற் "சுப்பிரமணிய! நீ நமது கட்டளையின்படி சுரர் கட்குப் பகைஞராய சூரபதுமா சிங்கமுகன் தாரக னென்னும் அசுரரைப் புத்திர மித்திர பெந்து வருக் கங்கள் சகிதம் இப்பொழுதே சங்கரித்து விடு. எங்க ணும் அபஜய நேரிடாமல் நிற்கு வெற்றி யுண்டாகுக" எனக் கூறுமாறு சூரசங்காரஞ் செயற்கு சூலபாணிவர முதவிற்றென்பது காண்கின்றுமன்றே; இவ்வரம்பெறு முன்னம் அறுமுகச்சிவ னற்றிய அற்புதம் யாதேனு முண்டுகொலோ?

தரு.—பரமபதியான சிவன், அவனுக்கும் நமக்கும் பேதமின் றென்றருளியபொருளைக் கவனியா திதனைக் கடாயினை! ஐந்தொழிலும் அவன்றொழில் கண்டாய். கேள்: பகவானாகிய முருகனுடைய சொந்தத் திருவிளை யாடலோ அளப்பில. அவற்றுட் சிலவறைதும்: இவ் வியாசத்துப் கக - வது கடாவிடையில் விளக்கிய கார்த்திகைமின்னார் அறுவருக்கும் ஒவ்வொரு குழந்தை யாயிருந்து அவர்முலையமிழ்துண்டு தாமரைத் தவிசிற் படுத்திருக்குஞ் செவ்வி, அம்மாதரார் தனதற்புதந் தெரிந்து போற்றியிருக்கும்பாக்குத் திருவுளத்தெண்ணி,

"சேயிவ னொருவ னேபல் சிறுருருக் கொண்டு நம்முன்
ஏயெனு மளவை தன்னி லெண்ணில்பே தத்த னாகும்
ஆயினிக் குமர னுட லறிவரி தெமக்கு மெல்லா
மாயமு மியற்ற வல்லன் வரமபிலா வறிவன் மாதோ"

என வருந் தூக்கின்படி ஒவ்வோருருவமும் ஒவ்வொரு திருவிளையாடல் உஞற்றுமாறாக ஒரு கணப்போதில் அலகிலாவுருவங்கள் தன்பாற் றோன்றச்செய்து அவ் வுருவங்களைத் தனதகம் மறைத்தருளிய மாயாமயக் குமாரனாய் விளங்கியிருந்தனன். இதனாற் குமார தெய் வத்தின் திருவுருவம், ஆறு சிரத்தையும், பன்னிரு கரத்தையும், இரண்டு திருவடியையும், ஈராறுசெவியை யும், ஆறுநாவையும், பன்னிருநயனத்தையு முடைத் தென அளவுபடுத்தற் கமையாமல் அவை எண்ணில வுடைய திவ்விய தெய்வவடிவ சிந்தாமணியாயுளதென் றுணரலாம். அற்றாகலினன்றே வீரபாகுதேவர் குமார சுவாமியைத் தரிசித்தஞான்று, அத்தேவர் விளம்பிய விளக்கமாகத் திருச்செந்தூர்த் தலபுராணத்தின் விசுவரூப வத்தியாயத்தில்—

"அளவிலா வானன மளவிலா நீள்குழை
அளவிலா நீள்விழி யளவிலா நாசிகள்

*அளவிலா துயர்கர மனவிலா நின்வடி*
*வளவிலா மஹறகளா கமமூநா டரியதால்"*

எனவும் வரக்காண்கின்றோம். பின்னர் அப்பெருமான் உமைமுலைப் பாலுண்டு பார்வதி பரமேசுரருடன் கயிலைக்கெழுந்தருளி அங்கு நவ வீரருடனும் இலக்ஷருடனுங் கூடியிருக்குங்கால், சத்த சமுத்திரங்களையுங் காலாலுடைத்துவிட்டுச் சங்கமஞ்செயச்செய்து குலாசலங்களைக் குந்தத்தாலே துகள் துகளாகத் தகர்த்துத் திக்குக் களிறுகளைப்பற்றிச் சுழற்றியெறிந்தாடினன். சூரியனுடைய பசும்பரிகளிலும், சந்திரனுடைய இரதத்திலும், இந்திரன் அக்கினி இயமன் நிருதி வருணன் வாயு குபேரனென்பார்களுடைய யானைகளிலும், குதிரையினு முயர்ந்து மகிமையுடைத்தாய ஓரழகிய யாட்டுக்கடாவிலும், மிக்குன்னதமாய ஒரு சிங்கத்தின் மீதும், புலி மான் சரபராஜ னென்பவைகளிலும், கருடன் அன்னம் முதலிய அனேகம் பறவைகளிலுமேறி அனந்த விநோத சாரிவரிசைகளைக்காட்டி விளையாடினன். அங்ஙனஞ் சிறுகுழவியாகி யெவ்வுலகப் பெண்களுமெடுத்து ஆமோதங்கொள அவரவர் மடிமீதும் விளங்கியிருந்தனன். மேல் தலையெங்கும் நரைத்துக் கண்காதுகள் மழுங்குற்றுக் கரத்தொரு தடியூன்றியுள்ள ஒருபெரிய விருத்தர்போலாகித் தேவர்குடியின்றிப்பாழாக்கிடக்கும் பட்டணங்களை முன்னைப்பவாக்கி யிரக்ஷிப்பதிற் கவலையுற்றவனாக அங்குத்திரிதரா நின்றனன். மேல் பட்டமரங்கள் துளிர்க்கும்படிக்கும், விலங்குகள்மேயுந்தொழினீத்து ஆனந்தமாகச்செவிகொடுத்துக் கேட்கும்படிக்கும், மேகங்கள்வானிற் சூழ்ந்துகொளும்படிக்கும் மதுரமான சுரத்துடன் வீணைமீட்டினன். ஓரிடத்திற் கொங்கைகள் நிமிர்ந்த மங்கையர்மனங் காமன்வசமாம்படி வேய்ங்குழல் இனிதூதினன். இன்னே பலவிளையாடல்

புரிந்த அப்பெருமான், பின்னரிவ் வண்டத்துக்கு வெளியிலுள்ள அனேகங் கோடி அண்டங்கட்குந் தன்னுடைய கணங்களோடு போந்து நெடுங்காலமாகச் சொலற்கரும் பாலலீலைகள் பலபுரிந்து, பின்றைச் சிறுமழவாய் மகாமேருவின் மத்தியில் விளங்கி அப்பருவதத்தைக் கிடுகிடென அசைத்துச் சிகரங்களைப் பறித்துச் சிறந்த திசைகளில் வீசிநின்றனன். அதுகண்ட இந்திரன் வடவாமுகாக்கினியெனக் கனன்று வெகுண்டு திக்குப் பாலகர் முதலாய தேவர்களோடு எம்பிரானாகிய தம்பிரானை வளைந்து பொருது, தனக் குறுதியாம் வச்சிராயுதத்தையும் அவ்வறுமுகப் பெருமான் பேரி லெறிந்து அது பொடி பொடியாப் பறந்த பின்னர் அப்பெருமான் விடுத்த ஓரம்பினால் ஐராவதத்தைச் சாகக் கொடுத்து நான்கம்புகளாற் றனது கிரீடம் துவசம் கவசமென்பனவும் இழந்து மூர்ச்சித்து வீழ்ந்தனன். அங்ஙனம் பின்னும் பெரும்போர் புரிந்த இயமனை ஐந்து பாணத்தானும், அக்கினியை மூன்று கணையானும், வருணனை நான்கு வாளியானும், வாயுவை இரண்டு சரத்தானும், சூரியனை மூன்று சாயகத்தானும், சந்திரனை ஓரம்பினானும், மற்றைய ஒவ்வொருவரையும் ஒவ்வோ ரத்திரத்தானும் விசாகப்பெருமான் வீழ்த்துவித்தனன். பின்பு இச்செய்தியை நாரதராலறிந்த பிருகற்பதியானவர், கந்தபகவா னருகுற்று அவனை அனேக தோத்திரங்களாற் களிப்புறச் செய்து நசை இய பிரகாரம் அப்பிரபுவானவன் யாவரு முன்போலெழு மாறு கடாக்ஷித்தனன். பின்பு தேவேந்திராதி தேவர்கட்குத் தனது பாரமேசுரவடிவமாகிய மகாவிசுவரூபத்தைக் காட்டித் தரிசிக்கும்படிக்குங் கடாக்ஷித்து ஆவரணித்து இனி, நீயிர் கேட்க வேண்டிய வரங்களைக் கேட்டுக் கொண்மி னென்றருளினன். அஞ்ஞான்று "தேவர்களை

யும் என்னையும் அடிமைகொண்டு காக்கவேண்டும்'' என வேண்டிக்கொண்ட திரிலோக சக்கிரேசுவரனாகிய தேவேந்திரனையும் ஏனைய தேவர்களையுங் கடைக் கணித்தருளி ''நீங்க ளனைவரும் எமக்குப் படைகளாக வும் யாமுங்கட்குத் தலைவனாகவுமிருந்து சூரனாதிய அசுரர்களை வேருடன் களைந்து துரிதத்திலே தேவர் களுடைய சம்பத்தை எமது வீரலக்ஷுமியுடன் கொடு வருவாம். அதுபரியந்தம் நீவீர் வாடன்மின்'' என் றருளிச்செய்து "இன்னதோ ரண்டந் தன்னி லெம்மில்வே றுற்ற வெல்லாந்—தொன்னெறி யாக வென்றோர் தூமொழி குமரன் கூற'' என வருமாறு தனது திருவிளையாடலான் மாறுபட்ட அனைத்தையும் "யதாப் பிரகாரமாகுக'' எனுமொரு சொல்லளவில் ஆகக் கண்டு வெள்ளியங்கிரிக்கு அணித்தாயுள்ள ஒருவரை யில் தேவர்கள் விருப்பின்படி தெய்வகம்மியனாகிய துவட்டாவால் நிருமிக்கப்பட்ட ஆலயத்தின்கண் ஒரு சிங்காதனத்தில் அவ்விண்ணுறை விபுதர் பூசிக்க வீற் றிருந்தனன். அதனாலது கந்தகிரியென்று சொலப்படு மால்.

பின்பு கந்தசுவாமி, திருக்கைலையையடைந்து கைலாசவாயிலில் நவவீரர் இலக்ஷருடனிருக்கின்ற ஞான்று, பரமசிவப் பிரீதியாக நாரதமுனிவர் செய்யும் யாகத்தின் மந்திர மாறுபாட்டாற் சிவந்தமேனியுடன் காலிலே தண்டை சிலம்புகளோடு பிறந்த வலிய யாட்டுக்கடாவொன்று அஷ்டகஜங்களும் வெருவுற உலகமூன்றுங் கலங்குற உலாவுகின்றது; அதனை யடக்கவேண்டுமெனப் பிரார்த்தித்த முனிவர் தேவர் முன்னிலையில் வீரபாகுதேவரை நோக்கி நீ அக்கடாவைப் பிடித்து வாவென ஆஞ்ஞாபித்து அவ்வணம் அவர் கொடு வந்தவுடன் அதன் மீதேறிப்பவனிவந்து

அதனை வாகனமாக்கிக்கொண்டனன் அவன். இங்ஙனம், சம்பவகாண்டத்தின் ௩௨-ம் அத்தியாயத்து ௬௫-ம் சுலோகத்தில் "தேவமுனிவராகிய ஸ்ரீநாரதரையொத்த மஹாத்துமாவாய இந்த நாரதமுனிவர்" என வருதலின் தேவமுனிவராய நாரதரல்லாத வேறொரு நாரதரே யாட்டுக்கடாவுண்டாய யஞ்ஞ மிழைத்தவரென அறிக.

பின்னர், "முகத்திலொன்றதா வவ்வெழுத் துடையதோர் முருகன்" என வருமாறு தன்னுடைய சண்முகங்களிலொன்றாக விளங்கும் ஓமெனும் பிரணவத்திற்கு "யானே பொருள்" எனச் சம்பவகாண்டத்தின் ௩௩-வது அத்தியாயத்து ௩௧-வது சுலோகத்தில் வருமாறு பிரமனுரைத்தது தப்பென்பதாக நான்கு தாடிகளோடுள்ள அந்தப் பிரமனை,

**கந்த புராணம்**

"எட்டொ ணாதவக் குடிலையின் பயனினைத் தெள்றே
கட்டு ரைத்திலன் மயங்கனு மிதன்பொருள் கருதாய்
சிட்டி செய்வதித் தன்மைய தோவெனாச் *செவ்வேள்
குட்டி னனய னான்குமா முடிகளுங் குலுங்க.

---

*இங்ஙனம், "வீரபாகுவென்பார் திசையெங்கு மொலிக்கும்படி கைமுஷ்டியால் அயன்மீது சடசடவென அறைந்து கந்தகிரிக் குகையுழி அந்தப் பிரமனை அடைத்துவிட்டனர்" என்று வடமொழிப்புராணம் வழுத்தும். பின்னும் அப்புராணந் தானே உபதேசகாண்டத்தின் ௬௮-வது அத்தியாயம் ௩௩, ௩௪-ம் சுலோகங்களில் தென்மொழிப்புராணந் தெரிப்பது போல "அஞ்ஞான்று கந்தன், சீற்றத்தோடு அந்தப் பிரமனைத் தலைமீது முஷ்டியாற் குட்டிச் சிறையிட்டு" என்றியம்பும்.

மறைபு ரிந்திடுஞ் சிவனருண் மதலைமா மலர்மேல்
உறைபு ரிந்தவன் வீழ்தரப் பதத்தினு லுதைத்து
நிறைபு ரிந்திடு பரிசன ரைக்கொடே நிகளச்
சிறைபு ரிந்திடு வித்தனன் கந்தமாஞ் சிலம்பில்."

பழநித்தல புராணம

"பொன்னி னுன்முடி குருதிகொப் பளிக்கவே புடைத்துத்
தன்னி ருஞ்சிலம் படியினுல் வீழ்வுறத் தள்ளிக்
கன்னி வந்ததோட் கணங்களை நோக்கவிற கடிதிற்
றுன்னி யன்னவ ரயன்றனைச் சூழ்ந்துகைப் பற்றி"

என்னுஞ் செய்யுள்களின்படி சிரசுபுண்ணுறத் திருக்கரங்கொடு குட்டி உடல் வீழ்தரத் திருக்கால்கொடு மோதிக் காலிலே தளையிடுவித்துக் கந்தசயிலக் குகைக்கட் சிறைப்படுத்தியும் வைத்தனன். அந்தப் பிரமதேவனது சிருஷ்டியைத் தானே நடாத்தினன். விண்டு குமாரிகளாய அமிர்தவல்லி சுந்தரவல்லி யென்பாரின் தபத்திற் கெழுந்தருளிச் "சின்னுட்களின்மேல் நுங்கள் மனத்தைப் பூரணஞ்செய்வேன்" என்று அனுக்கிரகஞ்செய்து ஆவரணமாயினன். இவையெல்லாஞ் சூரசங்காரார்த்தஞ் சிவாஞ்ஞை பிறக்குமுன்னர் நடந்தனவே.

(சுசு) 66

சீட.—அருளியவாறு அத்தகைய சத்தியுடைக்கடவுள், சம்பவகாண்டத்து ௩௭-வது அத்தியாயத்துளவாறு உமாபதியாலளிக்கப்பட்ட பன்னிரண்டாயுதம், இலக்ஷங் குதிரைபூட்டிய ஓரிரதம், ஒருபொற்கவசம், இரண்டம்புத் தூணி, ஒரு கரவாளமெனும் பெரிய கத்தி யென்பவைகளையும், நவசத்திகளின் புத்திரராய நவ வீரர்களையும், இலக்ஷம் வீரர்களையும், நூற்றெட்டுப் படைத்தலைவர்களை

யும், இரண்டாயிரம் வெள்ளம் பூத சைனியங்களையும், விஷ்ணு முதலிய தேவர்களையுந் துணையாகக்கொண்டு சென்று தருவரோடு சமர்விளைத்தன னென்பதென்னை?

தரு.—ஆன்மாவானது, ஒன்றைக்கருதி நடைகொளும் போது, அதற்கு அங்கமாகிய உட்கருவி புறக்கருவி களும், உபாங்கமாகிய ஆயுதம் முதலியனவுங் கூடவே செல்லு நிரல்போல அவ்விறைவன் சென்ற நிரலுமாம். சமத்த தேவர்களுஞ் சிவனுடைய சரீரமா யிருக்கின்றன ரென்பதை ௬௩-வது கடாவிடையிலேயே யாம் பிரகாசப் படுத்தினும். அந்தச் சிவன் முருகன்றானே.

(௬௭) 67

சீட.—சிவனுடைய பரிவாரதேவ பகுப்பிற்சேர்ந்த அயன், விஷ்ணு, துர்க்கி, கணபதி, சாஸ்தா, பைரவர், வீரபத்திரர், நவக்கிரகங்கள், வாமாதி அஷ்டசத்திக ளென்பார்களுடன் சுப்பிரமணிய மூர்த்தியையுஞ் சேர்த் துச் சிலர் தெரிப்ப தென்கொல்?

தரு.—நடேச பெருமான் தில்லையந்தணராகிய மூவா யிரவருளொருவனாகவும், சோமசுந்தரக்கடவுள் வங்கிய சேகர பாண்டியனுக்குச் சேனைத்தலைவனாகவு நின்றமை போல யாதொரு சந்தர்ப்பம் பற்றிக் கந்தமூர்த்திக் குள்ள அனேக சித்துவிலாச வடிவங்களுளொன்று அன்னணமு மிருந்திடுமென்பதி லிழுக்கொன்றுமின்றால். இன்னுமிவ்வாறுசொல் உருக்களெல்லாம் இந்நியாயமே கோடற்பாலனவெனக் கோடி. நிற்க;

**உபதேசகாண்டத்துக் ௬௦ வது** அத்தியாயத்தில் வரு மாறு கைலாயம் சிவலோகம் முதலிய தானங்களிற் காரி யார்த்தமாய் அதியற்புதமாயுள்ள இலிங்கோற்பவம்,

சுகாசனம், உமாமகேசம், கலியாணசுந்தரம், அர்த்தநாரீசுவரம், சோமாஸ்கந்தம், சக்கரதானரூபம், திரிமூர்த்தி, கேசவார்த்தம், தக்ஷிணாமூர்த்தம், பிக்ஷாடனம், கங்காளம், காமநாசம், காலாந்தகம், ஜலந்தரவதம், திரிபுராரி, சரபம், நீலகண்டம், திரிபாதம், ஏகபாதம், பைரவம், விருஷபாரூடம், சந்திரசேகரம், நடேசம், கங்காதரம் என்ற *இருபத்தைந்து மகேசுரவடிவங்களுள் சோமாஸ்கந்த மூர்த்தத்திலுள்ள கந்தசுவாமி பரிவாரதேவராவரோ? ஆவரென்னின்,—ஏனை மூர்த்தங்களும் அன்னண மாதலோடு நடேச மூர்த்தமு மாகவேண்டும்: பாவகிக்குப் பரத்துவம் பேசுகின்ற சுருதி விரோதமும் பரமேசுவர வாக்கு வியர்த்தமு முண்டாகும். ஆகலின் அக்கூற்றொவ்வாது.

(கூஅ) 68

சீட.—அற்றேல், சோமாஸ்கந்தமூர்த்த மென்பதற் கருத்தமென்கொலோ?

குரு.—ஸ, உமா, ஸ்கந்தஃ என்னும் வடசொற்கள் மூன்றும் சந்தியாம்போது 'ஸோமாஸ்கந்தஃ' எனவாம். அம்மூர்த்தம், கடம்பு வெண்காந்தள் வெட்சி முதலிய நறுமலர்களைத் தரிக்கின்றவனும், ஸ்ரீ விஷ்ணுமூர்த்தியால் வாயுதேவனைச் சாரதியாக அமர்த்தப்பெற்ற பெரிய இரதமூர்ந்து கைலையைக்கடந்து ஏமகூடத் தருகு குறு

---

*இவ்விருபத்தைந்தனுள், திரிமூர்த்தி, சரபம், திரிபாதம், பைரவம், கேசவார்த்தம் என்பனவைகட்குப் பதிலாகக் கஜமர்த்தனம், வீரபத்திரம், கிராதம், சண்டேசானுக்கிரகம், சுசமுகானுக்கிரகம் என்பனவைகளை வாதுளாகமம், சிவரகசிய முதலிய நூல்கள் நுவலும்.

கித் தாரகனையுங் கிரௌஞ்சனையுங்கோறல்புரிந்து இமய மலைக்குத் தென்தேயத்திலுள்ள தேவகிரியில் வைகி அப் பாற் கேதாரம், காசி, ஸ்ரீ சைலம், விரூபாக்ஷம், காள ஹஸ்தி, திருவேங்கடம், திருவாலங்காடு, காஞ்சி, அவ ணுள்ள குமரகோட்டம், அருணை, திருவெண்ணெய்நல் லூர், முதுகுன்றம் என்னுந் தலங்களையும், சதானந்த தாண்டவேசனுகிய பரமபதி யெழுந்தருளியுள்ள சிதம் பரமெனுந் திவ்விய திருத்தலத்தையுந் தரிசித்துக் கொண்டு வீரமாகேந்திரத்திற்கு நடைதருங்கால் மற்றுஞ் சிவஸ்தலங்களை ஆகாயமார்க்கத்தி லிருந்தபடியே தரி சித்தேகி மாயூரம்போந்து காவிரி நதிக்கு வடபாலிற் பெருகும் மண்ணியாற்றங்கரைக்கட் குமாரபுரியெனுந் திருச்சேய்ஞலூரில் ஓரிரா வதிந்திருந்து மறு பகலில் அங்குத்தானே பரமசிவனிடத்துள்ள பாசுபதாஸ்திரம் இரௌத்திராஸ்திரம் முதலியன பெற்றுளானும், பின் பொரு பாலைவனத்தைக்கடந்து திருப்பரங்குன்றடைந்து திருச்செந்தூர்ப்பதியை யெய்தினேனும், சூரபதுமனுற் கொடிய சிறை செய்யப்பட் டின்னல்கொளும் இந்திர குமார ஜயந்தனுதி சுரர்கட்குக் கனவிலே தரிசனமாகி நுஞ்சிறை மீட்டிச் சுகப்பட வைப்பாம்" என்று தைரிய வாக்களித்து அன்னணம் அசுரரை நிசாரணஞ்செய்து சிறைமீட்டி வந்து திருச்செந்திற்பதியில் ஓரிரா வதிந் திருந்து மேல் திருப்பரங்கிரிக் கெழுந்தருளி அங்கண் விசுவகருமனு லுண்டுசெய்த நகர நாப்பண் ஓரரியாசனத் திலே தனியிருந்து ஆறுமுனைவர்கட்குந் தன்னை அறிவ தற்காய ஞானேபதேசத்தைச் செய்து தெய்வ குஞ்சரி யைத் திருமணம் புரிந்து தேவலோகம் புக்குத் தேவகம் மியனுல் அந்நகரைச் செவ்வன் சீர்பெறச் செய்து அதிலே தேவர்களைக் குடியேற்றிப் பிரமதேவனுல் இந்திரற்கு முடிசூட்டுவித்துக் களிப்புற்று அம்பர்ச்சின்னுள் வசித்து

மேல் தன்னை வணங்கி நிற்கும் பிரமவிஷ்ணு முதலிய சருவதேவர்களையும் அவரவரிருப்பிடமேக விடையளித்து வீரபாகுதேவர் சாரதியாயிருந்து நடத்தும் இரதம் உந்திக் கைலைக்கெழுந்தருளி அங்குப் பரமனையும் பருப்பதியையுங் கண்டுகொண்டு கஜநாயகியுடன் கந்தவெற்புறைந்துளானும், பிரமனுடைய நாசித்தொள்ளையி னின்று தோன்றி இரணியாக்ஷனைச் சங்கரித்த விஷ்ணு அவதாரப் பன்றியைக் கோறல்புரிந்து அதன்கொம்பைப் பெயர்த்தெடுத்த வயவனும், கந்தபுராணத் திருநகரப்படலத்தில் வெளியாமாறு ஐந்து விட்டுணுக்களைக் கண்ட காஞ்சிமரமுடைக் காஞ்சியிலிலங்குங் குமரகோட்டத்திலே திரிபுவனமும் அழிகின்ற ஒரு பிரளயத்திற் பெருமாள் பூசிக்கும் பெருமாளாய்ப் பிறங்கி நின்றுளானும், அக்கோட்டத்தில் ஒருகரத்திற் கமண்டலமும் ஒருகரத்தின் மணிமாலையுங் கொண்டு சிருட்டி செய்யுங் கோலமாய் வீற்றிராநின்ற விண்ணவனும், வேதத்திலுங் குமாராகமத்திலும் இனிது விளங்குகின்ற பரம்பொருளாயுளானும், சருவான்மாக்களிலும் எள்ளுக்கு ளெண்ணெய் போற் சிவணியிருந்து பிரேரிப்பவனும், குமரகுருதாசன் நாளும் வழிபடத்தக்க சிவப்பிரமம் எனவுளோனுமாகிய ஸ்கந்தமூர்த்தியை நடுவணிருத்தி உமாதேவியோடு சிவபெருமா னெழுந்தருளியிருக்கும் மூர்த்தமே ஆம். இம்மூர்த்தம், சத்து, சித்து, ஆனந்தமெனும் மூன்றிலக்கணத்தோடு ஏகமாய்ச் சச்சிதானந்த சிவமென அமூர்த்த நிலையிலிருக்கு முண்மையையே மூர்த்த நிலையிலும் பிரிவறவிளக்குகின்ற தெனவாம்.

மேன்மிழற்றிய வராகாவதாரத்தைச் சிவபெருமானே அதன் கொம்பைப் பிடுங்கிக் கொன்றனரென்பதாக வேறு புராணங்கள் கூறுவதுபோலக் காந்தபுராண தக்ஷகாண்டத்துப் கரு - வது அத்தியாயமுங் கூறும்.

அது, சிவாஞ்ஞையின்படி செவ்வேள் நடாத்தியது பற்றி அப்படிச்சொல்வதென்க. ஈதுறுதியெனற்கு அக்காந்த புராண யுத்தகாண்டத்தின் சகூ-ம் அத்தியாயத்து உரு-ம் சுலோகத்தில் "மேலும் இக்கந்தர் மகிமைபொருந்திய ஆதிவராகத்தின் கொம்பைப்பிடுங்கிப் பரமனிட்ங் கொடுத்தனரன்றோ" எனவும், உபதேச காண்டத்தின் கூசு - ம் அத்தியாயத்து சுகூ, எ0, எச - ம் சுலோகங்களில் "சிவபிரானுஞ்ஞையின்படி அவ்வடிவேற் பெருமான், மலை போன்ற வுருக்கொண்டு தன்னுடைய இருகரங்களாலும் அவ்வராகத்தின் கொம்பைப்பற்றிக் கறகறெனச் சுழற்றி யடித்து அக்கொம்பையும் பிடுங்கிக்கொடுபோய்ச் சிவ சன்னிதியில் வைத்தபோது" எனவும் வரு வசனங் கள் போதிய சான்றும். ஆயின், பரசிவற்கு வராகாரி யென ஒரு மூர்த்தஞ்சொல்ல இடனில்லையே யெனின்,— வராகத்தைத் துமிப்பான் கட்டளையிட்ட காலத்துள்ள சிவவடிவமே அம்மூர்த்தமாமென்க.

(சுகூ) 69

சீட.—இச்சோமாஸ்கந்த மூர்த்தங் காண்டல் விசே டந்தானே?

குரு.—நின்னைப்போ லனுமானமுளார்க்கு விசேடந் தான்.

(எ0) 70

சீட.—அனுமானமிலார்க்கு எது விசேடம்?

குரு.—சச்சிதானந்தப்பொருள் ஆன்மாவுக்கு ஆன்மா வாய் அத்துவைதமா யுளதெனத் திரிபற வுள்ளூன்றிக் காண்டலே விசேடம்.

சீட.—ஈண்டியம்பியது சற்சமாதி நிலையைக் குறித்த லின், அதுபற்றி யெற்கு வழக்கின்று. யாவனொருவன் பத்திசெய்து பரமற்கு அடிமைப்படக் கொள்ளுநெறி யெவ்விதம்?

குரு.—ஆசிரியன் தந்த நெறிநின்று அரன்வேறு முருகன்வேறெனு உகளபாவனை செய்யாது அவன் அவ னென வஸ்து நிச்சயஞ் செய்துகொண்டு ஆராதிப்பது கடப்பாடாம். சிவலிங்கத்தினிடத்தும் சண்முகபாவனை செய்து வந்திக்கலாம். விவரம்.—ஈசாநாயநமஃ தத்புரு ஷாயநமஃ அகோராயநமஃ வாமதேவாயநமஃ ஸத்யோஜா தாயநமஃ அதோமுகாயநமஃ எனும் மந்திரங்களைத் திசைக்கிரமப்படி யிலிங்கத்திற் பாவித்துச் செபித்து நமஸ்கரிப்பதே. நல்லாசனத்திலே தனியிருந்து மனத் தைத்தடுத்து இருதயபதுமத்திற் குமாரமூர்த்தியை ஏக முகத்துடன் இரண்டு கரங்களுடன் வலப்புறம் வேல் விளங்க நிறீஇச் சடக்கரத்தை யுள்ளுக்குட் செபித்துத் தியானயோகஞ் சாதிக்கலாம். அங்ஙனம் ஏகாக்ஷர மாகிய பிரணவமொன்றையே விடாது செபித்து அவ்வுரு விலே தான் இலயமடைதல் பாவிக்கலாம். மேல், நிரா காரமாகவு நிச்சயித்து, ஸோஹம் பாவனையால் அதி லொடுங்கிச் சிவஞான நிட்டையிலிருக்கலாம். யாவும் அவனருளா லாகவேண்டும். பிரணவசொரூபம் குமார தெய்வமாகலின், ஆறக்கரமன்றிப் பிரணவ மனுவும் அத் தெய்வத்தினுடையதே. அதுவே யோகமார்க்கத்தி லனுட்டிக்குங் குமரகுரு மனுவெனலு முணர்.

இன்னும் குமரகுருதன்மையி லுனக்குச் சந்தேகங்க ளுளவாயின் ஓன்றொழியா துரைசெய்.

(எ௨) 72

சீட.—பிரமதேவனிடம்பெற்ற ஒரு மா கனியை நாரத முனிவர் பரமசிவ சன்னிதியில் வைத்து நமற்கரித்தனர். அஞ்ஞான்று பரமசிவனுனவர் "ஒரு கணப்போதில் உலகை வலம்வந்து எம்முன்னர் முந்திநின்ரோற்கு ஈது கிடைக்கும்" என்றருளிய திருவாக்கைச் செவிமடுத்த கணபதி கந்தரென்னு மிருகுமாரர்களுள், கந்தர் கலாப மயில் உகைத்துக் கணத்திலுலகை வலம்வருமுன் கணபதி நீயே யுலகெனச் சிவனை வலம்வந்து அக்கனியைக் கைப்பற்றினதாகக் கந்தர்க்குத் தோல்விச்சரிதம் நூல்களிற் காணப்படுவதென்?

தரு.—அங்ஙனம் பரமசிவனுனவர், உருவத்தாலே தம்மில் வேறுபோ லுள்ள தம் மூத்தபிள்ளை தம் உண்மையைத் தெரிந்த பெரியோனென்பதையும், தம் இளைய பிள்ளை திவ்விய ஞானமே மேனியாய் விளங்கியுள்ள திருவருட்பழ மென்பதையும் உலகர்க்கு வெளிப்படுத்துவான் ஒரு திருவருள் நாடகம் நடித்தார். இதனைப் பழநித் தல புராணத்துத் திருவாவினன்குடிச் சருக்கத்தில்—

"ஈச ளுருகி மடியினில்வைத் தென்று மிளையோ யறிவுடையை
தேசு தருநம் வாணுதற்கண் மணிநீ சிறுவ ஞெபெரியை
வாச நறுமென் கனியுமொரு கனியோ மதுர மொழிவாயாற்
பேச வரிய மறைஞானப் பிள்ளை பழநீ யெனப்புகன்ருர்"

என வரும் ௫௯ - வது யாப்பானு முணர்க.

இதனுல், தானே பேரின்பக்கனியா யிராநின்ற தன் பெருமையை அளக்க முடியாதவனுகை யாதொரு கனியையும் விரும்பினுன் தொன்மை முதல்வனென்று கூறலாம். அற்ருகலினன்றே "தன் பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ" என்ருர் ஸ்ரீமந் மாணிக்க வாசக

ரும். "இவ்வுலகில் தேவர் மானுடர் விலங்கு முதலிய பிராணிகளிற் காணப்படுகிற பராக்கிரமம் சம்பத்து காந்தி கல்வி அறிவென்னுமெல்லாம் இக்கந்தமூர்த்தி மகிமையே யென்பது நிச்சயமென இங்ஙனஞ் சுருங்கச் சொன்னேன். விரித்துச்சொல்லத் துணியின் நூறுகோடி வருடம் இடைவிடாதோதினும் முடிவுபெறுவதன்றே" எனச் சிவனார் திருவாய்மலர்ந்தருளின ரென்பதாகச் சம்பவ காண்டத்தின் ௩௬ - ம் அத்தியாயத்துப் ௧௬, ௧௭, ௧௮ - ம் சுலோகங்களில் வருவாய்மையும் ஈண்டுக் கருதிக் கொளற்பாலதே.

பழத்திற்காக உலகை வலம்வந்தனரென்னும் இச் சரிதம், விவாகத்திற்காக வந்தனரென்று ஞானசங்கிதையின் ௩௫ - வது அத்தியாயத்திற் பேதமாகவும் வருகிறது. அது புராணபேதமெனவும், இவ்வித பேதத்திற் கந்த பகவானைக் குறித்து எத்தனை பேதச்சரிதைகள் காணப் படினும் அவை அப்பகவானுண்மையைப் பேதிக்கும் ஆற்றல் பெறா வெனவும் அறிஞரறிவரன்றே.

கந்தர் விநாயகர்போற் சிவனை வலம்வராமல் உலகை வலம்வந்தது, ஒருகணத்தில் இவ்வுலகை வலம்வரவு மெம்மாற் கூடுமெனும் ஆற்றல் காட்டியதுமாகுமே. ஆகவின் நுனித்த வுணர்வா லுண்மை தெரிந்தார் இங்ஙனங் கந்தபிராற்குத் தோல்விகூறத் துணியாரென்க.

(௭௩) 73

சீட.—ஈதிப்படிக்காயினும் சோணாட்டிலுள்ள திருச் சேய்ஞலூர், தொண்டைநாட்டிலுள்ள திருவேற்காடு, கொங்குநாட்டிலுள்ள திருமுருகன்பூண்டி யெனுஞ் சிவஸ்தலங்களிலும் இன்னுஞ் சில சிவஸ்தலங்களிலுந் திருக்

கோவில் கொண்டிருக்கின்ற ஈசுவரனையும் ஈசுவரியையும் வேலாயுதத்தோன் பூசித்ததாகப் புராணங்கள் புகறல், குமாரன் கோளறு தெய்வமென்றற் கிழுக்கில்லை கொலோ?

தரு.—சூத்துவப்பிரகாசத்துப் பதியிலக்கணத்தில்—

"அப்பரமா னந்தம்பின் னின்பிஞெடு பரமா
யரும்பரையே வடிவாகி யானந்த நடஞ்செய்
தொப்பில்சதா சிவமாகி மகேசனுருத் திரனு
யுயர்விண்டு பிரமனு புருவையைந் தாகித்
தப்பில்வட கிழன்மருவி யருமறையா கமங்க
டாமுரைத்தந் நூலுண்மை தலையறியா மையினுன்
மெய்ப்படியா மிம்முறையி லப்படியை நிகழ்த்தி
விளக்கியவன் சிவனன்றி யளப்பரிது பிறர்க்கே"

என வருங் கவிக்கருத்தின்படி சிவபெருமா னருளிச் செய்த வேதாகமங்களி னெறியை ஒருவரா லளந்தறியக் கூடாமையின் அப்பெருமானே பஞ்சமூர்த்தங்களாய் இருபத்தைந்து மகேசுர விக்கிரகங்களா யுருக்கொண்டு அச்செய்கைகளைச் செய்துகாட்டி யறிவிப்பனெனுங் கடப்பாடுகொண்டு, தந்தை தாயென்பாரை மகார் பூசிப்ப திவ்வாறு, அதனுல் வரும் பிரயோசனமும் இற்றென ஆன்மகோடிகட்கு அறிவித்த பேரருளுடைகம் அஃதென்னலாம். மூலன் அன்னணஞ் செயாவிடின், உலகிலே தந்தை தாயென்பாரை ஒரு புதல்வரும் வழிபடாப் பீடைபெருகிப் பெறும்பயனும் அற்றுவிடுமன்றே. இவ்விளையபிள்ளையார் பூசித்ததுபோல மூத்தபிள்ளையார் பூசித்த சரிதமும் பலவுள. உமாதேவியார் பூசித்த சரிதமும் பலவுள. அத்தேவியார் செய்த சிவபூசையானது உலகிலுள்ள பத்தினிகளெல்லாங் கணவர்ப் பூசித்தலெனும் பதிபூசை அவசியஞ் செய்யவேண்டுமென்ற தருமத்தை யினிதுணர்த்தா

நிற்கும். சம்பவகாண்டத்தின் ௩௪-ம் அத்தியாயத்தில் ௪, ௫ - தொடக்கமாக வரு சுலோகங்களில்—

"(குமாரன்) மகாதேவரது தோண்மீதேறியிருந்தனன்: அக்கால் மகாதேவர் அளவற்ற ஆனந்தசுவரூபியாயினுந் தம்முடைய உத்தமபுத்திரனாகிய ஆனந்தக்கடலின் திருமேனி பரிசித்தலாய அளப்பறும் அமிர்த சலத்திடை அமிழ்ந்திட்டனர்"

எனவருந் திவ்விய சரித்திரமானது, உலகிலுள்ள பிதாக்களெல்லாம் பிள்ளைகண்மாட்டு வைக்கும் பேரன்பாய தருமத்தையும், அதில் விளையுஞ் சுகத்தையும் இனிதுணர்த்தாநிற்கும். இது நிற்க. அக்கண்ணுதற் பரமனுருங் கல்லாலின்கீழ் யோகிருந்தனர். அவர் யாது பயன் கருதி அவ்வாறிருந்தன ரென்னலாம்? சனகாதி முனிவர்கட்கு அதனை யுணர்த்து நிமித்தமும், அதனாற் றுறவற யோகவாழ்க்கையொன்று உலகிலே தெவுளு நிமித்தமுமாக அந்த யோகிருந்தனரெனக் கருத்துளர் கரிசறத் தெளிவரன்றோ. அன்ப! இவைபோல்வனவெல்லாம் சுவப்பிரயோசன மல்லாத பரப்பிரயோசன மென்றறி.

(எ௪) 74

சீட.—பரமசிவனுருரைத்த வேதப்பொருளைப் பராமுகமாக விருந்து கேட்ட தேவியாரை அச்சிவனுர் "நீ பரதவர் மகளாகுக" எனச் சபித்ததைப் பொறுத விநாயகர், இவைகளினாலன்றோ தீங்கு விளைந்ததென்று அவனிருந்த புத்தகங்களை வாரிக் கடலில் வீசுவது கண்ட கந்தசுவாமியும் பரமசிவனது கரத்திருந்த போதநூலைப் பறித்துப் பௌவத்தில் வீசிய நிமித்தம் அம்முருகவேளைச் சிவனுர் நோக்குபு "நீ வணிகர் குலத்தின் மூங்கைப்

பிள்ளையாகுக" எனச் சபித்தாரென்பதற்கு மதுரைத்திரு
விளையாடல் வலைவீசின படலத்தில்—

"வெருவருஞ் செலவின் வேழ முகத்தனை விதித்த சாபப்
பெருவலி தன்னைச் சாரும் பெற்றியாற் சாபங் கூறான்
அருவரை நெஞ்சு போழ்ந்த வள்ளிலை வடிவேற் செங்கை
முருகனை வணிகர் தம்மின் மூங்கையா கென்று னிப்பால்"

எனவருஞ் செய்யுள் சான்றாக நிற்கின்றது, ஈதென்
கொல்?

தரு.—இங்ஙனம் சிவனார் தேவியாரைப் பரதவர்
பந்தனையாகுமாறு சபித்தவுடன் கந்தபிரானை மகரமீ
னாகும் வண்ணஞ் சபித்தனரெனத் திருவுத்தரகோசமங்
கைத் தலபுராணத்து வலைவீசு மத்தியாயத்தில்—

"அதனை யோர்ந்தவம் மண்ணல் வெற்றிவேற்
சுதனை நோக்குபு தோன்ற லீங்கிவன்
புதையி ருட்குழற் புறத்தொ ளித்துநாம்
உதவு மந்திர முணரு கிற்றலால்.

மகர மீனமாய் மறிதி ரைக்கடற்
புகுதி யென்றபின் புனைபைங் கோதையை
நிகரில் கற்பினாய் நின்று பேட்சையாற்
குகனி ருந்தனன் குழைமென் கூந்தலில்"

எனவருமாற்றானறியலாம். இதற்கிசையத் தென்மொழிக்
கந்தபுராணத்துச் சிங்கமுகாசுரன் வதைப்படலத்தின்
௩௬௭-வது செய்யுளில் "மகரமு மான மேலோன்" என
லும் வருகிறது. இது வடமொழிக் காந்தத்திலில்லை.
முருகனை மகரமீனாகச் சபித்தனரென்பதனை, இருபுதல்
வரையும் வாயில்புக விடுத்தாயாகலின் நீ ஒரு மீனுரு
வாகிக் கடலிற்கிடந்து உழிதருகவென்று சிவனார் நந்தி
தேவரைச் சபித்தனரென்பதற்கான செய்தியை அவ்வலை

வீசின படலம் "தொடுத்ததீங் கொழிய வின்றோர் சுறவுரு வாகி வையம்—உடுத்தகா ரோத நீர்புக் குழல்கெனப் பணித்தான் மன்னே" என்றேதுதலும் பகைக்கும். இவ் விதமாக அச் சாபக்கதையும் பேதப்பட்டு ஒன்றை யொன்று பகைக்குமாற்றான் இரண்டுஞ் சுந்தோபசுந்த நியாயமா யொழிவனவாயினவே.

உருத்திரசன்மவுருவும் சிவகுமாரனுடைய எத் தனையோ சித்துவிலாச வுருக்களி லொன்றாகும். உருத் திரசன்மரென்பதற்கு உருத்திரனாகத் தோன்றினவர் எனும்பொருள் கொள்ளலாம்.

இவ்வாறறிவதில் மேல்மிழற்றிய மதுரைமான்மியச் செய்யுளில் "வேழமுக விநாயகமூர்த்தியைச் சபித்தால் அவன் நாமாகலின் நம்மையே சபித்ததாகுமென அவ ரைச்சபியாமல், *தாமல்லாக் கந்தமூர்த்தியைச் சிவனார் சபித்தனர்" எனும்பொருள் பெறப்படுகின்றது ஆதலிற் குமரவேள் சிவனாகிய பதிப்பொரு ளல்லாத பசுப்பொரு ளென்பதன்றே கொளக்கிடக்கின்றது. அந்தோ! அரி அயன் முதலிய தேவர்களைப் பசுக்களென்று பணிப்பது போலக் குமாரமூர்த்தியைப் பசுவென்று எச்சிறந்த நூலும் பணிக்கக் கண்டிலேம். ஐய! சிவனார் "தாமல் லாக் கந்தசுவாமி" எனக் குறிப்பிட்டுத் தாம் வேறாயிடு தல் என்றுஞ் சாலாது. யாங்ஙனமெனின்,—"வேதத்திற் சுப்பிரமணியோம் என்றுள்ளபடி நீயும், சதாசிவோம் என்றுள்ளபடி யானுமே அந்தப் பிரணவப் பொருளாகின்

---

*தாமல்லாக் கந்தமூர்த்தியைச் சிவனார் சபித்தனரென்பதற் கான செய்தி,வடமொழியிலுள்ள (ஹாலாஸ்யமஹாத்ம்யமாகிய) மதுரைமான்மியத்திலுமில்லை யென்பதற்குரிய சுலோகமும் பிற நியாயங்களும் இந்நூலாசிரியரது தகராலயரகசியத்தின் உ-ம் காண்டத்து ௩அ-ம் செய்யுளுரையில் நன்கு கண்டுகொள்ளலாம்.

ரூம்" எனக் கண்ணுதற்கடவுள் கந்தபிரான் முன்னிலேயி லருளிச்செய்ததாகவுள்ள சம்பவகாண்டத்தின் ௩௪-ம் அத் தியாயத்து உக, ௩௦-ம் சுலோகங்களின் அருத்தத்தானும், "நீ, நிச்சயமாக என்னுன்மா" என அக்குமாரன் முன் னிலேயி லருளிச்செய்ததாகவுள்ள ௩௪ - வது சுலோகார்த் தத்தானும், "குமாரன் உனது சுவரூபத்தையும் எனது சுவரூபத்தையும் ஒன்ருகக்கொண்டவன்" எனச் சிவ பிரான் பார்வதிதேவி முன்னிலேயிலருளிச்செய்ததாக வுள்ள ௩௫-ம் அத்தியாயத்து அ-வது சுலோகார்த்தத்தா னும், இதனையனுசரித்து உற்பத்திகாண்டத்துத் திருவிளே யாட்டுப்படலத்தின் ௪௬-ம் பாட்டில் "ஆதலி னமது சத்தி யறுமுக னவனும் யாமும் பேதக மன்ரு னம்போற் பிரிவி லன்" எனவரும் வாக்கியங்களானும், "கிரி குமாரீ! கந்தன் சகல தேவசுவரூபனும் சகலலோக சுவரூபனும் சகலப்பிராணி சுவரூபனும் நித்திய சாக்ஷாது பிரமசுவ ரூபனுமாவன்" என மணிகண்ட னருளிச்செய்ததாக வுள்ள சம்பவகாண்டத்தின் ௩௬-ம் அத்தியாயத்து ௩ - ம் சுலோகார்த்தத்தானுமென்க. இங்ஙனங் குமாரனைப் பிரித்துக்கூற எட்டுணையு மொல்லாமை யெய்துதலுறழச் சத்தியையும் பிரித்துக்கூற எட்டுணையு மொல்லாமை யெய்துமென்க.

ஈண்டுக் கூறிப்போந்த பிரபலப் பிரமாணங்களே யுணரமாட்டாதார், இங்ஙனஞ் சிவசத்தியையும், சிவ குமாரனையும் பேதப்படுத்தி யிழித்துரைத்துப் பெரும் பீடை தேடிக்கொள்வர். இது நினக்கு வேண்டாம்.

(எரு) 75

சீட.—"பஞ்சவ னீடுகூனு மொன்றிடு தாபமீமாடு பைந்தமிழ் வாதுகூறு சமண்மூகர்—பண்பறு பீலியோடு

வெங்கழு வேறவோது பண்டித ஞானநீறு தருவோனே" என அருணகிரிநாதர் திருவாக்குக் காணப்படுமாறு ஞானசம்பந்தரென வந்தவர் சுப்பிரமணிய மூர்த்தியன்றோ?

தரு.—அச் சம்பந்தர் பரசுப்பிரமணியரல்லர்: அபர சுப்பிரமணியர்: பரசுப்பிரமணிய மூர்த்தியின் வழிபாட்டால் அவருருவமெனுஞ் சாரூபகதியடைந்த அடியார்களே அபரசுப்பிரமணியர்கள்: அன்னோர்பாற் பரசுப்பிரமணிய மூர்த்தியின் திருவருட்சத்தி பதிந்து அவ்வுருநல்குமாற்றான் அவர்களையுஞ் சுப்பிரமணியரென்று உபசரித்துரைக்க இடனுண்டாம்: அதுபிடித்தே ஞானசம்பந்தரைக் குமாரதெய்வமென அவர் புராணங்கூறுதல் கண்ணுற்ற அருணகிரிநாதரும் அவ்வாறு கூறுவாராயினரெனச் சிலர்கூறுப. "பதியான ஞானமுனிவன்" என்று அச் சம்பந்தரே கூறியபடி பதித்தன்மையினையுற்ற அவர், அபரசுப்பிரமணிய மூர்த்திகளுட் சிவ சாயுச்சியத்தை அவாவுங் காரணத்தாற் சுப்பிரமணிய சாரூபம் உறுதிப்படா நிலையினின்று வெளிப்பட்டவரென்பது எமதபிப்பிராயமாகும். என்னை? சுப்பிரமணிய சாரூபமும் பிறவா நீர்த்தாகலின். கழறப்பட்ட கௌணியர்பிரான், சிவாஞ்ஞையின்படி சீகாழியிற் சிவபாதவிருதயர்க்கும் பகவதியார்க்கும் மகனாகவந்து மூன்று வயதிற்றானே சிவஞானம்பெற்று அற்புத ஆடல்புரியுஞான்று சமணரை அறபுதத்தால் வெற்றிகொண்டு அச்சமணர்களாலே தாழ்த்தப்பட்டிருந்த சைவசமயத்தை விளக்கி நிலைகொளநிறீஇனரென்க. அவரையே—அருமறைக் கௌணியன், ஆளுடையபிள்ளையார், சண்பைநாட்டுச் சம்பந்தப்பிள்ளையார், சமணசிங்கம், சிரபுரத்தலைவன், சீகாழிக்கௌணியன், ஞானபோனகன், திருநெறித்தலைவன், திருப்பூந்தராய் வேந்தன், பதினாயிரந் திருக்கூட்டத்தன், பரசமய

கோளரி, பாலறாவாயன், முத்தமிழ்விரகன், வானநாயகன் மைந்தன், வேணுபுரத்தலைவன் என்மனார் கற்றோர். இவர் திருவாச்சாபுரத்தில் திருநீலநக்கநாயனார் முருகநாயனார் திருநீலகண்டப்பெரும்பாணர் முதலிய சிவனடியார் களுடன் சிவச்சோதியிற் புக்கணைந்த *ஆதிமுத்தராதலா னும், அநாதிமுத்தனையுள்ள பரசுப்பிரமணியத்திற்கிக்கதி கூறற் கெட்டுணையும் பொருத்தமில்லாமையானும் யாங் கூறிய நிலைநின்று வெளிப்பட்டவரென்ற லுறுதி. அத னானே வானநாயகன்மைந்தனு மாவர். இங்ஙனம் அச் சம்பந்தர், உமாதேவியின் திருமுலைப்பால் பருகியதனாற் குமாரக்கடவு ளாகாரோ? என்னின்,—பரமசிவன் பன் றிக் குட்டிகட்கும் பால்கொடுத்த சரிதை மதுரைமான் மியத்தும் பழநித் தலபுராணத்துங் கேட்கப்படும்: அவை கள் குமாரக்கடவு ளல்லவே. அதனாலது கருணைவிளைவா மென்க.

(எசு) 76

சீட.—சிதம்பரக்ஷேத்திரத்தில் விஷ்ணு சயனித்திருக் கிற சித்திரகூடமெனும் ஒரு தலம்புகல் புராணத்தில், அவ்விஷ்ணு வென்பார் தம்மை வணங்கியாடிய நடேச னாகிய சிவனுக்குச் சூலமுங் குகேசனாகிய முருகனுக்கு வேலுங் கொடுத்ததாக வரைந்திருத்தலி னுண்மை யெவன்கொல்?

குரு.—விஷ்ணு, சிவனைத் தொழீஇப் பேறுபெற்ற விர்த்தாந்தங்களுட் சில முன்னரேயே விளக்கி யிருக்

*பெந்தத்திலிருந்து விடுதலையான ஆதிமுத்தரே யென்ப தற்குரிய அவருடைய திருவாக்கு முதலிய முக்கியப் பிரமாண மெல்லாம், இந்நூலாசிரியரது திட்பத்தி னறிந்துகொள்ளலாம். (திருப்பா சு-ம் பத்தின் முதற்பாட்டுரை).

கின்றும். அன்றியும் வேதாகம புராணேதிகாசங்கள் பெரும்பாலும் அதனையே பேசும். விஷ்ணு, குகேசனை வந்தித்த சரித்திரமும் பலவுள. அவற்றுட் சில காட்டுதும்:—சம்பவகாண்டத்தின் ௩௪ - வது அத்தியாயத்து ௨ - வது சுலோகத்தில் "முருகையனை விஷ்ணு முதலிய தேவர் யாவரும் வந்தித்தார்" எனவும், ௯-வது சுலோகத்தில் "(குமாரேசனுடைய மகாவிசுவரூபந் தரிசித்த) விஷ்ணு முதலிய தேவர்கள் சுவற்பநேரத்தில் நிலை வொடுங்கூடிக் கார்த்திகேய மூர்த்தியை வந்தனித்து" எனவும், வீரமாகேந்திரகாண்டத்தின் எ - ம் அத்தியாயத்து *௨௨, ௨௩ - ம் சுலோகங்களிற் "பிரமா விஷ்ணு வென்னு மிருவருந் துரிதத்திற் குமாரபிரான் சன்னிதியிலே தண்டாகாரமாக வீழ்ந்து வணங்கி" எனவும், இங்ஙனந் தென்மொழிப் புராணத்தின் ஏமகூடப் படலத்திற் "போந்த காலை யயலின் வந்து போற்றி யங்கை கூப்பியே—நாந்த கஞ்சிலைக்கதை நலங்கொள் சங்கு சக்கரம்—ஏந்தினேனு நான்முகனு மிந்திரத் தலைவனும்—ஆய்ந்து நேடி யின்ன தன்மை யார்வ மோடி யம்பினர்" எனவும், யுத்தகாண்டத்தின் ௧௨-ம் அத்தியாயத்து ௨௯, ௩௦ - ம் சுலோகங்களிற் "பின்பு விஷ்ணு முதலிய புத்தேள்கள் தேவாதிதேவனாகிய சுப்பிரமணியர்பால் உச்சிமீது அஞ்சலிகொடு சென்று மனக்களிப்பொடு தண்டன் சமர்ப்பித்து" எனவும், இங்ஙனந் தென்மொழிப் புராணத்தின் இரண்டாநாட் சூரபன்மன் யுத்தப்படலத்தில் "ஆய வேலைதனி லாறுமுகன்பால்—மாயனு மயனும் வானவர் கோவும்—மேய தேவர்களும் யாவரு மெய்தித் தூய வந்தனை யுடன்சொல

---

*"ததாநீமேவதரஸா ப்ரஹ்மாவிஷ்ணுச்சதாவுபௌ।
ப்ரணம்யதண்டவத்பூமௌ ஸ்கந்தமூசதுராநதௌ॥"

என்றுகூறிச் செல்லுமாற்றானறிக.

லுற்றூர்" எனவும், யுத்தகாண்டத்து ௩௫-ம் அத்தியாயத்து அ௦-ம் சுலோகத்திற் "பிரம விஷ்ணுக்கள் முதலிய எல்லாத் தேவர்களும் என்றும் அழிவற்ற வடிவேற் கடவுளை வந்தித்து" எனவும் வரும். இவற்றுட் குமாரதெய்வத்திற்கு விஷ்ணுவானவர், திரியங்க சாட்டாங்க வந்தனங்களுஞ் செய்த ஆவளி காண்கின்றும்.

இந் நியாயத்தைச் சம்பவகாண்டத்தின் ௩௪-ம் அத்தியாயத்து ௨௦-ம் சுலோகத்திற் "பின்னர்ப் பிரம விஷ்ணுக்கள் முதலிய சருவ தேவோத்தமரும் (கந்தபிரானுகிய) அவனது அளவற்ற தேஜோமண்டலத்தில் ஆயிரத்தில் ஓரங்கிசமட்டும் அறிந்தனர்" என்றும், தேவ காண்டத்தின் ௫-ம் அத்தியாயத்து ௩௭-ம் சுலோகத்திற் "பிரம விஷ்ணு முதலிய புத்தேள்களால் வந்தனிக்கத்தக்க (முருகனுகிய) எமது சிறந்த பதவியை" என்றும், உபதேசகாண்டத்தின் ௪-ம் அத்தியாயத்து எ, அ-ம் சுலோகங்களில் "மாயை தன் மகளாகிய அஜாமுகிக்குச் சொல்லுகின்ருள்; உன் சகோதரனுகிய சூரபன்மன் நிகரற்ற மயிலுருவுங் கோழியுருவுங் கொண்டுளனைப் பிரம விஷ்ணுக்களால் வணங்கத்தக்க பதவி யெய்தியிருக்கின்றனன்" என்றும், ௩௭-வது அத்தியாயத்து ௫-வது சுலோகத்திற் "பிரம விஷ்ணுக்கள் முதலிய சுரர்கள் (குமார மூர்த்திக்குரிய) இவ்விரதங்களை ஆசரித்ததனுல் முன்னர்ப் போர் முகத்திற் பொருதலான கொடிய அசுரர் அனைவரையும் பொன்றுவித்தனர்" என்றும் வராநின்ற பிரபல வாக்கியங்களும் உறுதிப்படுத்தும். இவையேயுமன்றி,

காஞ்சிப்புராணக் குமரகோட்டப் படலத்திற் "கோநிரைகள் காத்த குரிசிலு மன்றல்வெட்சி—மாலையா னருளினங்கண் வைகினுன்" என வருமாறு திருமாலானவர் குமரகோட்டத்து அடிகளின் திருவருள்பெற்று அங்

குறைந்தனரெனத் தடாரி முழக்கலாம். "திருமருவு புய னயனொ டயிராவ தக்குரிசி லடிபரவு பழநிமலை கதிர்காம முற்றுவளர் சிவசமய வறுமுகவ திருவேர கத்திலுறை பெருமாளே" என அருணகிரிநாதரும் அருளிச்செய்துள்ளார்.

விஷ்ணுமூர்த்தியானவர் விடுத்த சக்கராயுதத்தைக் கரத்தாற்பற்றிக் கழுத்தணியாக அணிந்துகொண்ட தாரகாசுரனைச் சங்கரித்து அச் சக்கரத்தை யெடுத்துத் தரித்திருந்த முருகவேளை நோக்கித் திருமாலானவர், தணிகைப்புராணத் துள்ளவாறு தணிகை அசலத்திலே தபமிழைத்து அச்சக்கராயுதம் பெற்றிருக்கின்றனர். அத் தலமான்மியத்தில் வெளியாமாறே திருமால் அவதார புருஷராய தசரத ராமமூர்த்தியானவரும் பரமசிவ னுத்தரவுப்படி தணிகைத்தலம் புக்குச் சரவண சுவாமியை நாடி யருந்தவநோற்று அச்சுவாமி பிரசன்னமானபின் அவரிடஞ் சிவஞானோபதேசம் பெற்று அவர் கட்டளைப் பிரகாரம் தம்மூர் போந்துய்ந்தனர்.

இன்னே பிரபலப் பிரமாண புஷ்டிமுழக்கம் எண்ணில இருக்க; குமாரக்கடவுளும், அவர் தந்தையாரும் விஷ்ணுவை வணங்கினர் வேல் சூல் வாங்கினரென்னும் உரை யெங்ஙனே தலைப்படும்! இவ்வாறு போதிக்க ஏதுவாயிருக்கின்ற அச்சித்திரகூட மான்மியம் இக்கதையைத் தருமாயின் அது நியாய விரோத மோசமே ஆமென்க. புளியைக் கண்டு வாயூறுமாறு சிவானந்த நடனங்கண்டு ஆனந்தமடைவான் சித்திரகூடத் துறையுந் திருமால், ஆண்டுத் தானொரு தலைவனையிடுதல் எஞ்ஞான்றுஞ் சாலாதென்க. நியாயமின்றிச் சிவபிரானையுஞ் சிவகுமாரனையுஞ் சிவனடியாரையுஞ் சிவசின்னங்களையுஞ் சிலர் இழித்துரைப்பதற்குப் பூர்வகாலங்களில் நிமிர்ந்த பொல்லாங்கு காரணமன்றோ? விளக்குதும்—

தக்ஷப்பிரஜாபதியுடைய யாகசாலையின்கண் விஷ்ணுவைப் பரத்துவமாகக் கொண்டிருந்த பிராமணரைத் ததீசி முனிவர் நோக்கித் தக்ஷகாண்டத்து உக - ம் அத்தியாயம் உடு, உசு, உஎ – ம் சுலோகங்களில் வருமாறு "ஆபாச அந்தணர்காள்! நீவிர் யாவரும் சாஸ்திரங்களிற் கேடுடை அருத்தத்தில் மனப்பற்றுளார்களும், எக்காலுஞ் சிவத்துரோக புத்தியுளார்களும், சிவார்ச்சனத்திற் பராமுகமுளார்களும், சிவனடியாரை இகழ்சித்தமுளார்களுமாகி எல்லா நரகங்களிலும் வீழ்வீர்களாக" எனச் சபித்திருக்கின்றார். இவ்விதம் தென்மொழிப்புராணத்து அனந்தன் சாபநீங்கு படலத்திலும்—

"பேசரிய மறைகளெலாம் பராபரனீ
யெனவணங்கிப் பெரிது போற்றும்
ஈசனையு மன்பரையு நீற்றொடுகண
டிகையினையு மிகழ்ந்து நீவிர்
காசினியின் மறையவரா யெந்நாளும்
பிறந்திறந்து கதியு றாது
பாசமத னிடைப்பட்டு மறையுரையா
நெறியதனிற் படுதி ரென்றான்"

என வரும். பிருகுமுனிவரின் ஆச்சிரமத்திருந்த அவர் மனைவியாய கியாதியையும் அங்கண் அடைக்கலம் புக்கிருந்த அசுரரையும் விடோமெனச் சினவிக் கொலையிழைத்த விஷ்ணுவை நோக்கி, உபதேசகாண்டத்தின் கூ - ம் அத்தியாயத்து உச, உடு - ம் சுலோகங்களில் வருமாறு "இவ்விஷ்ணுவுக்குப் பூலோகந்திற் கோடி கோடி சனன முண்டாகி ஒவ்வொரு சனனத்தும் அதிதுக்கந் தராநின்ற மனைவியிழத்தல் நேரிடுக. இவ்விஷ்ணுவை மட்டும் ஆராதிக்கும் பத்தர்கள் பாஷண்டர்களாகக் கடவர்" என அம்முனிவர் சபித்துள்ளார். அங்ஙனம்,

மிருத சஞ்சீவினி மந்திரத்தினலே தம் பன்னியை யுயிர்த்தெழும்வழி தேடிக்கொண்ட அம்முனிவர் சிவபெருமான் திருவாசகம் அங்கீகரித்துக் கோடி கோடி சனனமென்றதைப் பத்துச் சனனமாகவும், ஒரு சனனத்தின் மட்டும் பெண்டிழத்தல் நேரிடுகவெனவுந் தமது சாபத்தைப் பின்பு மாற்றியருளினர்.

உபதேசகாண்டத்தின் எ-ம் அத்தியாயத்து உசு, உரு-ம் சுலோகங்களிலுள்ளபடி "நீ மஹாபாபிகளாய இப்பார்ப்பார்களுடன் வேதமார்க்கங்களை யிகழ்ந்து கேடுறு புத்தகங்களில் மனப்பற்றுளனாகி, சதாசிவ வழிபாட்டிற் பராமுகமாக விருத்தி" என வைணவனை புண்டரீகனென்னும் வேதியனையும், அவனுடைய சீடக் கூட்டங்களையுந் துருவாச முனிவர் சபித்துள்ளார்.

அஹல்யா நாயகராய கௌதம முனிவராற் பஞ்ச காலத்தில் அன்னமிட்டாதரிக்கப்பட்ட சில மறையவர் பஞ்ச நீங்கிய ஞான்று தத்தம் ஊர்செல்ல விரும்பியதற்கு விடைகொடா அம்முனிவர் முன், அன்னவர் ஒரு மாயப்பசுவை யுண்டாக்கி விடுப்ப, அதனை விலக்குவான் வைக்கோல்கொடு மெள்ளத் தட்டியோட்டிய முனிவர் முன் அப்பசு வீழ்ந்து உயிரிழந்திடலும் அம்முனிவரைக் கோவதைக் குட்படுத்தி அவர் பெரியார்ப் பிழைத்தலாய நிந்தை புரிந்தபோது அக்கௌதமர், அப் பார்ப்பாரை நோக்கா 'நீயிர் இழிந்த மண்ணைத் தரித்துப் பரசிவனையும், அவரது திருநீற்றையும், அவரருள்பெற்ற அடியவரையும் ஞாலத்தில் நிந்தித்து நரகிற் செல்லக் கடவீர்" எனச் சபித்தமைக்குப் பிரமாணம், விருத்தாசல புராணத்தில்—

" கவுதமனை நிந்தைசெய்த காதன் மறையோரைத்
தவன்மிக முனிந்துநீவிர் தாழ்வுறு மணணிட்டுச்

சிவனையவ னீற்றையருள் சேர்ந்த வடியாரைப்
புவனிதனி னிந்தைசெய்து போநரகி லென்றான்''

எனவும், சம்பவகாண்டத்துப் கச-ம் அத்தியாயத்து உசு-ம் சுலோகத்தில் "இவர் முன்னாளிற் கௌதம முனிவரின் சாபத்தகப்பட்ட பாஷண்டர்களு ளொருவராதல் வேண்டும்'' எனவும் வரும்.

இத்தகைய சாபங்களின் வயப்பட்டு உழிதரு பார்ப்பாரும், விஷ்ணுமூர்த்தியைமட்டும் ஆராதிக்கும் யாவருஞ் சிவநிந்தகரே ஆவர். அந்நீரவருட் சிலர், ''சிவபூசை செய்து சிவனிடத்தே விஷ்ணு சக்கரம் பெற்றார்'' எனும் மொழி, மூல நூல்களில் ஆங்காங்கு மலிந்துகிடக்கும் மலிவுகண்டு அழுக்கா றுற்றுத் தந்தேவன்பாற் சிவன் சூலமேற்றதாக யாதொன்றிற் பொறிக்கா தென்செய்வார்! எண்ணும் வண்ணமெல்லாங் கிறுக்கா தென்செய்வார்!! அன்ப! இனி, வேறேதேனும் வினாவுண்டேல் அதனை வினவுக; இதனை விடுக.

(எஎ) 77

சீட.—இன்னும் ஓராசங்கை. ''சுப்பிரமணியர் ஞானம் நூறு'' என்னும் பெயருடை ஒரு சுவடியும், இன்னுஞ் சில வழுக் குழீஇய தமிழ்ப்பாட்டுக்களும் சுப்பிரமணியர் பாடியருளினரெனக் கொள்ளு மாறுகப் பொறித்திருக்கு முண்மை யாது?

குரு.—சங்கப்புலவனும், தெய்வப்புலவ சிகாமணியும், அகத்தியமெனுந் தமிழிலக்கண நூலாசிரியராய அகத்தியமாமுனிவர்க்குத் தமிழ்வித்தை யுணர்த்திய திராவிட மூலாசாரியனுமான கந்ததெய்வம், எழுத்துவழு, சொல்வழு, யாப்புவழு, பொருள்வழு, அலங்கார

வழு, ஆனந்தவழுவென்னு மாறு வழுக்களும், வேதாகம புராணேதிகாசாதி நூல்வழு முதலிய வழுக்களெலாங் குழுக்கொண்டுவாளா அப்பாத்தோலும் அடாத்தோலும் பொலிந்து கிடக்கும் அப்புன்கவிகளைத் திருவாய்மலர்ந் தருளிற்றென எவ்வறிஞர் சொல்லத்துணிவர்? சொல் லின் அது பெரிதுங் குற்றமாமே. உலகரெளிதி லுணரு மாறு அன்னணமயர்ந்தனரெனச் சமாதானஞ் சாற்ற லாமேயென்னின்,—அது, பாலருந்தாக் குழவிக்குப் பாலெனும் பறையை நனியருத்திட முயல்வார் போலா மென மறுக்க பின்னர் அப்பாட்டுக்க ளெவ்வழியாக ஏற்பட்டன எனின்,—நானே அவனெனக்கொளும் அகங் காரம் நிமிர்ந்த புன்தமிழாளன் பொறித்தவையென விவேகிகளாற் றுணியப்படும். அவ்வேடுகள், சங்கவித்து வான்களாலேனும், அருணகிரி நாதராலேனும், ஏனை ஆன்றோர்களாலேனும் இன்று காறும் அங்கீகரிக்கப்பட் டனவாக எவ்வாற்ருனுங் காணப்படவில்லை: இன்னோ ரல்லா வேறு சிலரே அங்கீகரிப்பர்: அம்மை சிவணிய அருந்திருக்குற ளாக்கிய திருவள்ளுவரே தெந்தினப் பாட்டுடை ஞானவெட்டியெனு மோரேட்டையும், திவ் விய திராவிட வோத்தாகிய திருவாசக மருளிச்செய்த மணிவாசகமூர்த்தியே ஞானத்தாழிசையெனும் ஒரு சிறு சுவடியையும் பாடினாரெனப் பணிக்குநர் போல்வாரே அவர்கண்டாய். இன்னவாறு பெயர்மருட்டுநூலு முல கிற் பலவுள. இச்சூழ்ச்சி அறியாதார், அதீதப் பொருளா யுள்ள சுப்பிரமணியத்தின் தன்மையை எப்படிக் காண் பர்? காணார் காணார்,! கதியுஞ்சேரார்!!

(எஅ) 78

சீட.—நன்று. சருவேசுரனை மகாருத்திரபிரா னுடைய பிரதான அங்கம் சுப்பிரமணிய ரூபத்தில் யாது?

தரு.—அன்னோற்கு அனாதியாயுள்ள நெற்றிக்கண் இறைவன் சண்முகங்களிலுமுண்டன்றோ. அதனாற் கந்த பிராற்குக் கண்கள் பதினெட்டெனவுங் கணிக்கப்பட்டு "அஷ்டாதச குமுதநயனன்" என ஒரு திருநாமமும் மகான்மாக்களால் வழங்கப்படுகின்றதரோ. *பிரமாணம் —சம்பவகாண்டத்தின் உஅ—வது அத்தியாயத்துப் கசு-வது சுலோகத்திற் "சண்முகங்களையுடைய சண்முகக்கடவுட் குப் பதினெண்கண்" எனவும், ௩௫-வது அத்தியாயத்து ௩௩-ம் சுலோகத்தில் "ஆறு திருமுகமும் பன்னிரு புய மும் பதினெட்டு விழியுமுடைய திருமேனியானது உலோ கானுக்கிரகார்த்தமாக அங்கீகரிக்கப்படும்" எனவும், ௪௧-வது அத்தியாயத்து ௪௫, ௪௬-ம் சுலோகங்களில் "ஆறு திருமுகத்தையும் பதினெட்டு நேத்திரத்தையும் பன்னிரண்டாயுதம் மிளிர் பன்னிரண்டு கையையு முடை யவன்" எனவும் ௫௦-வது அத்தியாயத்து ௨௩-வ்து சுலோகத்தில் "(முருகையற்கு) ஆறு திருமுகம் பன்னி ரண்டுகை கமலமலர்போன்ற பதினெண்கண்" எனவும் வருதல் காண்க.

(எக) 79

சீட.—ஈசனுடைய இலலாடநேத்திரம் முதலியன வும். அஸ்திரசின்னம் முதலியனவுங் காரியப்பட்டிருத் தல் கடுப்ப இவ்விறைவனுக்குங் காரியப்பட்ட வுண்மை யாங்ஙனம்?

---

*இப் பிரமாணத்திலுற வடமொழி யனைத்தையுஞ் ஆகா லயாரகசியத்தின் உ-ம் காண்டத்து க0-ன் உரையிற்கண்டு கொளலாம்.

தரு.—நன்று கடாயினாய்! இவ்வியாசத்து ௬௭ - வது கடாவிடையிற் கழறிய யானைமுகத்துத் தாரகாசுரனானவன் விடுத்த பிரமாஸ்திரம் முதலிய சிறந்த தேவப்படைகளெல்லாம் பாலசுப்பிரமணியத்தை நெருங்கிய காலையில் அவைகளின் வலிகுன்றி முன்னிற்கமாட்டாமற் பக்கங்களிலே தோத்திரஞ் செய்திருந்தன. பிறகு அவ்வசுரன், அளவிறந்த பலமும் மகிமையுமுடைப் பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்தபோது அதனைக் கந்தபிரான் கொடுத்தவன் வாக்குமாறாகத்தானே சுலபமாகக் கைப்பற்றிக்கொண்டனன். அங்ஙனம் கிரௌஞ்சன் பொன் வெள்ளி இரும்பு மயமான முப்புரமாக; அவைகளில் அந்தத் தாரகன் வித்தியுன்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷனென்னுந் திரிபுராசுரர்களாகத் தோன்றின காலை அவர்களையும் அப்புரங்களையும் ஒரு புன்னகைப் பிணையிலேயே அப்பிரானெரித்துவிட்டனன். அங்ஙனங் கிரௌஞ்சன் மேகமாகவும் தாரகன் இடியாகவும் ஆயினமை கண்டு அவற்றைச் சண்முகபிரான் சண்டமாருதமாகி நீக்கினான். கிரௌஞ்சன் கடலாக வுருமாறி வருவது காணாஉ அதனை அங்கை அளகம்போலக் குமாரன் குடித்துவிட்டனன். கிரௌஞ்சன் சக்கிரவாளகிரியாகவும் தாரகன் அந்தகார லோகமாகவும் நிற்கு நீர்மையுணர்ந்து அவைகளைக் கோடிசூரியப் பிரகாச வடிவாகி நிமலன் நீக்கிவிட்டனன். பின்பு அந்தத் தாரகனையும், மாயவித்தையிற் சிரேட்டனான அக்கிரௌஞ்சனையும் ஒரே தாக்கலிற் போழ்ந்துகொல்லும்படி படையரசாகிய வேலாயுதத்தை யேவிக்கொன்று கிரௌஞ்ச பருவதத்துள் மயங்கி நிற்கும் வீரபாகு முதலியோரை நோக்கி "வருக" என விளித்து மயக்கொழித்து வீரபாகு தேவரிடந் தாரகனுடைய பாசுபதாஸ்திரத்தை நல்கி அனுக்கிரகத்தருளினன். அப்பாற் சொன்னப்பேழையுஞ்

சொன்றிக்குழிசியுமே தெய்வமென் றிருப்பார் இறையு மறியா எம்பிராணுகிய அத்தம்பிரான் திருச்செந்திற்பதியி லிருந்து கடல்கடந்து போகிச்சூரனுடைய வீரமாகேந் திர புரத்திற்கு வடபுறத்தில் விசுவகருமனு லுண்டுசெய்த ஏமகூடமென்னும் பாசறையிற் றளங்களொடு தங்கியிருக் குங்காற் சூரபதுமனுடைய பட்டஸ்திரீயாகிய பதும கோமளை உதரத்துதித்த பிரதம குமாரனை பானு கோபன் செய்த முதனுட்போரில் அப்பானுகோபனென் பான் மோஹநாஸ்திரத்தால் நவவீரர் இலக்ஷர் படைத் தலைவர் சிவகணங்கள் ஆகிய அனைவரையும் மயக்கிக் கிடையிற் கிடத்திவிட்ட வன்மையை முற்றுணர்வுடைய அப்பெருமான் திருவுளத்தறிந்து அக்கணமே வன்மை சான்ற அமோஹாஸ்திரமொன்றைச் செலுத்தியவுடன் அது பானுகோபனது படையின் மகிமையை மங்குறச் செய்து மயக்குண்டார் மையல்மாற்றி ஆர்த்துவிடுத்த ஆண்டவனிடஞ் சேர்ந்தது. சூரபதுமன் செய்த இரண்டாநாட்போரிற் சேனைத் தலைவனுயிருந்த சிங்க முகாசுரன் மகனும் அதிசூரனென்பான் பூதவீரருள் ஒருவ னை உக்கிரனென்பான்மே லோச்சிய அக்கினியஸ்திரத் தின் மகிமையை அவ்வீரன் கண்ணுற்றுச் சரவணபவன் திருவடிகளைப் பத்தி பூருவமாகத் தியானித்துக் கொண்டே அவ்வஸ்திரத்தைப்பற்றி விழுங்கிவிட்டது மன்றி மீட்டுமீட்டும் இகலோனேவிடும் வருணஸ்திரம் பிரமாஸ்திரம் நாராயணஸ்திரமென்னும் சிறந்த தேவப் படைகளையும் அவ்வணமே வாய்மடுத்து அவ்வதிசூரனை யுங்கொன்று செயங்கொண்டனன். சூரபதுமன், சுவாமி நாதன்மீது விட்ட பிரமாஸ்திர நாராயணஸ்திரங்களை விமலன்வேல் விழுங்கிவிட்டது. பின்பு சூரன், பசுபதி கொடுத்திருந்த பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்த போழ்து அதனைக் காங்கேயனுனவன் திருக்கரம் நீட்டிக்

கொடுத்தவன் வாங்குமாறுபோல வாங்கிக்கொண்டனன். பானுகோபன் புரிந்த மூன்றாநாட்போரில் அந்தப் பானுகோபனனவன் தன் பாட்டியாகிய மாயை வயின் பெற்றுவந்தேவிய மாயாஸ்திரத்தால் ஆவியடங்கிய ஆயிரம்வெள்ளம் பூதகணங்களையும் படைத்தலைவர்களையும் இலக்ஷரையும் நவவீரரையும் ஒருசேரத்திரட்டி யாத்துக்கொடுபோய் அறுகடலுக்கு மப்புடையுள்ள சுத்தோதக சமுத்திரத்தில் ஞெமுங்க ஆழ்த்திக்கொண்டிருக்குஞான்று அதனை நாரதருஞ் சிலதேவரும் பாசறைபுக்குகுகசம்புவுக்கு விண்ணப்பித்தபோது உடனேயவன் அன்னிலை வடிவேற்படையை யேவினன். அது போந்து அம்மாயாஸ்திரத்தை அழித்து யாவரையும் விடுதலைசெய்து மயக்கொழித்து நிகழ்ந்த வைபவத்தைத் தன்னுடைய கர்த்தனுக்குத் தெரிவித்து அவன் திருக்கரத்தமர்ந்தது. நான்காநாட்போரிற் சூரனுடைய மூவாயிரம் பிள்ளைகளின் கரசரணாதிகள் இலக்ஷருள் ஒருவனான விசயனென்பவனாற் பன்முறை அறுத்தறுத்துத் தள்ளப்பட்டும் அன்னார் பிரமனிடம் பெற்றுள்ள வரப்பேற்றினாலே அவைகள் மீண்டுமீண்டு முண்டாகி யுத்தஞ்செய்யுமாற்றலை அவ்விசயன் வெல்லமாட்டாதவனாய்க் குகப்பிரமத்தினுடைய திருவடிகளைப்பத்தி மீதூரச் சிந்தித்து முறையிடுநீர்மையை யாண்டும் பரிபூரணமாயிருந்தறியும் அந்தப்பிரமமாகிய சண்முகபிரானறிந்து, அங்கண் அவன் விழிக்கு மட்டும் புலப்படவெழுந்தருளி, அவர்கள் வரபலத்தையும் ஒரே முறையி லொரே அஸ்திரத்தாற் றலைகளையறுக்க மடிவார்களெனும் இரகசியத்தையுந் தெரிவித்து, பயங்கரமான பைரவாஸ்திரத்தைக் கரத்தளித்து, "அன்ப! இதனல் வென்று களிக்கக்கடவை" எனக் கடாக்ஷித்தருளியபடி அன்னான் அம்மூவாயிரவரையும் முடித்துச் செயம்பெற்றனன். ஐந்தாநாட்போரில்

வடசமுத்திரத்தில் ஆசுரமென்னு நகரத்திலிருப்பவனும் சூரனுடைய பிரதம தம்பியாய் ஆயிரஞ் சிங்கமுகங்களும் இரண்டாயிரம் வன்கரங்களு முற்றவனுமாய சிங்கமுகா சுரனென்பான் சூரனுத்தரவு கடைப்பிடித்துப் போருக்கு வந்து கொடிய மாயாபாசத்தை வீசியபோது அஃது ஆயிரம்வெள்ளம் பூதகணங்களையும் பூதவீரரையும் இலக்ஷரையும் வீரபாகுமுதலிய நவவீரரையும் மதிமயங்க யாத்துக் கொடுபோய்ச் சத்தசாகரங்கட்கு மப்புறத்துள்ள உதய கிரியில் வைத்துக் காவல்கொண்டிருக்கும் அமையம் அச் சிங்கமுகன், எதிர்ப்பாரெவருமில்லா உற்சாகம் நனி தூண்ட விசாகப்பெருமாளிருக்கும் ஏமகூட நோக்கா வருவதை வாயுதேவன் வடிவேற்பெருமானுக்குத் தெரிவித்தவுடனே தன்பக்கலுள்ள ஆயிரம்வெள்ளஞ் சிவ கணங்களுடன் சமர்க்களம் வந்து அச்சிங்கமுகனுடன் சமர்தொடுத்திடலும் அவ்வசுரன் வெகுளி மீக்கொண்டு அந்த ஆயிரம்வெள்ளங் கணங்களையுங் கைகளால் வாரிக் கதலிக்கனியை விழுங்குவதுபோல விழுங்கி வெல்வி பேசுவதுகண்ட பாலசுப்பிரமணியம் புன்னகைகொண்டு தன் வில்லிற் பூட்டிவிடுத்த ஒருவயிர வாளியானது சிங்க முகனது மார்பைப் பெருநுழைபோற் றிறந்துவிட்டது. மேல், அவ்வழியாக விழுங்குண்ட கணங்கள் வெளிவருதல் கண்டு அவ்வசுரன் கரங்களால் அத்துவாரத்தை மூடிக்கொண்டு ஒருதண்டத்தைச் சுழற்றி வீசியபோது அதனைக் கந்தசுவாமி விடுத்த நான்கு சிலீமுகங்கள் கண்டித்துவிட்டு அவ்வசுரனுடைய நெற்றிகளிற் பாய்ந்துருவியோடின. அதனாலவ்வசுரன் வலிகுன்றி மயங்கிநின்ற தருணம் மார்புத் தொளையை மூடியிருந்த கரங்கள் நழுவிடலும் அவ்வழியாக எல்லாக்கணங்களும் வெளி வரும்படிக்கும் இரணகளத்தின் மூர்ச்சித்தவர்களும் மாண்டவர்களுஞ் சுகமாக வெழும்படிக்குங் கந்தபக

வான் கடாக்ஷித்தருளினன். அக்கணமே அப்பகவானேச்சிய ஓரத்திரயானது உதயகிரியண்மி மாயா பாசத்தை நாசஞ் செய்ததுமன்றி அப்பாச பந்திப்பிற் பட்ட வீரபாகுதேவர் முதலிய யாவருந் துயில்தெளிந் தெழுவார்ப்போல வெழுந்தவுடன் தான் புட்பகவிமானம் போன்ற அகல நீளமுடைய ஒரு விமானமாகி அன்னவரைத் தாங்கிக் கதுமென வானவழிக் கொடுபோந்து சண்முகப் பெருமான் சன்னிதானத்திறக்குபு முன்னர்ப் போ லம்புத்தூணிக்க ணடங்கியிருந்தது. அப்பால், கடும்போரிழைத்த சிங்கமுகனுடைய கரங்களையுஞ் சிரங்களையுங் காங்கேயன் பலமுறை அத்திரங்களால் அகைத் தகைத்துக் குவித்தபோழ்து அவைகள் மணிகண்டனாகிய சிவபிரா னளித்திருக்கின்ற வரப்பிரசாத மகிமையினுனே மீண்டு மீண்டு முண்டாம் விறலைத் திருவுளத் துள்கி "இனி முளையற்க" எனச் சிந்தித்து 'ஹும்' என்று உக்கிரமாக அதட்டி ஆமையினவயவம் உள்ளடங்கிக் கொள்ளுமாபோல அக்கரசிரங்க ளொடுங்கிட வொடுக்குபு ஒரு சிரமு மிருகரமுமே வெளி நிற்கும்படி ஆற்றினன். பெயர்த்தும், அச்சிங்கமுகன் ஒரு தண்டத்தைக் கடாவி வீரம்பேசியதறிந்த குமாரபரமேசுரன், உடனே யேவிய வச்சிராயுதமெழுந்து அச்சிங்கமுகனது மார்பிலேறிப்பிளந்து பிராணனைக் கிரகித்துக்கொண்டு வெளிப் பட்டுக் கங்கையிற் படிந்துவந்து தன் கடவுள் கரத்திருந்தது. மேல், சூரபன்மனுெடு முருகவேள் விளைத்த பெரும் போரில் அவனதாளுகைக்குட்பட்ட பகிரண்டங்களிலிருந்துவந்த அனேகங் கைகளுங் கால்களுந் தலைகளும் வானளாம் பேருருவுமுடைய அனேக அனேக வெள்ள அசுரப்படைகள் யுத்தகளத்தில் மாண்டு எவருஞ் செல்ல வழியின்றி விண்ணோங்கிக் குவிந்திருந்த பிணமலைகளைப் பரமேசுரனுகிய அம்முருகவேள் பன்னிருவிழிகளானுஞ்

சிறிது சினந்து பார்த்தவுடன் அவைகள் நீருகத் தகிக்கப்பட்டழிந்தன. ஆண்டுச் சூரமன்பனுற் றூண்டப்பட்ட இரண்டாயிரம் வயிர வாளிகளுங் குமரவேள் புயாசலங்களிற் பாய்ந்த காலை அவ்வாளிகள் கருகி வெந்து திசா திசைகளிற் பூழியாய்ப் பறந்துபோயின. பெயர்த்தும், பகிரண்டங்களிலிருந்து வந்து தன்னைச் சூழ்தருஞ் சூரனுடைய சதுரங்க சேனைகளையும் எந்தையாகிய குக பெருமான் ஒரு ஹுங்காரஞ்செய்து உக்கிரப் பார்வையாய்ச் சற்றுநோக்கலும் அவைகள் பக்கென்றெரிந்து சாம்பராய்ப் பறந்தன. பின் வந்த அளவற்ற அசுரக் கூட்டங்களையும் அம் மகாருத்திரனுகிய வடிவேற்கடவுள் முன்போனேக்கியபோது அவைகள் ஒல்லையிற்றகிக்கப் பட்டொழிந்தன. மேல், குகமூர்த்தி சக்கரம் கண்ட கோடரி தண்டம் முசலம் கட்கம் ஆகிய இவைகளை யெடுத்து நீங்கள் பகிரண்டங்களிலுள்ள அசுரர்களை இங்கே வராமல் அங்கங்கே சென்று தபுத்து விடுங்களெனக் கட்டளையிட்டவாறு அவைக ளனேகவுருவங்களாகி அன்னணஞ் செய்து முடித்தன. பின்பு சூரபதுமன், பரமசிவன் கொடுத்துள்ள சக்கர நாயகமாகிய சக்கராயுதத்தை யேவிய காலை அதனை ஆண்டலைக் கொடியோனுன எம்பெருமான், "வா வா" என்றழைத் தொருகரத்தி லேந்திக்கொண்டனன். மேல், சூரனுஞ் சுவாமியும் பல பிரமாண்டங்கடோறுஞ் சென்று யுத்தம் புரிந்தகால் ஆற்ருதோட்டம்பிடித்த சூரனைப் பின்றெடர்ந்து வீரமாகேந்திரம் போந்த அச்சுவாமி அப்பட்டணத்தின்கண் திரண்டெழுந்து தன்னை வளைந்து கொண்ட நால்வகைச் சேனைகளையுங் கண்டு ஒரு புன்னகை கொண்டபோது அவைகள் திரிபுராதிக ளெரிந்த முறைபோ லெரிந்து பூழியாய்ப்போயின. பின்னர், சூரபதுமன் தன்தாயாகிய மாயையைத் தருவித்து அவள்

போதித்தவாற்றான் இந்திரலோகத் தேரைவிடுத்து மகா சமுத்திரக் கடையிலிருந்த சஞ்சீவி மலையாகிய சுதா மந்தர பருவதத்தை யெடுத்துவரும்படி செய்து அப்படி வந்தனான்று போர்க்களத்தில் மாண்டுபோய சகோதரர் புத்திரர் மித்திரர் முதலிய எல்லா அசுரத் திரள்களு முயிர்த்தெழுந்து தேவர்களெல்லாம் பறவை முதலிய வுருவெடுத்தொளிக்கப் பெரும்போர் புரிவதைக் கண் ணுற்ற சரவண பெருமான், தனது பாசுபதாஸ்திரத் தைப் பிரயோகித்து அவுணர்கோன் நீங்கலாக ஏனை யனைவரையும் நொடிப்பொழுதுக்குள்ளே தகித்துச் சஞ்சீவிமலையையும் பொடிப்பொடி யாக்கிவிட்டனன். சிவசம்புவினுற் சூரனுக்கு நல்கியுள்ள மகா மகிமை கொண்ட அந்த இந்திரலோகத் தேரானது சூரனணைப் படி நவவீரராதி வீரர்களையுங் கணங்களையும் மயக்கித் தூக்கிக் கொடுபோகி அண்டகோளத்தில் வைத்திருப் பதைக் குமாரபகவானறிந்து அஸ்திரங்களைப் பிரயோ கித்து அத்தேருடனனைவரையுந் தனதருகில் வருமாறு செய்துகொண்டனன். அத் தேரைக் கார்த்திகேய மூர்த்தி கண்ணுறீஇ "இனி நீ, அசுரன் கட்டளைக்குட் படாதிங்கிருத்தி" என ஆஞ்ஞாபித்துத் தன்பக்கல் வைகுமாறு சேர்த்துக்கொண்டனன். பின்பு சூரபதுமன், சுவாமிமீது வலிய சூலாயுதத்தைக் கடாவிடலும் அதனைப் பிடித்துவரும்படி அச் சுவாமி, குலிசாயுதத்தைத் தூண் டிய நிமிடம் அஃது அச்சூலத்தை வாயிற் கௌவிப் பிடித்து வந்து தன்பெருமானது திருக்கரத்திருத்தியது. மேல், சூரனது சிங்கவாகனத்தைச் சுவாமி கொன்ற பின்றைச் சூரன், சமானமற்ற சக்கிரவாகப் புள்ளுருக் கொண்டு சருவ புவனங்களிலும் பிரவேசித்துச் சருவ சீவர்களும் இடருழந்து வருந்த எணைறு செயலிழைக் கும் முன்னிலையில் சங்கரதேசிகன் இரதம் விட்டிறங்கி,

மயிலுருக்கொண் டெதிர்நிற்கும் இந்திரன்மேல் ஆரோகணித்து, அச்சூரனை அமரில் வாட்டும்போது புள்ளுருவாயிருந்த அச்சூரன் சண்முக பிரானது தனுசை வாயாற் கடித் தொடிப்பான் உன்னிவரு முக்கிரத்தை அப்பிரான் நோக்குபு அக்கணம் அப்பகைவன் கொண்டிருக்கும் பறவையுருவானது இரண்டுதுண்டாய் விழும் படி வாள்கொடு வெட்டினன். பின்பு அச்சூரன், பிருதிவி அப்பு தேயு வாயுவென்னும் பூதவடிவங்களையும் அனேக தேவ வடிவங்களையும் வேறு பல வடிவங்களையுங்கொண் டெதிர்த்தபொழுது சுவாமி, அவைகளை யொடுக்கும் அஸ்திரங்களை யோச்சி யொடுக்கியடக்கினன். மேல், அச்சூரற்குப் பரமேசுரகுமாரன் தனது மகாவிச்சுவ ரூபத்தைக் காட்டி மறைத்த பின்னர் அச்சூரனனவன், பெயர்த்தும் அஞ்ஞான வடிவமாகி மாயமந்திர மொன்றை உச்சரித்து அவ்வலியாற் காடாந்தகார மான இருள்வடிவைப் பெரிதும் பெருக்கி அதனுள் மறைந்திருந்து பலப்பல சிரங்கள் பலப்பல கரங்களுள்ள ஒரு பேருருக்கொண் டெழீஇ விண்ணவரனை வரையும் விழுங்கத் துணிகையில் அதுதெரிந்த இந்திராதிதேவர்கள் உறுகணுற்று "பகவ காத்தி! பகவ காத்தி!!" என ஓலிடுமோலஞ் செவிக்கொண்ட தெய்வநாயகமாகிய சிவசுப்பிரமணிய பரமான்மா, தனது வேலாயுதத்தின்மீது விழிகளைப்பரப்பி "நீ, துரிதத்தில் இக்குரூரனை விடாது பிளந்தடக்கி இங்கு வருதி" என்றுஞ்ஞாபித்த வண்ணம் அளப்பிலா வன்மைசான்ற அவ்வேற்படையானது, கோடிசூரியப் பிரகாசஞ் சுடரவெழுந்து சூரனுடைய மாயப்பெருக்கை அழித்தவுடன், அச்சூரன் ஆழ்ந்த சமுத்திரமத்தியிற் பாய்ந்து விண் மண் திசாதிசைகளெல்லாந் தன்கீழடங் கத் தழைத்துப் பூத்துக் காய்த்தோங்கிய ஒரு மா விருக்ஷ

வுருக்கொண்டு கிளைகளை யசைத்துச் சகல புவனங் களையுந் தத்தளிக்கச் செய்யுங்கால் அப்படைநாயகம், அவ்விருக்ஷத்திற் பாய்ந்து ஊடுருவி யிருகூறுகப் பிளந்து தள்ளியது. உடனே சூரபன்மன், தனது மாயத்திறம் ஒழிந்து கனலினும் மிக்கெனக் கனன்று காய்ந்து பொள்ளெனப் பழைய வச்சிர தேகத்தைக் கொண்டு வலது கரத்தில் வாள்விதிர்த்து வருவது கண்ட அந்நெடுங் கூர்வேலானது, இரௌத்திராகார மாகக் கொதித்து மின்னிஞெரேலென அவனது விறல் மீக்கொண்ட மார்பிற் பாய்ந்து இருகூறுக ஈர்த்து வீழ்த்தித் தனது உக்கிரத்தை உள்ளடக்கி அருளுருக் கொண்டு ஆகாய கங்கையிற் படிந்து வந்து பண்டு போற் பரமகுமாரனது திருக்கரத்திற் சொலித்துக் கொண்டிருந்தது. பின்னர், அனேக பிரமாண்டாதிபதி யாகிய அச்சூர னுடற்பிளப்பு இரண்டும் மயிலுருவுங் கோழியுருவு மாயினமைகண்ட கருணையனாகிய குமார பகவான், கோழியைக் கொடியாக்கி மயிலை வாகன மாக்கிக் கொண்டருளினன். பின்பு அச் சூரபதுமனால் விலங்கிட்டுச் சிறை செய்யப்பட்டு இன்னல்கொண் டிருக்கும் சயந்தனுதி தேவர்களைத் தேவேசனைவன், வீரபாகு தேவரால் உடனே சமர்க்களத்தெல்லையிலே தரும்படிசெய்ததுமன்றி, அவுணரால் மாண்டுபோய பூதர் களையும் வீரர்களையும் உயிர்பெற்றெழுந்து வருபாக்குச் சிந்தித்து அவ்வாறு வந்த அவர்களும் புடைசூழ நடு நாயகமாக நின்றருளினன். பின்பு அக் குமரகுருவாகிய கட்டிளமைக் கடவுள். சமுத்திரத்தை நோக்கி "நீ, வீரமாகேந்திரபுரத்தைக் கரைத்து ஏகமாய் நின்றிடுக" எனக் கட்டளை யிட்டவாறு அதுவுஞ் செய்து முடித்தது. உடனே அவ் விமலன், விண்டு முதலிய கடவுளர் சூழ்தர நவவீரர் இலக்ஷர் பூதவீரரோடும் இரண்டாயிரம்

வெள்ளம் பூதகணங்களோடும் பொருகள எல்லையை யொல்லையிற் கடந்து கந்தமாதனங் தாண்டித் திருச் செந்திற் பதியை யடைந்து ஒரு சிங்காதனத் தெழுந் தருளி யிருக்குங்கால் அன்றிரவிலே தேவர் யாவரும் நூன் முறைப்படி தன்னைப் பூசித்து மெய்ப்பத்தி கொண்டதற் கின்புற்று, புராணத்தில்—

"நீண்டவருள் செய்திடுநெ டுந்தகைநு மக்கு
வேண்டுகுறை யுண்டெனின்வி ளம்புதிர்க ளென்னக்
காண்டகைய சூர்முதல்க ளைந்தெமைய ளித்தாய்
ஈண்டுனருள் பெற்றனமி யாதுகுறை மாதேர்.

ஒன்றினி யளிப்பதுள தன்னடியம் யாக்கை
நின்றிடு பகற்றுணையு நின்னிருக ழற்கண்
மன்றதலை யன்புறவ ரந்தருதி யென்றாய்
என்றிடலு நன்றெனவி ரங்கியருள் செய்தான்"

என வருமாறு "வேண்டும் வரமருள்வாம் கேட்டுக் கொண்மின்" என்றருள்புரிந்திடலும் அத்தேவர்கள், "நின தருள்பெற்ற எங்கட் கொருகுறையுமின்று. ஆயி னும் இத்தேக நிற்குமெல்லையும் மெய்ப் பத்தியுடன் நின்றிருவடிகளை நாடிநிற்கும் வரமொன்றனையே யினிக் கொடுத்திடல்வேண்டும்" என்ற வேண்டுகோளை யங்கீ கரித்து "அன்னணமே அளித்தனம்'' எனத் திருவாய் மலர்ந்தருளினன். அளிமிக்குடையாய்! இவ்வரலாறு களைப் புராணதாரமாகவே புகன்றனம்; அறிதி.

(அ0) 80

சீட.—நெற்றி நேத்திர அருத்தநாரீசுவரன் பகுத்த நெடுவேற்படை பரித்த கரமன்றி மற்றைப் பதினொரு கரத்துங் கடவுட்காயுதம் வந்தமூல மெவன்?

குரு.—ஏகாதசருத்திர வடிவாகிய பதினோராயுதங்களையும் பரமசிவனளிக்க வெடுத்தனொன்று அவைகளைப் பரமசிவகுமாரன் தன்னுடைய பதினொரு கரங்களிலும் பரித்தனன். விவரம்:— சம்பவகாண்டத்தின் ௩௭ - வது அத்தியாயத்துப் ௪௦ - ம் சுலோகத்திலுள்ளபடி *தோமரம், துவசம், பெரியகத்தி, வச்சிராயுதம், அம்பு, அங்குசம், கண்டை, †கமலம், கோதண்டம், ‡பிராசம் பரசு என்பன. இவ்வாயுதங்கட்கு வேறாகவும் பல கூறுவர் பலர். சுவாமி சருவாயுதபாணியாகலின் எவ்விதங் கூறினு மியையும்.

தோமரம் சுத்தமாயையிற் சுத்ததத்துவங்களை யுண்டுசெய்யுந் தன்மையையும், துவசம் பிரபஞ்ச வெற்றிப்பாட்டையும், பெரியகத்தி சனனமரணக் கொடியின் வேரையறுக்குந் தன்மையையும், வச்சிராயுதமும் பிராசமும் இவர் ஒருவரானுங் கெடுக்கப் படாதவ ரென்பதையும், கோதண்டமும் அம்பும் ஆன்மாக்களின் மூலமல விருத்திசங்காரத்தையும், அங்குசம் திரிகுண பிரேரகத்தையும், கண்டை மந்திரம் எழுத்தென்பவற்றை யுண்டுபண்ணும் பரநாதத்தை நடத்துதலையும், கமலம் விரிந்து கூம்புகின்ற வுலகம் சிவசத்திவச மென்பதையும், பரசு இலயத்தானமான

---

* தோமரம் = எறியீட்டி; வடசொல். வல்லயம் என்பது மிதுவே.

† கமலம் = தாமரை வடிவிற்றாய ஒருவகை ஆயுதம்.

‡ பிராசம் = ஈட்டி. தோமரத்திற்கு வேறாகவுள்ளது: இறகம் பென்றுங் கூறுப. தேன்மொழிப்புராணத்தில் இப்பிராசத்தை நீக்கித் தண்டம் சொல்லப்படுகிறது.

பரசு என்பதை மழுவாகவேனுங் கோடரியாகவேனுங் கொள்ளலாம்.

பராசத்தி ரூபத்தையு முணர்த்தும். எல்லாம் ஆன்மாக்களி னிமித்தமே ஆம்.

(அக) 81

௯௪.—முருகப் பெருமானுக்கு இலக்ஷத்தொன்பது தம்பியருளரெனும் விருத்தாந்த மென்னை?

௯௫.—கூறுதும். ஈசுவரனுடைய இலலாட லோசனங்களிலிருந்து பாவக தேசசுகள் பகிர்முகப் படுங்கால் புறநிமிர்ந்த பார்வதி யம்மையின் சரணச்சிலம்புகளிலுள்ள நவரத்தினங்களுள் ஒன்பது சிந்தின. அவற்றினிடம் அப்பார்வதியம்மையி னுருத்தோன்றிடலும் அதுதானே ஒன்பது பெண்களாயிற்று. தெய்வத் திருவுள மிருந்தவாறு அப்பெண்களாய சத்திகள் கருப்பமடைந்தனர். அச்சத்திகள் தேகம் புழுங்கிய ஞான்றுண்டாய வேர்வையிலிருந்து கையில் ஆயுதங்களுள்ள இலக்ஷம் வீரர் தோன்றினர். ஈசுவரி யனுக்கிரகத்தால் அவ்வொன்பதின்மர் கருப்பத்திலும் *ஒன்பது வீரர் தத்தந் தாய்மார்களி னிறங்களைப் பொருந்தி அவர்களுடைய உந்தித்தாமரை வழியாகப் பிதாமகன் பிறந்ததுபோற் பிறந்தார்கள். அவர்களே மேல் விளக்கிய சத்திகளுள் மாணிக்கவல்லி புத்திரன் வீரபாகு, தரளவல்லி புத்திரன் வீரகேசரி, புஷ்பராகி புத்திரன் வீரமகேந்திரன், கோமேதகப்பாவை புத்திரன் வீரமகேசன், வைடூரியமின் புத்திரன் வீரபுரந்தரன்,

* ஒன்பது வீரரும், நந்திதேவராதி கணத்தலைவரின் அமிசமென்பதாகத் தென்மொழிப் புராணத்திற் "புகலுநந்தியம் கணத்தவர் குழவியாய்ப் போந்து" என விளம்பப்படுகிறது. இச்செய்தி வடமொழிப் புராணத்தே இன்று.

வச்சிரவல்லி புத்திரன் வீரராக்ஷஸன், மரகதவல்லி புத்திரன் வீரமார்த்தாண்டன், பவளவல்லி புத்திரன் வீராந்தகன், நீலவல்லி புத்திரன் வீரதீரன் என்னு நவவீரராவர். இவர்கள் பரமசிவனளித்த பல ஆயுதங்களைக் கைப்பற்றிய குமாரரெனப்படுவார்கள். அதனாலிவர்களை முருகப்பெருமாற்குத் தம்பியரென வுபசரித்துரைக்க வழியுண்டாம். இலக்ஷரை முருகப்பெருமாற்கேனும் நவவீரர்க்கேனுந் தம்பியரென்னாது பரிசனரென்றே பணிக்கவேண்டும். அஃதெதுபோலுமெனின்,—சூரபதுமனாதியர் பிறக்குஞ் செவ்வி, வேர்வையிற் பிறந்த அசுர ரனைவரும் அச்சூரபதுமனாதியர்க்குத் தம்பியராகாமற் பரிசனராயின ஆவளிபோலும் என்க.

தேவேசனை பரசுப்பிரமணியத்தினாற் சூரபன்மனிடஞ் சுரர்கள் பொருட்டுத் திருச்செந்திற் பதியிலிருந்து தூதாக அனுப்பப்பட்டுத் தென்சமுத்திரக் கரையிலுள்ள கந்தமாதனவரையி லேறிநின்று அவ்வரை பூமியில் ஒருமுங்க விசுவரூபங்கொண்டு தென்முகமாயுதைந்து பாய்ந்து கடலைத் *தாண்டிப்போங்கால் வீரமாகேந்திரபுரத்திற்கு வடபாலுள்ள சமுத்திரநடுவண் ஆயிரந்தலையுடைய யாளிமுகனென்னும் அவுணவீரனுக்குக் கெடிஸ்தல மாயிருந்த இலங்கையெனு நகரத்தின் வடக்குக் கோபுரவாயிலில் ஐந்நூறு வெள்ளந் தானைகளுடன் காவல்கொண் டிருக்கும் வீரசிங்க னென்பான் வந்தெதிர்க்கக் கண்ணுறீஇ அவனையு மவன் சேனைகளையுஞ் செறுத்து அந்நகரிற் பாய்ந்து குதிதந்தபோது அந்நகர் தத்தளித்துக் கடலிலமிழ்வதை வீக்ஷணித்த அதிவீர னென்னும் யாளிமுகனுடைய புதல்வ

---

* தாண்டற் கடிபெயர்த்தவுடன் கந்தமாதனகிரி முன்போலெழுந்து நின்றதென வடமொழிப்புராணம் வழுத்தாநிற்கும்.

ஜனயும் அவன் சேனைகளையும் வாள்கொடு தரித்து மாய்த்த வயவரும், பின்னர் அவ்விலங்கையைக் கடந்து பாய்ந்து அந்தர கமனமாக வீரமாகேந்திர வெல்லையை அண்மிக் கோரன் அதிகோர னென்னும் பதாதித் தலைவ ரிருவர் நாலாயிரம் வெள்ளஞ் சதுரங்க சேனை களுடன் காவல்கொண்டிருக்கும் வடக்கு வாயிலின் முதனிலையையும் கிழக்கு வாயிலையும் அணவி நின்று பார்த்து அவ்வழிப்புகின் தாமதமேற்படுமென வுள்ளித் தெற்குவாயிலிற் போம் முன்னிலையில் அவ்வாயிலின் மீநிலையிற் பல கோடி அவுணருடன் ஓம்படைகொண் டிருக்கும் ஆயிரமானைமுகத்துக் கசமுகனென்னுந் தள கர்த்தன் தடுத்துப் போர்தரும்பொழுது தமது காலால் அவனைக் குழைத்துக்கொன்று சீறுருக்கொண் டு மேற் குச்சிகரி வாயில் வழியாக நகருட்புக்குச் சிறைச் சாலையி லிராநின்ற இந்திரகுமார சயந்தனைக்கண்டு *"வல்லையில் விடுதலை செய்யப்படும்" எனத் தேறு தல்கூறிச் சூரபதுமனுடைய சபையுட்போகி அங்குக் குமாரசுவாமியின் திருவருளால் வானத்திருந் திறங்கிய ஒரு திவ்விய சிங்காசனத்தின்மீது சூரபன் மனுக்கு மேலாக வீற்றிருந்து "சிறைப்பட்டிராநின்ற தேவர்களை விடுதலைசெய்து நெறியாய செங்கோல் செலுத்த

---

* இவ்விடத்திற் பத்து நாளிற் பகைஞரை யொழிக்கப்படு மென்று சொல்லினரெனத் தென்மொழிப்புராணத்து வீரபாகு சயந்தனைத் தேற்றுபடலத்து ௩உ - வது செய்யுட்கண் "ஈரி ரண்டிரு மூன்றுகு மிரும்பக லிடையே" என வருகிறது. இதற் சிசையச் சயந்தன் கனவுகாண்படலத்துப் கக - வது செய்யுட் கண்ணும் "ஐந்திரு வைகலி னவுணர் தந் தொகையு மல்ல லாற் றிய சூர னு முடிந்திட வடுதும்" என்று குமாரசுவாமி சொல்லி யருளினரென வருகிறது.

வேண்டிய நியாயங்களைச் செறுநர்ச்செருக்குஞ் சிவசுப்பிரமணிய தேவர் நிற்குத் தெரிவிக்கச் செம்மைத் தாய ஒரு கட்டளையிட்டனர்" எனச் சூரற்குச் சொன்னவரும், அவ்வசன மங்கீகரியா அச்சூரற்குப் பின்னர் நடக்குங்காரியம் இற்றெனத்தெரிவித்த திண்ணியரும், ஆண்டுச் சூரபன்மன் சினந்தேவிய ஆயிரம் வீரரை மடித்து நூறுதலையுடைய சதமுகனெனுந் தளத் தலைவனை ஒரு காலால் மிதித்துக்கொண்டு ஒரு காலாலே தலைகளை யெற்றி வதைத்து அவனுடைய படைப்பெருக்குக்களைக் கோபுரம் பிடுங்கியெறிந்து கோறல்செய்து சூரபதுமனுடைய அரண்மனையை ஓம் படைகொண்டிருக்கும் ஓரைம்பான் வெள்ளம் அசுர வீரர்களையுஞ் சேனைத்தலைவர்களையும் விச்சுவவுருவா யெழுந்து நிமிர்ந்து காலானுங் கையானும் மிதித்துக் கிழித்துத் தொலைத்து நகரழித்து ஐந்நூறு தலையுடைய சகச்சிரபாகுகளாய தளத்தலைவர்களையும் அன்னவர் தானைக் குழாங்களையுஞ் சாலவிருக்ஷத்தைப் பிடுங்கிக் கொண்டு சாடிச் சூரபதுமற்குச் சுதனை வச்சிரபாகுவுடன் வந்த நாலாயிரம்வெள்ளஞ் சதுரங்கசேனைகளையும் அதஞ்செய்து அவ்வச்சிரபாகுவையும் வாள்கொடு வெட்டி வதைத்த பொருநரும், அக்கால் விண்மணி அத்தமித்தது கண்டு மீளுமவதரம் இலங்கைக்கதிபனை யாளிமுகாசுரனைக் கட்கத்தாற் கண்டனஞ் செய்து திருச்செந்திற்பதி சேர்ந்து தமது சுயரூபத்தோடு சுப்பிரமணியக்கடவுள் பாதபதுமங்களைப் பணிந்து சூரனது அகங்காரக் கருத்தைத் தெரிவித்தவரும், இரண்டாநாட்போரிற் சேனாதிபதியாக வந்தவனும் தாரகாசுரனுடைய குமாரனுமான அசுரேந்திரனை வாளாலே துமித்து வெற்றிபெற்ற வீரரும், மூன்றாநாட் போரில் எண்மர் இலக்ஷர் பூதகணங்களுடன் சூரபதும

னது நகரத்தின் மேற்குச்சிகரி வாயிலைச் சூழ்ந்து வளைத்த ஞான்று ஆண் டோம்பல்கொண்டிருப்பவனும் அஜாமுகிக்குப் பின்னர் மாயைக்குங் காசியபர்க்கும் புத்திரனைப் புலிமுகத்துட னுதித்தவனுமான வியாக்கிரமுகனைச் சிங்கனென்னும் பூதவீரன் செகுத்த பின்னர்ப் பூதகணங்களாற் கோட்டைமதிலை யுதைத்திடிக்கும் படிக்குங் கோபுரத்தை வேருடன் பறித்தெடுத்து நகரமத்தியில் வீசும்படிக்குஞ் செய்து நகரத்துள் நுழைந்து அக்கினி அஸ்திரத்தையும் வாயு அஸ்திரத்தையு மோச்சிப் பதினாயிரம்யோசனை யளவுக்கு நகரைக் கொளுத்தியழித்தபோழ்து அதனை மாற்றுவான் சூரனு லேவப்பட்ட ஊழி மேகங்களை ஊழிக்கனற்படையால் வாட்டி மறைந்தொளிக்குமாறு செய்தவரும், இராப்போரிற் சூரனுடைய குமாரனாகிய மூன்று தலையுடைய இரணியனென்பானைக் கடலின் மச்சமாயுட்குற் றொளித்திருக்குமாறு குறும்பு தந்தவரும், நான்காநாட்போரிற் சூரனுடைய பிள்ளையும் இரணியன் தம்பியும் இளமையிற் சந்திரனைப் பிடித்துவந்து இமிசித்தவனுமாகிய அக்கினிமுக னேவிய காளியின் எட்டுக்கைகளையுந் தமதொரு கரத்தாற் பற்றிக்கொண்டு மற்றொருகரத்தா லவளது மார்பிலறைந்து வலியடங்கச்செய்த மொய்ம்புடையவரும், அவ்வக்கினிமுகனை வீரபத்திராஸ்திரத்தால் வீட்டினவரும், வீட்டுமுன் அவ்வக்கினிமுகனால் வீரபுரந்தரன் நீங்கலாக மாண்டுபோய ஏனைஏழு சகோதரரையு முயிர்த்தெழும்படி செய்கவென உயிர்க் குத்தகைக்காரனாகிய நமனுக்கு ஒரு பாணத்தின் அலகிற் றனே நகங்கொண்டு திருமுகமெழுதி விடுத்தவரும், அதுகண்ட அந்நமன் கைலாயச்சாரலுழிப்போந்து அங்குக் கருத்தனைப் புகழ்ந்துகொண்டிருந்த எழுவரையும் இதத்தோ டழைத்துவந்து மரித்துக்கிடந்த சரீரங்

களில் விடலும் அன்னவரெழுந்த செயலைக் கண்ணுற்றுக் களிதலை மீக்கொண்ட அந்நமனுற் புகழ்ந்து போற்றெடுக் கப் பூரித்தவரும், சூரனுடைய பிரதம மந்திரியாய தருமகோபனென்பான் புண்டரீகமென்னுந் திசைமத கரியி லேறிப் போர்தொடுத்து வீசிய வச்சிராயுதத்தைக் கரத்தாற்பற்றி அதனை அவன்மார்பின் மோதியுறுக் கினவரும், அம்மோதற் காற்ருது கீழேசாய்ந்த அத் தருமகோபனைக் காலாற் றுவைத்து முருக்கியவரும், ஐந்தாநாட்போரில் இரணரங்க சூரனுஞ் சூரியனைத் தளைப்படுத்தினவனுமான பானுகோபனுடைய கர சிரங்களை வானத்தினின்றபடியே வீரவாள்கொடு வெட்டி வெற்றிகொண்ட விறலுடையவரும், செயசாலிகளாய சிங்கமுகன்சிருர் நூற்றுவரையும் வாளாற்றுணித்து மாய்த்த மகா வாளுழவரும், முற்சொற்ற வீரபாகு தேவரென்பவரே. இத்தேவரே சிவசன்னிதியில் நந்தி தேவர் காவல் கொண்டிருப்பதுபோலக் கந்தசன்னிதி யிற் காவல்கொண்டிருக்கும் பெருமான்.

(அஉ) 82

சீட.—குமாரக்கடவுள், குடை யென்னும் ஒரு கூத் தும், துடியென்னும் ஒரு கூத்தும் எக்காரணங்கொடு விளைத்தனன்?

குரு.—பெரும்போரில் அவுணர் புறங்காட்டியோடு வான் தனது குடையைச்சாய்த் தாடிய திருநடனங் குடையெனவும், சூரபதும னென்பான் வேற்றுருக் கொண்டு சமுத்திரத்தில் ஆவரணமாகி நின்றகாலை அவ் வஞ்சவலி தணந்திடுவான் அச்சமுத்திரத்தின் அலைமே னின்று கால்நூபுரங் கலகலகலெனக் கறங் கக் கைத்துடி ரரரர ரரவென வுலம்பத் துடிகொட்டி

யாடிய திருநடனந் துடியெனவும் பெயர்பெறும் என் மனுர் முதுவர்.

(அங) 83

கீட.—சிருட்டிகருத்தாவாகிய விதியின் கட்டளைப் படி ஏழுமலையின் கண்ணவே தனித்தனி தவம்புரிந்த போதவான், புத்திராண்டன், புருகூதன், போதன், பாண்டரங்கன், சோமன், வாமனெனும் அனந்தமா புரத்து ஏழிருடிகளின் தலைகளையும் அம்மலைகளையும் வேற்படையான் வேல்கொடு கீண்டனனென்ப.அஃதெது பற்றியென்பதை விளக்கல்வேண்டும்?

கரு—பருப்பதியம்மை காஞ்சிபுரங்கடந்து திரு வருணைக்கேகுங்கால் தங்குற்ற ஒரு வெள்ளியிடையிற் சந்தியாவந்தனத்திற்குத் தண்ணீர் வேண்டுமெனலும் அருகிருந்த கதிர்வேற்பெருமான்,

"பதுமனு மவர்முன் சென்று பாவிகாள் வரைக ளேழில்
விதிமுறை தவஞ்செய் வீரேற் குமரவேள் விடுக்கும் வேலாற்
பொதிர்சடை முடியு முங்கள் வினைகளும் பொடியா மென்று
சதுர்முக னுரைத்துப் போனு னவருமத் தவமே செய்தார்"

எனவரும் அருணசலபுராணச் செய்யுளின்படி தம துடம் பிடியை நோக்கி "நீ ஏழிருடிகளின் வினைப்பவந் தபுப் பான் சடைத்தலைகளை வகிர்ந்து அன்னவர் பிரார்த்த னைப் பிரகாரம் சன்ம சாபல்லியமளித்து அக்கணமே நன்னீர்ச்சாகரம் புக்கு [நீர் = ] அம்புதங்கொணர்தி" என ஆஞ்ஞாபித் தோச்சியவாறு அவ்வுடம்பிடியுஞ் செய்தது. அன்னவாறு கொடுவந்த சலமே 'சேயாறு' என்று பிள்ளையின் பெயரால் நாளும்விளங்குகிற தென்க.

(அச) 84

௬ட.— மலேக்கிராதர் வளர்த்த வள்ளிமாதேவியைக் கந்தர் களவிற்கூடினரெனக் கதைப்பதெவன்?

தரு.—சம்பவகாண்டத்து ௩௬ – வது அத்தியாயத்து உச - வது சுலோகத்திலுள்ளபடி வாமனவதாரனை உபேந்திரனுடைய கண்களிற்றோன்றிய இரண்டு பெண் மணிகளுட் பின்னவளான சௌந்தரியவல்லி யென் பவள், முருகையனைநாடித் தவமிழைத்து அவ்வையன் தரிசனமானவுடன் "என்னை மணஞ்செய்தருள்க" எனக் கேட்டுக்கொண்டதற்கு அப்பெருமான் திருவருள் சுரந்து "நீ பூலோகஞ் சென்று சிவமுனியிடத்திராய்: அங்ஙன் யாமுன்னை விவாகஞ் செய்து கொள்வாம்" என்றருளியவாறு கிரியாசத்தியாகிய வள்ளிநாயகியை அப்பெருமாட்டியின் பூருவவிருப்பு நிறைவேறுமாருகக் கற்பு வெளிப்படுமாருக அற்புத் திருவிளையாடலின் ஆளுங் கோலமுஞ் சாலமும் பல, நம்பிரானுழைக் காணப்பட்டன. அவ்வற்பு, உலகத்தவர் செய்கை போன்ற களவிலதே. வள்ளிப்பிராட்டியின் வரலாறு குறித்தின்னும் விளக்குமளவு விளக்குவாம்.

மேன்மொழிந்தபடி உபேந்திரனுகிய விட்டுணுவுக் குப் புத்திரிகளாகத்தோன்றி இமயகிரிச்சாரலிற் சரவ ணப்பொய்கை அருகில் ஆகாரமின்றி முனிவர் நிய மத்தை அனுட்டித்து, முஞ்சமென்ற புல்லை அரை ஞாணைக யாத்து, பரிசுத்தமான மான்றோலே யிடையி லுடீஇ, மரவுரியை உத்தரீயமாகப் பூண்டு, திரு மேனியெங்குந் திருநீற்று லலங்கரித்து, உருத்திராக்ஷங் களை ஆபரணங்களாக வணிந்து மேலே ௩௬ - வது அத்தியாயத்து ௩௩, ௩ச - ம் சுலோகங்களில் வெளி

யாமாறு ஷடக்ஷர மகாமந்திரத்தைச் செபித்தபடியே சரவணபவனை நோக்கித் *தவமிழைத்த இருவருள் முன்னவளாய அமிர்தவல்லி யென்னு ஞானசத்தி இவ்வியாசத்தின் கூடு-வது கடாவிடையின் ஈற்றிற் சொன்னவண்ணங் கந்தபகவானின் அனுக்கிரக வுத்தரவு கடைப்பிடித்து அதியழகியதாய பெண்குழந்தையா யுருக்கொண்டு இந்திரன் பக்கல் பிள்ளையெனச் சென்றபோது,

"கொவ்வை போலிதழ்க் கன்னியை மனோவதி கொடுபோய்
அவ்வி யானையே போற்றிய தனையகா ரணத்தால்
தெய்வ யானையென் றொருபெய ரெய்தியே சிறிதும்
நொவ்வு றாதுவீற் றிருந்தனள் குமானை நுவன்றே"

எனவருஞ் செய்யுளின்படி அவ்விந்திரன் ஐராவதமென்னும் யானையிடமொப்புவித்தான். அது வளர்க்க வளர்ந்த காரணத்தாலே தெய்வயானையென்னுந் திருப்பெயர்பெற்றுத் தேவேந்திரற்குத் தேவசேனையெனும் பந்தனையாயிருந்து பரசுப்பிரமணியத்திற்கே பாத்தியமுள்ள சத்தியாயினள். இளையளாய சௌந்தரியவல்லி முருகையன் திருவருளிருந்தபடி தவநிலையிற்றனே அக்கினிப் பிரவேசமாகித் தூலம் ஒரீஇத் தொண்டைமண்டலத்தின் (மேற்பாடி) மூர்த்தாஸ்பாடியெனும் பதியிலுள்ள வள்ளிக்கிழங்கு மிகவுண்டாம் வள்ளிமலைப் பாங்கரில் சூக்குமசரீரியாய் நின்று குகதேவை நோக்கித் தவஞ்செய்தனள். அப்போழ்து அம்மலை மருங்கிலே தவம்புரிந்திருந்த சிவமுனிவர் தெய்வீகமாய்க் காட்சி மாத்திரமான மோகமாய் நோக்

---

* இத்தவம், பன்னிரண்டாண்டென்பது தேன்மொழிப் புராணம்.

குற்றுக் களிப்புற வந்த திருமானுதரத்திற் பொருந்திய கருவிற்றனே சூக்குமசரீரியாய் நின்றுள்ள அப்பிராட்டி நுழையா ஓரழகிய மானுட வடிவப்பெண்ணு யவதரித்தனள். பின்பு அக்குழந்தையைப் பெண்குழந்தை வேட்டு நறுந்தவமிழைத்த அம்மலைக் குடியாகிய சீறூருறை வேடர் தலைவனும் அவன் றலைவியுங் கண்டெடா வளர்க்க வளர்ந்து பன்னிரு பிராயமாவது தெரிந்த விழுப்பொருளாய அயிற்பெருமான், முன்னருளியவாறு பிராட்டியை ஆட்கொள்ளத் திருவருட் கருவூலமாகிய திருவுளத்தெண்ணிக் *கந்தகிரியிலிருந்தெழுந்தருளி வந்து, தொண்டைநாட்டெல்லையில் இந்திரனால் தேவலோகத்திலிருந்து கொடுவந்து நாட்டப்பட்டுத் தன்னுடைய திருவடியருச்சனைக்குத் தினந்தோறும் மூன்று [குவளை = ] செங்கழுநீர் மலர்களைத் தராநின்ற மூன்று செடிகளுள்ள இந்திரப் பொய்கையையுடைய தணிகையசலத்தின் சன்னிதியில் விளங்கியிருந்தனன். பின்பு வேடராச புத்திரி யுய்தற் பொருட்டுத் திருவுளமிரங்குபு மானைக்காட்டி மானைப் பிடிப்பார்போலத் தனது சுயஞ்சோதி மயமான திருவுருக்கரந்து கானவன் போன்ற மனிதவடிவாகி மலைமீது தினைவளாகங் காத்திருக்கும் நாயகி முன்னே பெண் மையல் கொண்டுளான்போற் பலவித வாது விளைத்தனன். அத்தருணம் அவன், வேடராசன் வரவு

---

* இக் கந்தகிரி, வாக்கு மனங்களால் அளக்கொண்ணு மகிமையுடைச் சுவர்க்கமென வருணித்துள்ள நிரல்களையும், ஈண்டுக் கூறப்படு வள்ளிமாதேவியின் வரலாறு முதலிய பல் பெருஞ் சிறப்புக்களைச் சாலவெடுத்துரைக்கும் நிரல்களையும் இந்நூலாசிரியரது ஸ்ரீமத் - குமாரசுவாமியத்திற் கக - திருவிளையாடல்களைக்கொண்ட முதற்காண்டத்திலே காணலாம். இஃதினிய பொழிப்புரையோடுமுளதே.

காண்டலும் தேவகாண்டத்தின் ௬ - வது அத்தியாயத்து ௫௭ - வது சுலோகப்படி அனந்த வேதங்களேக் கிளே களாகக் கொண்ட ஒருவேங்கைமரமா யோங்கித் திமிறி நின்று, வேடராசன் புறம்போய பின்னர் முன் போல வேடர்தலைவ வுருக்கொண்டு, வள்ளிநாயகிமுன் வாதிடுந்தருணம் பெயர்த்தும் அவ்வேடராசன் வரவு கண்டு, கையிலே தடியூன்றி வருமொரு கிழத்தனச் சைவசமய சன்னியாச வடிவுகாட்டி நின்றனன். பின்னர் ஏழுகுன்றுக்கப்பாலுள்ள சுனையுழை நீரருந்த வெனு வள்ளியம்மையுடன் போந்து அங்குத் தமது கரைதற்கிணங்காது செல்கின்ற பெருமாட்டியின் மனவுறுதியைத் திருவுளத்தி லினிதுமெச்சி அச்செல வினையுந் தடுக்கவெனு ஓரோம் உருவ யானையை வரவழைத்து வெருவுறுத்துவித்தனன். பின்னர்த் தன்னைத் தியானித்து நின்று வருந்துமவளுக்குத் தனது மெய்த்திருவுருவ தரிசனங்காட்டி நீ எனக்குத் தேவியே, எல்லாம் என் ஆடலேயென்று கூறித் திருத்திபுரிந் தருளினன். மேல், அவ்வருள் விளையாட்டுக்கடவுள், இரவிலே பிரிவாற்ருது தேவி வருந்துதலை யுணர்ந்து குறவர் குடியிருப்புக்குச் சென்று யாவருங்கண்படை கொண்ட பாதிராத்திரியிற் பாங்கியி னுதவியாற் குழகு சிறந்த குறக்கொடியை யழைத்துக்கொண்டு ஒரு விண்ணளாம் பூஞ்சோலை ஞாங்கரில் மேனயம் விளம்பி வினேதமா யிருக்குங்காற் சூரியோதயத்தின்மேல் ஆயுதபாணிகளாக வருகின்ற நம்பி முதலிய வேடர் வரவுகண்டஞ்சும் வள்ளிநாயகியை நோக்குபு "நீ அஞ் சற்க அஞ்சற்க; என்னேடு நீடுழி வாழிவாழி" என் ருசீர்வதித்துப் பின்புறத் திருத்தி வேடரெதிர் நின் றனன். வள்ளியைக் கரவடமாகக் கூட்டிக்கொண்டு வந்த கள்வன் இன்னனேயென்று அஞ்ஞான்று போர்

தொடுத்த வேடர்களை வீட்டவென அவ்வேடர் முன் னிலையிற்றனது [கொடி=]பதாகையாகியகாலாயுதத்தை நினைத்தழைத்துக் கூவும்படி செய்து பிரளயகால மேக கர்ச்சனைபோலுண்டாய அக்கூவுதலான் மூர்ச்சித் துயிரற்றவர்களாகக் கிடக்கும்படி அவர்களைச் செய்த னன். பின்பு, நாயகியும் நாரதரும் வேட்புற்றவண்ணங் கருணைபாலித்துத் தேவி பெருமையை யாவருமுணர் பாக்கு அத் தேவியைக்கொண்டே வேடருயிர்ப்புற் றெழுமாறருள்புரிந்து, அங்ஙனந் திருவிளையாடனிமித் தங் கொண்டிருந்த மானுடவுரு மறைத்து, அவர்கட்குத் தனது சண்முகத் திருவுருத் தரிசனங்கொடுத்து, அன்னவரில்லத்திற்றானே அன்னவரளித்த வேங்கைத் தோலின்மேற் றானுந் தேவியுமாக வெழுந்தருளியிருந்து, அங்ஙன் வேட்டுவச்சிறுமி வடிவாயிருக்கும் நாயகியைத் தான் கடைக்கணித்தவளவிலே அந்நாயகிபாலிருந்த வடிவும் அலங்கரிப்பும் மாறிப் பூருவம் விட்டுணு புத்திரி யானபோதிருந்த திவ்விய தெய்வ வடிவத்தோடும் அலங்கரிப்போடும் பிரகாசிக்கக்கண்ட அப்பெருமாட் டியை அக்கினி ஆதித்தன் கடவுள் பெந்துக்கள் சாக்ஷி யாகக் கைப்பற்றி, திருமணச் சடங்கெல்லாம் நாரதரான் முடிக்கமுடிப்பித்து, சிவபெருமான் ஆசீர்வதிக்கப் பிரம விட்டுணு உருத்திரேந்திராதி தேவரனைவருங் கற்பகப் பூக்களை வாரிவாரிச்சொரிய விளங்கியிருந்தனன். பின்பு அத்தேவேசனனவன், தான் வீணை வேய்ங்குழல் மிருதங் கம் முதலிய வாத்தியங்களுடன் நாளும் விளையாடி வாசஞ்செய்யாநின்ற கல்ஹார தடாகத்தோடுகூடிய செருத்தணியென்னுந் திருத்தணிகையிற் றேவியுடன் சுந்தர உல்லாச விலாசனைகத் திவ்விய சிங்காசனத்தி லெழுந்தருளியிருந்தனன். அப்பால் அவ்வள்ளிமணாளன் தான் வேடரொடு செருச்செய்து அது தணிந்திருந்த

காரணத்தாற் செருத்தணியெனவிளங்கும் அம்மலையைக் கடந்தேகுவான் ஒருதினந் தனது தெய்வ மானத்தை யழைத்து அதிற் றேவியுடன் ஆரோகணித்துக் கந்த கிரியாய சுவர்க்காலயத்திற்கெழுந்தருளி, இடப்பாகத் திலங்கும் பெரிய பிராட்டியாங் கஜ நாயகி கண்டு களிக்க இளைய பிராட்டியாம் வள்ளி நாயகியை வலப்பாகத்தமர்த்தி, துவாதச மகரகுண்டலங்களாற் சோபியாநின்ற விகசிதமுக கமல ஷட்கனுய், தயாந் தோளித அஷ்டாதச குமுத நயநனுய், குங்கும ரக்த வர்ணஜ்யோதிரூபனுய் சர்வாபரணங்களானும் பீதாம் பரங்களானும் அலங்கரிக்கப்பட்ட சர்வாவயவ மங்கள மூர்த்தியாய், ஸ்ரீ வல்லி தேவ சேநா சமேதனுக வீற்றிருப் பவனுயினன்.

அவ்விருக்கை யெத்தன்மைத்தோ? என்னின்,— கிரியாசத்தியாற் சரியை கிரியையென்ற இரண்டுபாத மும், ஞானசத்தியால் யோகம் ஞானமென்ற இரண்டு பாதமும் உலகில் விருத்தியாமாறு கிரியை ஞானம் இச்சை ஆதி பரையென்ற பஞ்ச சத்திகளையுந் தனது அமிசமாகக்கொண்டுள்ள அகண்ட சிவசத்தியைத் தானே தனதொருமுகமாய் விளங்குமாறு ஐக்கியஞ் செய்து பஞ்சகிருத்திய அதிட்டான நாயகனுகப் பிரகாசிக்குந் தன்மைத்தென்க. இருவரும் ஞானக் கிரியா சத்திக ளென்பதை, வள்ளியம்மை திருமணப் படலத்து உ௲அ - ம் செய்யுளில்—

"வல்லியர் கிரியை ஞான வல்லியின் கிளையாய்ச் சூழ" எனவும் கந்தபுராணத் தோத்திரப்பா மாலையில்—

"பொய்வருஞ் சமயர்க் கெட்டாப் புண்ணிய முதல்வன் மேனு மெய்வருஞ் சமபம் யாண்டு மிளிர்வுற விழியாற் பூத்க

சைவகுஞ் சரத்தின் ஞான சத்தியாய்த் திகழு மெங்கள்
தெய்வகுஞ் சரியார் செம்பொற் சிலம்படிசிரமேற் கொள்வாம்.

துள்ளிநாத் தழும்பிக்கண்ணீர் தொழுமவர்க்கல்லான் மற்றோர்க்
கெள்ளினுந் தணையு மெட்டா விறைவியெவ் வுலகுங்காப்பான்
உள்ளிநா டுறுசேய்க் கின்ப முருக்தொழிற் றலைவி யாமெம்
வள்ளிநா யகியார் பைம்பொன் மலரடி சென்னி சேர்ப்பாம்"

எனவும், இலிங்கபுராண உத்தரகாண்டத்துப் ௧௦ – வது அத்தியாயத்து ௬ - வது தொடர்பில்—

" தூவி மாமயி லூர்பவன் சுடர்மதி யணிந்தோன்
தேவ யானையே திருந்திழை யுமையவ ளாமால்"

எனவும் வருவனவும் மதுகைப்படுத்தும். மேற்சொற்ற சிவமுனிவர் மகாவிட்டுணுவெனவும், பெண்மான் இலக்குமியெனவும், வேடநம்பி உபேந்திரனெனவு மோர்க.

(அரு) 85

சீட.— இன்னணம் பேசற்கரிய குகபெருமான், பழநிப் பதியிலே தண்டபாணியென விளங்குங் காரணம் யாது?

குரு.— அவ்விருத்தாந்தம் பழநித்தலபுராணத் துள்ளபடி சுருக்கமாகச் சொல்லுதும்; விருப்பமாகக்கேள். இந்த வியாசத்து ௭௨ - வது வினவிடைக்கண் விளக்கிய *மா கனியை மூத்தபிள்ளை கைக்கொண்ட பின்னர் இளைய பிள்ளையாஞ் சேயோன் ஸ்ரீ கைலாயம் விட்டிழிந்து

* இக்கனி, "வண்டிருக்கையிலிருந்த மாதுளங்கனி பொன்று" எனப் பழநித்தலபுராணத்துந் திருவாவினன்குடிச் சருக்கத்து ௨அ-வது தூக்கின்கட்சாதி விளக்கப்படுவதாயிற்று.

தேவகிரியை அண்மி அங்குள்ள அடியவர்க்கு அனுக்கிரகஞ் செய்திருந்தனன். பின்பப்புடை பெயர்ந்து திருவாவினன்குடி யடைந்து அங்குச் சின்னாளிருந்தனன். அஃதுணர்ந்த உமாபதியும் உமாதேவியும், அவணெழுந்தருளியெதிர்வந்த குமாரமூர்த்தியைக் கண்டவுடன் அவ்வுமாபதி, பிள்ளையை வேணவாவுடன் விளித்து மடியிருத்துபு "என்று மிளையோய்! அறிவுடையோய்! பெரியோய்! மணமுள்ள ஒரு பழமும் பழமோ, கூறற்கரிய மறை ஞானக் குழவியாய பழம் நீ" எனத் திருவாய்மலர்ந்தருளினன். அக்காரணத்தானே திருவாவினன்குடிக்குப் "பழநி" எனுந் திருப்பெய ருண்டாயிற்று. பழம் நீ என்ற இருமொழித்தொடர் மகரங்கெடப் 'பழநி' எனவாயிற்று. முகம் முகன் எனப் போலியாயினாற்போலப் பழம் - பழன் எனவாகி நீ - நி எனக் குறுகி, பழன் + நி = பழனி என வாயிற்றெனினு மமையும். நிற்க.

தென்மலயத் தெழுந்தருளியிராநின்ற சித்தர் சிகாமணியும் முனி சிரேட்டருமாய அகத்தியமாமுனிவர் ஸ்ரீ கந்தசயிலத்திலுள்ள பல சிகரங்களுட் சிவகிரி சத்திகிரியெனும் இரண்டு சிகரங்களைப் பூவுலகிலே தென்றிசைக்கண் வைத்துப் பூசிப்பதற்காக எற்களிக்கவேண்டுமெனப் பரமேசுரனிடங் கேட்டனர். உடனே அப்பரமேசுரன், "அன்னணந் தந்தனங் கொடுபோ" என்றருளலும் முனிவர், செம்மாப்பு மீக்கொண்டு தன் கைகளை வானளாவ நீட்டுபு மாணுடைச் சிகரமிரண்டனையு மெடுத்துவந்து பூலோகத்திற் கேதாரமெனுங் கேத்திரஞ்சேர்ந்து பூர்ச்ச வனத்திற்கு ஈசான பாகத்தில் வைத்து நிறீஇப் பூசித்துப் பொதியமலைபுக்கனர். மறுநாட் புலரியில் அவ்வரை யிரண்டனையும் இங்குக் கொடுவருதுமென அம்முனிவர் குற்றாலத்தருகு வந்தனர். அஞ்ஞான்று சூரபன்மனுடைய

தளத்தலைவர்கட்கு வில்வித்தை கற்பித்திடுதலிற் சிறந்தவனும் இடும்பப்பெய ருடையனுமாய அவுண ஞெருவன், அம்முனித்தலைவரைத் தரிசித்து அடி தொழுது தனது வரலாறோதித் தவம் மிக்குடையீர்! இனி யென்னைக் காத்தருளல் நுங்கடன்மை கண்டீர். நீர் ஏவும் ஏவலை நிறைவேற்றி வரக்கடவேனென விண்ணப்பித்துக் கொண்டனன். அதுகேட்ட முனைவர் சிரோமணி, வலியுடையாய்! உத்தர திசைக்கட் பூர்ச்ச வனத்தில் யாம் வைத்துள்ள சிவகிரி சத்தி கிரியெனு மிரண்டனையு மிங்குக் கொணர்தியேல் எல்லா நலனு முண்டாமென்றனர். அக்கட்டளை பெற்ற அவ்விடும்பன், அவ்விதமே செய்வலெனத் துணிந்து அம்முனிமுத லோதிய மனுவைச் செவிமடுத் துச்சரித்த வண்ணங் கதுமெனநடந்து அவ்விடனெய்தி அம்மந்திரங்கொடு தவம்புரிந்தனன். ஆண்டொரு பிரமதண்டமுந் திசைதாங்கு சருப்பமாந் தாம்பும் எதிரிருக்கக் கண்ணுற்று அவனதிசயித்து உரிபோலாக் கப்பட்ட அவைகளில் அவ்விரண்டு கிரிகளையும் இருத்திக் காவடியெனத் தோளேற்றிக் கொடுவரும் வழியில் வழிதப்பிப்போய், இனி யெவ்வழிச் செல்வ லென மயங்குஞான்று, எஞ்சிந்தைவிட்டகலாப் பிரமக் குழவியாகிய பிரமணியமூர்த்தி, அரையிற் கரியகச்சை வரிந்து யாத்துக் காலிலே தோற்கழல்பூண்டு கையில் வில்லு மம்பு மிலங்க அவன் விழிக்குப் புலப்பட்டனன். நல்லூழா லவ்வுருக்கண்ட அன்னோன் நீர் யாவ ரென்றான். அதற்கப்பெருமான் "நாம் உலகாளு மிறை வன் குமாரன் வேட்டமாட வந்தோம்" எனப் பதி லிறுத்து, நீ அவுணனோ? என வினுதலும் அக்காவடி யாளன், ஆம்; குறுமுனிவருத்தரவுப்படி பொதிகைக்கு இம் மலைகளைக் கொடுபோகின்றேன், வழியறிகிலே

னென்றான். அற்றேல், நீ இவ்வழியே போந்து வராக கிரியை அண்மிப் பின்னர்ப் பொதிகையை யடைதி யென்று பிரான் குமாரன் சென்றனன். மேல் அவ் வல்லிடும்பன், வராகமலைக்கு வடபாற்போகி இஞ்ஞான் றுற்ற பசி தாக மயக்கையுங் காவடிபொறுத்த மொய்ம்பு வலியையும் இங்ஙன் நிவர்த்திசெய்துகொண்டு செல் வோமெனக் காவடியை யிறக்கித் தரையிற் பொருந்த வைத்துவிட்டுத் தன் மனைவியாகிய இடும்பியென்பாள் கொடு வந்து கொடாநின்ற நறுங்கனி கிழங்குகளை நனி யுண் டிளைப்பாறித் தங்காவடியைத் தூக்க எத்தனித் தான். அப்பொழுது அஃதெழும்பிற்றில்லை. உடனே இடும்பன் ஈதென் கொலோ? பெருமோசம் வந்துற்ற தெனக் கவன்று மனத்துயர் மீதூரச் சூழவந்து ஏவ ரிப்படிச் செய்வரென நோக்கலும் சிவகிரியிலுள்ள குராமரத்தடிவயின் ஒரு சிறுவனிற்கக் கண்ணுற முனிந்து இவன் யாவனோ? இவன் வலி காண்டுமென அச்சிறுவ னருகு குறுகி யுற்றுநோக்குங்கால் மார்பில் முப்புரி நூலுங் கையிலொரு கோலும் வயங்கப் பிடர்கிடர்ந்த சிறுகுடுமி பிறங்கக் கௌபீன தாரியாக வனப்போங்கி நிற்கக்கண்டனன். காண்டலும் இவன்றா னின்னணஞ் செய்துளான்: இவனை வென்றிகொண்டாலன்றி நாங் கிரிகொடு போகொணா தென்றுள்கி ஐயரே, நீர் யாவர்? நியாயவிரோதஞ் செய்ததென்? எனக் கடாவினான். அதற்கு அக்குழந்தை வடிவினன், விடைகூறாது சிறு நகையொன்றே விளைத்தனன். அதுகண்ட அவுணன், சிறுக்கன் செருக்குளனெனச் சீற்றத்தின் மூத்து "ஏ சிறுவ! நீ மலையைவிட்டு அப்புறம்போ; யான் கொலைத் தொழில்புரியுந் தகுவன்" எனச் சினவிக் கழறினன். அது செவிக்கொண்ட அருங் குருந்துருவினன், "தகுவ! இம்மலை எமதிருக்கை; நிற்குக் கொடுபோக வலியுண்

டேற் கொடுபோ" என இயம்பினன். உடனே அத்தகு வன், நன்று கூறினையென மிக வெகுண்டு நறுநறென எயிறு தின்று குருந்துருவன் நிற்கின்ற குராவடிக்கண் வெய்தெனப் பாய்ந்தான். பாய்ந்தவப் பலஞ்சான்ற இடும்பனுயிரைக் குழவுமேனிக்குமாரபகவான் விளையாட் டாக வாங்கிவிட்டனன். உடனே பிரம தண்டமும், நாகமும் அஞ்சி யெழுந்து சிறு முனிவரையடைந்து நடந்தவாறு நவின்று தத்தம் மிருக்கை புக்கன. பகவானு லுயிர்துறந்த அவ்வலிய தகுவன் வீழ்ந்து உயிர் விடும்போது அவன் பேழ்வாய்திறந் தலறிய பெரு முழக்கங் கேட்ட இடும்பியென்பாள், கதுமெனவோடி வந்து ஆவியற்ற தன் காதலனுருவைக் கண்ணுற்றுக் கலுழ்ந்து கலுழ்ந்து புலம்பியழுங்கால் கருணாநிதியாகிய கதிர்வேற்பெருமான் தேவர் சூழ்தர ஆண்டெழுந்தருளி னன். அத்திருக்காட்சி கண்ட அவ்விடும்பி, நன்று விளைந்ததெனை ஆண்டவனை வணங்கி அடியவர் காண் டொறுங் காண்டொறும் ஆனந்தம் விளைவிக்கும் அருட் பெருஞ்சோதியாகிய பகவானே! தடுத்தாட்கொளவந்த தயாநிதியே! என் கவலறுமாறு மாங்கலியபிக்ஷை கொடுத் தடியேங்களை யிரக்ஷித்தாளவேண்டு மெனப் பிரார்த்தித்தனள். அங்ஙனம் பெருமானுகிய பிரணவ சுவாமி, கடைக்க ணருள்பாலித்த அளவில் இடும்ப னுயிர்த்தெழுந்து அறிவு மீக்கொண்டுளானாய்த் திருக் குராவடியி னெழுந்தருளியிருக்குஞ் சிவபரம்பொருளை நறுமலர்தூய் அர்ச்சித்து வேதவேதாந்தங்களிற் சொல் லப்படுகிற ஆதிமத்தியாந்த ரகித பரமசிவா! நான் எனதென லொழித்த பரமயோகிகளின் இருதய பதும மாகிய தகராலயத்திற் சிதாகாசமா யியங்கு பரஞ் சோதீ! ஆன்மஞான தாரகமான திருவருள்ஞானத் தைப் பிரியாத பரமான்மாவே! பரசுப்பிரமணியமே!

சிற்றுணர்வுஞ் சிறுதொழிலுமுடைய யானே நின்றிரு விளையாட லறியவல்லேனென வழுத்தி வழிபட்டு ஆனந்தக்கண்ணீர் பெருக்கி யுள்ளுருக்கினன். அம் மெய்ப்பத்தி கண்ட தம்பிரான், உளம்மகிழ்ந்து "நிற்கு வேண்டும் வரமருள்வாங் கேட்டி" என்றருளிச்செய்த னன். அது செவிக்கொண்டு உவம்பூரித்த அவ்விடும்பா சுரன், "அடியவர்மாட் டருளுடை யெம்பெருமானே! இம்மலையடியி லிருந்துகொண்டு நினக்குக் குறைவற இயற்றும் பணியே யான்பெறு வரன்" என்றனன். "அவ்வாறே அருள் புரிந்தனம்" என் றங்கெழுந்தருளி னன் குமார பிரான். பின்பிடும்பன் குறுமுனிவரைத் தரிசித்தனுான்று அம்முனிவர், அன்ப! நம்பெருமான் பால் நற்பேறு பெற்றாயன்றோ? என நவின்று உளங் குளிர்ந்து திருவாவினன்குடி அண்மிச் சிவகிரிகண்டு சிவகுமாரனைப் பூசித்துச் சிவபிரானையு முமாதேவியை யும் பரவி அருகினிற்கு மிடும்பனை நோக்கி "நீ! சுவாமி கட்டளைப்படி யிங்கிருத்தி" என்றருளிச் செய்து தம திருப்பிடம் புக்கார்.

அற்புடையாய்! இடும்பன் காணுங்காற் கையிலொரு தண்டத்தொடு கந்தபகவா னின்றமையால் அவர் தண் டாயுத பாணியென அடியவராற் கொண்டாடப்படு கின்றார். அப்பழநிப்பதியை மோக்ஷ தரிசனஸ்தல மென வும், இடும்பன் கொடுவந்த காவடி ஐதிகத்தையே இந் நாளுளார் காவடியெனக்கொண்டு குமாரவழிபாடு புரி கின்றனரெனவும், அது பழநிப்பதிக்கே சால்புடையுரித் தெனவு மோர்தி.

(அசு) 86

சீடன்.—இவ்வியாசத்துப் சஙு - வது வினாவிடையில் விளம்பப்பட்ட பராசரபுத்திரர் அறுவரையும் அறுமுகச்

சிவபெருமான், சீடர்களாகக் கொளநேர்ந்த மூலமும், கொண்டருளிய முறைமையு மெப்படியேயோ?

## சண்முனிவர்

௫௫.—அனாதியாயுள்ள வைதிக மார்க்கத்திற்குஞ் சைவமார்க்கத்திற்கும் முரணாக அன்னவர் நாணல்வனத் தோடையின் மச்சங்களைப்பிடித்து வாயிற் கயிறுகோத்து விளையாட்டயர்ந்தது குற்றமென்றுள்கி "மச்சங்கட்குத் துன்புதந்த நீயிர் மச்சங்களாகுதிர், உமைமுலைப்பா லுண்டகாலம் இச்சாபம் நீங்குக" எனத் தந்தை பராசரரா லிடப்பட்ட சாப மனுபவிப்பான், அவர் சரவணப் பொய்கை வயின் மீனாய்க் கிடந்தனர். சரவணபவற்கு ஊட்டுநிமித்தம் பார்வதிதேவி பொற்கிண்ணத்திற் கறந்த பயோதரப்பால் அக்கிண்ணம் நிரம்பி அதி கரித்து அப்பொய்கைக்கண் வீழ்ந்து பெருகியபோது அதனை அச் சகுலிக ளுண்டு பண்டையுருக் கொண்டன. மேல் அன்னார். சிவனது கட்டளைப்படி கந்தபிரானை நேடித் திருப்பரங்கிரியிலிருந்து தவநோற்றார்கள். அஞ் ஞான்று சூரசங்காரம் நடாத்த அங்கு வந்த முருகப் பெருமான் அவர்க்குத் தரிசனங்கொடுத்து எம்முடன் வம்மினென் றழைத்துச்சென்று சூரனது நகரம்புக் கிருந்து அவனைச் சங்கரித்துச் செந்திலம்பதி வந்த பின்னே அப்பராசலமடைந்து அம்முனி மக்கட்குக் கல்லாலடியின் ஞானாசாரிய மூர்த்தமாய்ச் சனகாதி முனிவர் நால்வருக்காகப் பரமசிவ னெழுந்தருளி அனுக்கிரகஞ் செய்ததுபோலப் பரமாசாரியனா யெழுந் தருளியிருந்து தன்னை யறிவிப்பதற்காய ஞானயோகத் திற்குரிய சின்முத்திரைப் பஞ்சவுறுப்புக்களானுஞ் சொல்லாமற் சொல்லி அசைவற விருந்து சித்தத்தைச்

சிவத்தின்க ணிறுவிக்காட்டினன். கண்ட முத்திரை கேசரி முத்திரை முதலிய முத்திரைகளைத் தனதங்க மாக வுடைய அச் சின்முத்திரை, வலக்கரத்தின் நடு விரல் ஆழிவிரல் கடைவிரலெனும் ஆணவம் கன்மம் மாயையாகிய மும்மலங்களை விலக்கியும், பெருவிரல் சுட்டுவிரலெனும் பரமான்மா சீவான்மா என்பவைகளைச் சேர்த்து முணர்த்தத்தக்க இரகசியக் குறிப்பாகும். இக் குறிப்பில் மலமாகிய பாசமும் உபயான்மாக்களாகிய பதியும் பசுவு முள்ள வுண்மையையும், *அம்முத்திரை இருதயமத்தியில் வைக்கப்பட்டதனுனே தகரோபாசனை யிலேயே அங்கிட்டைகூடவேண்டுமெனுந் தீர்வையும்அறி.

(அஎ) 87

சீட.—இன்னமும், அன்பர்மாட் டருள்பெருக்குங் குமாரமூர்த்தி, அடியவர்க்கு அனுக்கிரகஞ்செய்த சரிதங் களுட் சில விரும்புமென்னைத் திருத்திப்படுத்த லெவ் வெவ்வாற்ருன்?

## பிரமேந்திரன்

குரு.—காஷாயம் பூண்டு தண்டு கமண்டலந் தாங்கிய தவத்தழகும், விளர்த்தபற்கள் பிரகாசிக்கும் முகத்தழகு முடைய பிரமேந்திர னென்னும் ஒரு பிராமண சன்னி யாசிக்குப் பகவானுகிய குமாரக் கடவுள், திருவாவினன்

---

* இச் சின்முத்திரையே மோனமுத்திரை யெனப்படு மென்பதும், இதன் குறிப்புப்பொருள் இன்னதென்பதும் திருப்பா ௲ - ம் பத்தின் அ - ன் உரையுழைக் கண்டு கொளற் பாலன; பொருளும் நனிபெரிய வென்க.

குடிக்கண் வைகல்லியமற்ற கைவல்லியமாகிய சாயுச்சிய கதி அளித்தருளினன்.

## நித்தியநாதன்

திரேதாயுகத்தில் உலகாண்ட நித்தியநாதனென்னும் அரசன், பூருவபுண்ணியபலத்தா லுலகைத்துறந்து திருவாவினன்குடி யடைந்து பரசுப்பிரமணியத்தின் திருவடிகளைப் பூஜித்துக்கொண்டிருந்தனன். அப்பொழு தவ்வாண்டவன் ஞானசாரியனாக வெளிப்பட்டமை கண்ணுற்ற அவ்வரையன், அவன் திருவடிகளிற் றண்டாகாரமாக வீழ்ந்தெழீஇ முகமெலாங் கண்ணீர் தாரை தாரையாய் வாரப் பேரன்பு பெருக்கிப் பெருந்துதி செய்து எம்பெரும! நினதருட்புணையொன் றெனக்குக் கிட்டினமையால் இனிப் பிறந்தைக் கடல் கடக்க எண்ணுத லென்கடன் : கரையேற்றுத னின்கட னென்றனன். அப்பொழு தப்பராபரனாகிய ஆண்டவன், "நிற்கு வேண்டியதைக் கேள், அருள்புரிதும்" என்றனன். அரையன், பரமேசா! சிவயோகத்தை அருடியென் றடிதொழுதான். அவ்வணமே செய்துமென அனுக்கிரகஞ்செய்து அக்கடவுள் அந்தர்த்தான மாயினன்.

## சொன்னகுத்தன்

துவாபரயுகத்தில் அந்தத் திருவாவினன்குடியில் வணிகர் குலத்துச் சொன்னகுத்தனெனும் பெயரிய வொருவனும் மகேசையெனும் பெயரிய அவன் மனைவியும் இல்லறம் வழாது வாழுநாளில் மகப்பே றில்லாமை குறித்துப் புண்ணிய நதிகளிற் குடைந்து தெய்வத் தலங்களைத் தரிசித்து வணங்கி விரதாதிகளிழைத்து வருந்தினர். பின்னுந் திருவாவினன்குடியைச் சார்ந்த சண்முக நதிக்கரை யெய்துபு அக்கரையின் கீழ்த்

திசையில் நாராயணற்போற்றித் தவங் கிடந்தனர். ஆண்டுப் பிரசன்னமான அந்நாராயணன், "இச்சன் மத்தி னுங்கட்கு மகப்பேறில்லை: பிறந்தானு மிறந்து போம்" என்றனன். அன்னவர், ஆயினுந் தருகவென் றதற்காக அந்நாராயணன் "அவ்வணமே யாகுக" என் றருளி மறைந்து தனது சங்கத்தை அவர்க்குக் குழந்தையாகப் பிறக்கும்படி கட்டளையிட்டவண்ணம் அவ்வளையு மோராண்மகவாக அந்நாய்கன் மனைவி யுதரத்தமர்ந்து பிறந்துவளர்ந்து ஐந்துவயதடைந்தது. அப்படிக்காய அச்சிறுபிள்ளை தன்னொத்த சிறுருடன் வெளிப்பட்டு விளையாட்டயர்ந்து வில்வகானனத் தரு குள்ள தேனு தீர்த்தத்திற் குடைந்தாடுங்காற் பண்டை யுணர் வுண்டாகிச் சங்குருவடைந்து திருமால் கரத்தமர்ந் தது. அதனையறியாத் தந்தையுந் தாயுந் தம்புத்திரன் தண்ணீரிலமிழ்ந்தி மரித்தனனென அளவிறந்த துய ருழந்து, அத்தீர்த்தத்துட்டேடிக் கண்டிலராகி, எமை யாளுங் குமரவேள் பதாம்புயங்களை யிதயத்திருத்திக் கலுழ்ந்தனர். அஞ்ஞான்றப்பகவான் திருவுளமிரங்கித் திவ்விய ஆபரணங்க ளழகெரிப்ப, இடையில் வனப்பு வாய்ந்த ஆடை வெயில்விரிப்ப, செவ்விய வாயில் இளநகை தோன்ற, மாண்டமகன் வந்தனன்போல வந்தனன். மகனிழந்த அவ்விருவரும் மகன் வந்தன னென அக்குருந்தைக் கட்டியணைத்து எங்குற்று யெங்குற்று யெங்குலக்கொழுந்தே! எங்களுயிர் போகா வண்ணமிரக்ஷித்த அருமருந்தே! என்றரற்றுங்கால் அக் குருந் துருவினன், அவர்களை யுலகறிய ஆள்வதற்காக மயூரவாகனத்தின்மீது தனது சண்முகத் திருவுருவைக் காட்டியருளினன் : உம்பர் பூமாரி பொழிந்தனர் : விண் ணிற்பேரிகை முழங்கிற்று : கருதிய தொண்டர்யாவருங் கண்டு களிகொண்டார். சொன்னகுத்தனும் அவன்

வாழ்க்கைத் துணைவியு மதிசயித்துத் திருவடி தொழுது நின்றூர். அங்ஙனம் அச்சண்முகேசுரனாகிய வான நாயகன் அவ்விருவரையும் நோக்குபு நுமக்கு விஷ்ணுமூர்த்தியா னருளிய வர மிம்மட்டேயெனப் புதல்வன் வரலா றுரைத்து நசைஇய வரங்கள் நல்கி அந்தர்த்தான மாயினன்.

## வசுமந்தன்

கலியுகத்தில் வேளாளகுல தீபனாகிய வசுமந்தனென் போன், அந்தத் திருவாவினன்குடிக் கணித்தாயுள்ள நெல்லிவனம் அண்முற்றங்குள்ள முனிவரை வழிபட்டு "வைகாசி விசாகப்பூரணையில் மயில்மீது முருகவேள் வரும்; அதுகாறுந் தபஞ்செய்தி" எனும் அவருரை கடைப்பிடித்துத் தபநோற்றனன். அன்னகாலை யெழுந் தருளிவந்த சண்முகப் பரம்பொருளை முனிவரும் வசு மந்தனும் ஷடக்ஷரத்தைச் செபித்து ஆனந்தக்கூத்தா டியும் பாடியும் வந்தித்த தருணம், உலகம் புரக்கும் ஸ்ரீஹரியும் நீயேயென்று சிலர் செப்பினர். உடனே அப்பரம்பொருள், சங்கு சக்கர கதா தரனாகியு மெதிர் நின்றருளினன். மீட்டுஞ் சண்முகத் திருவுருக்கொண்டு வசுமந்தற்கு ஞானனுக்கிரகஞ்செய்து திருவாவினன் குடி புக்கனன். மேல், அவ்வசுமந்தன், திரிகால வுணர் வுடையவனாகிப் பூருவசன்மத்தில் தான் காசிபமரபில் அறுதொழிலாளனா யிருந்தனான்று தாழ்ந்த குலத்தவர் தொழிலிழைத்த கொழிப்பால் இச்சன்மத்தி லிக்குலனா யினேன் : அச்சன்மத்திற் பயின்ற தவப்பயனா னுங்களை யுஞ் சிவகுமாரனையுந் தரிசிக்கப்பெற்றனன் : இனி, பரமுத்தி யடைவலென அம்முனிவர்கட் கோதிவிட்டு அப்பதிக்கண் ஞானசமாதிகூடி சுப்பிரமணிய சுயம்புவின் திருவடி நீழலிற் பொருந்தி யுய்ந்தனன்.

## சேரர்கோன்

பத்தவற்சலனாகிய பழநியாண்டவன், பழநிமலையாஞ் சிவகிரிமீது தனக்கோராலயங் கட்டுவித்த மலைநாட்டரச னாகிய சேரர்கோற்குத் தரிசனங்கொடுத்துக் கைலாய பதவிபெறற் கனுக்கிரகஞ் செய்தனன்.

## மாதுசிரோமணி

பாண்டிப்பதியிலுள்ள திருப்பரங் குன்றத்தின்கண் "முருகா முருகா" என மொழிந்து வராநின்ற ஒரு மாதுசிரோமணியின் மணாளன், "அதனைச் சொல்லற்க; எனது நாமத்தைச் சொல்க" எனக் கற்பித்த காலை அம்மடந்தை அதனைக்கேளாது பெயர்த்தும் முருகா முருகாவெனச் சொல்லினள். அதுகண்ட அன்னோன், சுளித்து அவள் கரத்தை யாயுதத்தாற் சேதித்தனன். அக்கணம் அக்கரத்தினை வளரும்படி அப்பிரா னனுக் கிரகஞ் செய்தனன்.

## சித்திரசேனன்

ஞானகிரியிலே தவங்கிடந்த சூரியகுலத்தரையனா கிய சித்திரசேனப் பெயரினன், பரமசிவன் நான்மாடக் கூடலிற் புரிதருமாட லனைத்தையும் எற்குக் காட்டி யருளல் வேண்டுமென வேட்புற்று விண்ணப்பித்தகாலை, எமையாளுங் குகப்பெருமான் அன்னணமே காட்டி யருளினன்.

## கனகசுந்தரி

கலிங்கநாட் டரசீன்ற கனகசுந்தரியென்பாள், பொருநை நதி மூலத்திற் றுன்மூழ்கவெனப் போந்த காலை ஆயிடைவந்த அயக்கிரீவ னென்னும் மாதவற்

கண்ணுற்று அவமதித்து நகைத்தனள். அது நிமித் தம் "இனி யெய்தும் பிறப்பி லெம்போல் நீயுங் குதிரை முகங் கோடி" என அவ்வயக்கிரீவ னிட்டசாப மனுப விப்பான், அன்னு ளம்முகத்தோடு உக்கிரப்பெருவழுதி யெனும் பாண்டியமன்னற்குப் பந்தனையா யுதித்திருந் தனள். அக்கால் ஆகாயவாணி யறிவித்தவாறு வாரிசூழ் கிடந்த திருச்செந்திற்பதியின் வதனாரம்ப தீர்த்தத் துழை அம்மகடூஉ குடைந்திடலு மவட்குற்ற பரிமுக னொரீஇ நறுமுகனிலவ அறுமுக னருள்பாலித்தனன். இத்திருச் செந்திற்பதி செயந்தியெனவுஞ் சிந்து புர மெனவும் பெயர்பெற்றுள்ளது.*

## அதிதி

நாரத ருபதேசப்படிக்குத் திருச்செந்திலிற் பன்னி ரண்டு பூரணை சந்தானவிரதஞ் சாதித்த அதிதி யென் பாட்கு இந்திரோபேந்திரர்களைப் பெறும்பே றுறுமாறு அச்சண்முகானந்த னனுக்கிரகித்தனன்.

## தேவேந்திரன் வெண்களிறு

தேவேந்திரன் துருவாச முனிவ ரளித்த மலர் மாலையைப் புனைந்து கொளாது தானேறியிருக்கும் வெள் ளானையின் மத்தக வயின் வைத்தகாலை, அதனை யவ் வானை, தொண்டலத்தாற் றூக்கிச் சிதைத் தழித்தது. அதுகண்ட துருவாச ருடன்றுரைத்த வுரையின்படி துறக்கவாழ்விழந்த அவ்விந்திரன், செந்திற்பதிபுக்குச்

* வேறு பல்பெயர்களும் பெற்றுளதென்பது, ஸ்ரீமத் - குமாரசுவாமியத்தில் திருச்சீரலைவாயத்திருவிளையாடலி லறியப் படும்.

செவ்வேளைப் பூசித்தனன். அவ்வே ளவற்கவ் வாழ்வு பொருந்த அனுக்கிரகித்தனன். அவ் வெண்களிறு நாரத ருபதேசப்படி செந்திற்பதி போந்து ஐந்து வைகலளவுந் தண்ணந்தாமரைப்போதுகளான் முருகவேள் பொன்னந் தாமரையடி அர்ச்சித்துப் புரைதீர்ந்து முன்னேய்ப்ப விண்ணவர்கோன் பக்கல்சென் றுய்ந்தது.

## பவ வேதியன்

நூலாராய்வான் மதங்களின் சொரூபமெலாமுணர்ந் தனுபவமிலியா யெவையும் மித்தை; தெய்வமென்பதும் பொய்யெனத் துணிந்து குரக்குமனஞ் சென்றவாறு நடந்து பவத்தின் மூத்திறந்த வேதிய னொருவன், நிரயமெலா மனுபவித்த பின்றைப் பாண்டிநாட்டில் ஒருவாலேயமாகப் பிறந்து செந்திலம்பதி யெய்துபு மரித்த ஞான்று, அன்னவன் கமலாசனத்தா னுலகடைந் துய்யக் கந்தபிரான் கருணைபாலித்தனன். [வாலேயம் = கழுதை.]

## பவ மிலேச்சன்

ஆனானும் மீனானும் மேயும் அனாசாரத்தின் மூத்துக் கொலையின் மூத்துக் களவின் மூத்துப் பொய்யின் மூத்திருந்த மிலேச்சனொருவன், செந்திற்கோயினுழைந் தங்குள்ள வேதியரைச் சீறி ஆர்த்துக் கரவாள்விதிர்த்து மூலவிக்கிரகத்தின் முன்னர்ச் செல்பாக்கு விரைந் தோடிவீழ்ந் துயிர்துறந்திடலும், அன்னானைக் காலபடர் பற்றற் கெத்தனித்தனர். அக்கணம் ஆண்டைக் குமரற் றொழுதிருக்குங் கணநாதர், இவன் குமாரபெருமான் திருமுன்பு உயிர்துறந்தமையாற் பாவமொரீஇப் புண் ணிய மூர்த்தியாயினான்; நீயிர் பற்றன்மி னென்று அக்

காலபடரை விலக்கித் தன் திருவடிக்கமலவாழ்விற் சேர்க்குமாறு அக் குமாரபெருமான் கருணை கூர்ந்தனன்.

## வியாக்கிரபாதர்

சிதம்பர க்ஷேத்திரத்தில் வதிதரும் வியாக்கிரபாத முனிவர், திருச்செந்தினகர் குறுகிக் குமாரற்பூசித்தனர். அக்குமாரன், அப்பூசையை அங்கீகரித்து அவரெண்ணிய வெண்ணத்தைப் பூர்த்திசெய்தருளினன்.

## சுகப்பிரம இருடி

வியாசர் குமாரராய சுகப்பிரமஇருடி யென்பார். அவ்வியாச ருபதேசப்படி அத்திருச்செந்தி லடைந்து கந்தற் பூசித்தனர். அக்கந்தன், அவர் கருதுங் கருத்துணர்ந்து "இனி நீ சீவன்முத்தனுக வுய்தி" என ஆசீர்வதித் தருளினன். அவருமவ்வித மாயினர்.

## ஈராயிரவர் பன்னீராயிரவர்

பூவுலகுஞ் சுவர்க்கமுந் திரிமூர்த்திகளின் மூவுலகும் புக்குய்யப் பிரமன் முதலிய மும்மூர்த்திகள்பாலும் வரம்பெற்ற காரணத்தானே திரி சுதந்திரரெனும் பெயர் கொண்ட பிராமண முனிவர் எழுபத் தெண்ணுயிரவருள் திருச்செந்திலில் வதிந்த ஈராயிரவரையும், சுவாமிமலை யில் வதிந்த பன்னீராயிரவரையும் அந்தக் குகபர மான்மா வானவன் அடியவராகக்கொண் டருளினன்.

## கபிலர் முதலிய யோகிகள்

திரி கூடாசலத்திற் கீசானதிசைக் கண்ணதாய திருவிலஞ்சியிற் கபிலர் முதலிய யோகிகள் பரமசேயைப்

பராவினர். ஆண்டைப் பிரசன்னமாய அச்சேய்க் கடவுள் மும்மூர்த்திகளும் என்னிலுளரெனத் தரிசனங் காட்டி யருளினன்.

## குகன்

கங்கைநதிக்கு வடபாலுள்ள சிங்கிபேரியெனும் பட்டினத்தில் வதிதருங் குகனென்பான் வேண்டு கோளின்படி எம்பிரானுன சம்புமைந்தன், தசரத ராம மூர்த்தியின் சரிதப்படிக்கெல்லாந் தானே நடந்து காட்டினன். அன்றியும், அக்குகற்குத் தன்கண்ணே அவ்விராம தரிசனம்நல்கி மூல மாயிருள் துமித்துப் பிரமானந்த மோக்கமுங்கொடுத் தருளினன்.

## கோசிகன்

துங்கபத்திரைக்கு வடபாலுழைக் கோசிகனென்னு மொரு வேதியற்குச் சங்கராசாரியனுய அக்குமாரேசுரன்: பிரசன்னகி ஞானேபதேசஞ்செய் தருளினன்.

## நந்திதேவர்

சிவதத்துவ விவேகத்தை யெற்குணர்த்தி நின்திரு வருளால் நின்னடிக்க ணென்றுபட்டிருக்கும் பரமுத்தியி லடியேனை அழுத்தியிடல் வேண்டுமெனக் கைலையிற் பரம சிவன் முன்பு விண்ணப்பித்துக்கொண்ட நந்திதேவரை அந்தச் சிவபெருமான் நோக்குபு "நீ பூலோகத்திற் றிருத் தணிகையசலம் அண்மிக் குமாரனைத் தரிசித்தல் வேண் டும்; அங்ஙனம் அம்மூர்த்தியால் நின்கருத்து முற்றுப் பெறும்" என் றறைதந் தருளினன். அவ்வாணை கடைப் பிடித்த நந்திதேவர், அவ்வசலமெய்தி நெடுநா ளருந் தவஞ் செய்தார். ஸ்ரீமத் - பிரமகுமாரன் மயில்மீது

பிரசன்னனுயினன். அத்தரிசனங்கண்ட அந்நந்திதேவர், அவன் சரணுரவிந்தங்களிற் சாட்டாங்க வந்தனஞ்செய்து வேத வாக்கியங்களான் மீக்கூறி நின்றனர். அங்ஙனங் குமரவேள், "நீ வேட்டதென்னே? விளம்புதி தருதும்" என்றனன். பெயர்த்தும் அந்நந்திப்புத்தேள் பணிந் துரைத்ததோர்ந்து வில்வ சயிலத்துள்ள சிவதத்துவா முத தீர்த்தத்தைத் திருக்கரத்தாளே நதிரூபமாக அவ ணழைத்து, அதனிடை அந்நந்திதேவரைப் படிந்தெழு மாறு செய்வித்து, சிவதத்துவ பதிஞானம்போதித்து, முடிவி லின்பமயமான முத்திநிலையி லிருத்துவித்து, இனிக் கைலைக்கேகெனக் கட்டளையிட்டருளினன்.

## வாசுகி

திருப்பாற் கடல்கடைந்த காலத்தில் மத்திற்பூட்டிய கயிருயிருந்த வாசுகியெனும் பெருநாகம், அக்கடை தலினு லுண்டாய தேக வருத்தத்தையும் பலவீனத்தை யும் போக்கித் திடம்பெற வேண்டுமென்று முற்சொற்ற தணிகையசலத்திற் றபஞ்செய்தகாலத்தே அந் நாகத் திற்கு அறுமுகச்சிவபெருமான் தரிசனமாகி அத்துன்பு தீர்த்து வலியருளிச் செய்தனன்.

## சைகீசவ்வியர் மாணுக்கர்

(ஜைகீஷவ்யஃ) சைகீசவ்விய ரெனப்படு முனிவ ருடைய மாணுக்கர்களுட் பஞ்ச மகாபாதகம் புரிந்த ஒருவரை அம்முனிவர் நோக்காது நோக்கி, "உன்னை நான் பார்க்கவுங் கூடாது: மகாபாதகமைந்தையும் நீ பண்ணினமையாற் பரிகாரமுங் கண்டிலேன்: ஆதலின், நீ யாண்டேனுமோடிப்போய்விடு" எனக் கடினகட்டளை யிட்டு விலக்கினர். அப்படி விலக்குண்ட அம்மாணவக

ஞர், ஆ! கொன்னே கெட்டேனே யென இருங் கவலைக் கடற் படிந்து ஆஅ தெய்வமே! எளியேனென்செய்வேன்; எடுத்தசன்மம் பழுதாயிற்றே; இனி யெவ்வாறுய்வே னெனுஞ் சிந்தையோடு ஸ்ரீசைலத் தெல்லையை யடைந் தனர். அஞ்ஞான்று அங்குத் திருக்கோவில்கொண் டிரா நின்ற மகாபாதக நாசனாகிய குகக்கடவுள், திருவுள மிரங்கி அவருக்குத் தன்னுருத் தரிசனங் கொடுத்துப் பாபமொழித்து, அவரைப் பரிசுத்தராக்கி ஆட்கொண் டருளினன்.

## சற்புத்திரன்

ஈழநாட்டின் கண்ணதாய கதிர்காமமென்னுந் தலத் தைத் தரிசிக்கவென்று வழிநடக்குஞ் சற்புத்திரனென் னும் ஒரு வணிகனைக் காட்டானை பிடித்துக்கொண்ட போழ்து அவ்வணிகன், கதிர்காமவேலா! என்று கூப்பிட் டனன். உடனே அந்தப்பெருமான் ஒருகானவன்போல் வேலொடும் அங்கு வெளிப்பட்டு அக்கரியைத் துணித்து. அவனை யிரக்ஷித்தருளினன்.

## யானையான கந்தருவன்

தேவகுருவின் வசனங் கடந்தமைபற்றி அவரிட்ட சாபத்தான் யானையுருவாய ஒரு கந்தருவன், அக்கதிர் காமக் காட்டகத்தே இறக்குஞான்று அக் கந்தருவனுக் குற்ற சாபநிவர்த்தி செய்தருளினன்.

## உரோம இருடி

பரமசிவற்குப் பிரணவார்த்த முபதேசித்த திருக் கோலத்தை உரோமஇருடி தரிசிக்க விரும்பியபோது அதனைத் தண்டகமெனுந் தொண்டைநாட்டின் கண்ண தாய காட்டாவூரில் அக்கந்தன் காட்டியருளினன்.

## மலயன், மாரன்

காசியபர் செய்த யாகத்திற் கிடையூறுண்டுசெய்த மலயன் மாரனெனும் வானோர்மாற்றலரிருவரையும் அந்த முருகவேள் பரமனுத்தரவுப்படி அத்தொண்டை நாட்டிலுள்ள இளையனார் வேலூரிற் கோறல்புரிந்து அவ் யாகத்தை முடிக்க அருள்செய்தனன்.

## ஆண்டார்குப்பத்தன்பன்

தொண்டை நாட்டிலுள்ள *ஆண்டார்குப்பமெனுங் க்ஷேத்திரத்திற் பரமபதியாய அந்தக் குமர குருபரன், பிரமனைத் தடுத்தாட்கொண்ட கோலமாக ஒரு பத்தனுக்குத் தரிசனங்கொடுத் தருளினன்.

## வாசவன் குதிரை

மலைநாட்டுச் சுசீந்திரமெனுந் தலத்தினைச்சார்ந்த வேள்விமலையிலே தம்மைநாடிப் பூசித்த வாசவனுடைய குதிரைக்குற்ற மனக்கவல் தீர்த்தனுக்கிரகித்தனன்.

## அருணகிரிநாதர்

வில்லிபுத்தூராழ்வா ரென்னும் ஒரு வைணவரைக் கல்வியில் வென்று கன்னதானஞ் செய்தவரும், சத்தி பிரசன்ன சித்தியுடைச் சம்பந்தாண்டானெனும் பெயரிய ஒரு சமணனைத் திருவருட்டகையாற் பன்முறை வென்றிகொண்டவரும், தாயுமானார் எந்நாட்கண்ணியிற் "கந்தரனுபூதிபெற்றுக் கந்தரனுபூதி சொன்ன—எந்தை

---

*இதனை, அண்டர்குப்பமென்றும், ஆண்டிக்குப்பமென்றுஞ் சிலர் கூறுப.

யரு ணுடி யிருக்குநா ளெந்நாளோ'' என மீக்கூறிப் பாடொரு மாண்புடையரும், சிறுகண்ணுத் துறவுபூண்டு திருவண்ணுமலேயி லெழுந்தருளியிருந்தவருமான அருண கிரிநாதர்க்கு உண்டாயிருந்த பெருநோவுங் கருநோவுந் தீர்த்து அவரை ஆட்கொளும்பொருட்டும், இவ்வுலகிற் சற்சமயநெறி தழைத்து அந்நெறிநின்று சீவகோடிகளினி துய்யும்பொருட்டும் அருட்சந்தப்பா மாலேயென விளங் கும்படி தானே "முத்தைத்தரு பத்தித்திருநகை யத்திக் கிறை சத்திச்சரவண—முத்திக்கொரு வித்துக்குருபர வெனவோதும்'' என அடிமுத லெடுத்துக்கொடுக்க; அதனை ஆதாரமாகக்கொண்டு அவ்வருணகிரிநாத சுவாமி களாலே தலமுறையாகவும் பொதுமுறையாகவும் பாடி யருளியனவுங் கேட்டவளவிற் பாசம்பாற்றிப் பரமுத்திக் காட்படுத்தும் ஆற்றலுடையனவுமாய பல்லாயிரந் திருப் புகழ்ப் பாட்டையும் அங்கீகரித்ததுமன்றி, அவர் திருவாய் மலர்ந்தருளிய தண்ணந்தமிழ்ச் சந்தச்செழுமைபூத்த திருவகுப்பு கந்தரந்தாதி கந்தரலங்காரம் கந்தரனுபூதி முதலியவைகளேயு மொப்புக்கொண்டு அவரையும் அகண்டபரிபூரணுனந்த வாரிவயிற் படியும்படி திருவருள் பாலித்தனன்; ஆசினியுங் காசினியும் புகழும்படி விளங்கு பரமான்மாவாகிய அக் குகபெருமான்.

## அகத்தியமாமுனிவர் முதலினேர்

அகத்திய மாமுனிவர்க்கும், வாமதேவமுனிவர்க்கும், நாரத முனிவர்க்கும், முசுகுந்தச் சக்கரவர்த்திக்கும், தசரத ராமமூர்த்திக்கும், திருமுருகாற்றுப்படை தெரித்த நக்கீர தேவர்க்கும், திருவிசைப்பாவிலே திருவிடைக் கழிப் பதிகம் பாடியருளிய சேந்தனுர்க்கும், திருவேரகத் திலே திருத்தரிசனஞ்செய்த தெய்வச்சோழற்கும், கந்தர் சஷ்டி கவசம் பாடியருளிய தேவராய சுவாமிகட்கும்,

திருப்போரூர்ச் சன்னிதானம் விளக்கிய சிதம்பர சுவாமிகட்கும், திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பாப் பாடியருளிய குமரகுருபர சுவாமிகட்கும், இன்னும் எண்ணரிய பத்தர் சித்தர் பரமஞாதாக்கட்கும் அந்தப் பரமான்மாவுஞ் சகற்குருவுந் தற்கொடை வள்ளலுமாய கந்தபகவான் உரிய திருவருள்புரிந்து பரகதி நீட்டிய பெருங் கருணைப்பாட்டைப் பெரியோ ருணர்கின்றார். பாரமார்த்திகமாகவுணரிற் சிவனடியாரெல்லாம் அவனடியாரெனவுமாவர்.

(அஅ) 88

சீட.—நன்று. அந்தத் தயாநிதியாகிய குமாரபகவான், தன்னை விசுவாசிக்கும் அடியவரை என்றும் இரக்ஷித்தருள்வேனென்று தனது திருவாக்கான் வெளியிட்ட மெய்ம்மொழி ஏதேனு முண்டுகொல்?

குரு.—சந்தேக சிகாமணியே! அன்னணமாய மெய்ம்மொழி பலவுள. அவற்றுட் சிறுவரை கிளக்குதும். சம்பவகாண்டத்தின் ௩அ-வது அத்தியாயத்துப் கச, கரு, கசு-ம் சுலோகங்களில்—

"எமக்கபராத மெவரிழைப்பினும் அதனைச் சகிப்பேம்: எம்முடைய இரண்டு பாதாரவிந்தங்களைச் சரணடைந்த அடியவர்க்கெவரேனுங் கேடு புரியின் அதனைச சகியேம். அக்கேடு, புரிவோர் தேவரெனினும் அசுரரெனினும் எம்மாலென்றுந் தண்டிக்கப்படுபவரே."

என வீரபாகுதேவர் முன்னிலையிலும், சக-வது அத்தியாயத்துப் கக, கஉ, க௩-ம் சுலோகங்களில்—

"உலகினில் எம்மைச் சரணடைந்தோர்க்குப் பயம் யாது? இச்சகத்தில் எம்மடியவர்க்குப் பகைஞர் யாவர்? பிணியுமுளதோ? மானுடப்பதடியாயுள்ள வொருவன் அறிவீனத்தால் எம்மடியவரைப் பகைப்பானாயின் அவன் எம்மையே பகைத்தவனாவன்: எமக்கபராதஞ் செய்தானது செய்கையை யாம் மன்னிப்பாம். அந்தத் துராத்துமாவின் செய்கையை யொருபோதும் மன்னியேம்: இந்திரனால் ஆதரிக்கப்படினும் அவனைக் கண்டனஞ் செய்து விடுவாம். ஞாலத்தில் எம் பக்தர்களை ஆதரிப்போரையே யாம் ஆதரிப்பாம்: இரக்ஷிப்பாம்"

என நாரதர் முன்னிலையிலுங் கந்தபிரான் திருவாய் மலர்ந்தருளினன். ஆகலின், அற்புடையாய்! நீயும் அவனடியவர்க் கெத்துணையும் இடையூ றிழையாமே என்றும் இதமேசெய் தினிதுய்தி.

(அகூ) 89

சீட.—அப்படியே, கோளறுகுமாரக்கடவுளை வழிபடுபவர், வெஞ்சூர் முதலாய சூரபன்மனுடற்பிளவிலெழுந்த மஞ்ஞையையும் வணங்கல் வேண்டுமெனு நியாய முண்டு கொல்?

குரு.—அரிய தவஞ்செய்து பெரிய இடம்பெற்ற சூரபன்மனது தவவீக்கம் வீண்போகாமல் பிரான், வற்சலம் வைத்து அடிமைப்பணிக் கேன்றுகொள்வதாகத் திருவுளங்கொண்டு மகாவிச்சுவரூப தரிசனங்கொடுத்து, இறுதியி லவனது ஆதிக்கருத்து முற்றுறும்படி மயிலுஞ் சேவலுமெனக் கொண்டிருத்தலின் அவைகளை வியனுக மதித்தேத்தல் அவனடியார் கடன்மை கண்டாய். உபதேச

காண்டத்தின் ௫-வது அத்தியாயத்துப் ௬௮-வது சுலோகத் திற் "சகல பாபநாசனை கந்தபிரானது மகிமையை (அகத்தியனுர்) எடுத்துரைத்தனர்" என வருமாற்ருனே மேலென்ற பொருளெவைக்கும மேற்பொருளாய சுப்பிர மணியத்தின் திருவடிக் கமலங்களிற் படிந்த நுண் துகள் களைப் பரமசிவன் புயங்களும் பார்வதி தனபாரங்களுஞ் சின்னுட் பொருந்தி வாழ்ந்தனவே. அத்தகைய திருவடிக் கமலங்களை யிடைவிடாது தாங்கியுள்ள அம்மஞ்ஞை யானது உபதேசகாண்டத்தின் ௫-ம் அத்தியாயத்து* எ, அ-ம் சுலோகங்களில் வருமாறு பிரமாவும் விஷ்ணுவுந் தன்னைத் தொழும்படியான பேறுபெற் றிருத்தலின் ஏனைய வுயிர்கள் அதனைத் தொழாதிருக்குந் தரமுடை யன அல்ல. இதுவேயுமன்றி, சடக்ஷரேசனது ஊர்தி யாகிய அம்மயிலின் நாமமும் ஆயுதமாகிய வேலின் நாம மும் 'வேலும் மயிலும்' என்ற ஒரு மகாமந்திரமாகும். அதனை அடிக்கடி யுச்சரிப்பார்க்கு உலகில் அரியகாரிய மொன்றுமின்றென் றுணர்வதோடு முன்சொற்ற அருண கிரிநாதசுவாமிகள், சக்தி பிரசன்ன சித்தியுடைய சம்பந் தாண்டா னென்பான் விளைத்த தெய்வவாதத்தில் அவனைவெல்லும் நிமித்தம் அருணசலேசர் சன்னிதிக் கண் ஒரு கற்கம்பத்தடியில் முருகப்பெருமானை வருமாறு பிரார்த்தித்தபோது அவன் வராமைகண்டு மயிலைத் தோத்திரித்த நிமிடம் அது, தன்னிறைவனைச் சுமந்து வந்து அம்பர்த் தரிசனங்கொடுத்து நடித்த சமயசஞ்சீவி யென்பதையும் அறி. மேலே, ஆதிக் கருத்தென்றது குறித்து ஈண்டு விளக்குவதென்னை யெனின்,—

---

*இச் சுலோகங்களில் வருவிவரத்தை ௭௬-ம் கடாவிடை யில் "உபதேச காண்டத்தின் ௫-வது அத்தியாயத்து எ, அ-ம் சுலோகங்களில்" என்னுமிடத்திற் காண்க.

முன்னொரு கற்பத்திற் சாகத்தீவை யாண்ட பிரபாகர ராசனுடைய மனைவியிடம் ஒரு கருப்பத்தி லிரண்டு பிள்ளைகளும் மற்றிரண்டு கருப்பங்களி லிரண்டு பிள்ளைகளுமாகப் பிறந்த சூரன், பதுமன், சிங்கன், தாரகன் என்னு நால்வர்களுட் சூரனும் பதுமனும் அகத்திய மாமுனிவர் போதகப்படி சன்மய சண்முகக் கடவுளின் மயூரவாகனமாகவுங் குக்குடத்துவசமாகவுந் தாங்கள் சேரவேண்டுமெனவும், சிங்கனுந் தாரகனுந் திரணபிந்து முனிவர் விருடபயோகி முனிவர் போதகங்களின்படி காளியின் சிங்கவாகனமாகவும் மகாசாத்தாவின் யானை வாகனமாகவுஞ் சேரவேண்டுமெனவுங் கருதிப் பூமி புரத் தலைப் புத்திரர்பால் நல்கிவிட்டுப் பஞ்சாக்கினி மத்தியினின்று நாற்பதினாயிரம்வருடந் தவம் பயின்றனர். அவ்வமையம் பரமசிவ தரிசனத்திற்காகக் கைலைக்கு வந்திருந்த சண்முகக்கடவுள் அரி அயன் மகாசாத்தா காளி முதலியோர் வாகனங்களுட் கருடன் அன்னம் முதலிய வாகனங்கள், "மயில் சேவல் சிங்கம் யானை யென்பவைகளைக் கண்ணுறீ இச் சூரனாதியோர் தவஞ்செய்யுங் கருத்தைத் தெரிவித்தவுடன் அம்மயிலுஞ் சேவலும் யானையுஞ் சிங்கமும் அவர்களின் தவநிலையைக் கெடுத்து, "நீவிர் எங்கள் பதவிகளை யிச்சித்தமையால் எங்கண் முகங்களுடைய பூதங்களாகக் கடவீர்" என்று சபித்தன. அவ்வணம் பூதங்களாகிய நால்வரும் கைலையிற் றங்கியிருந்த மயில்முதலிய நான்கனையுங்கண்டு வந்தித்து, "அடியேங்கள் கருத்து முற்றுப்பெறுங்கொலோ?" என்றிரந்து கேட்டலும் அவைகள் மனமிரங்கி, "நீயிர் இக்கைலைக் கணங்களுடன் சின்னாளிருப்பீரேற் சத்தியமாக முற்றுப் பெறும்" என இயம்பின. அவ்வாறு நால்வரும் அண்டாவரண பூதங்களோ டிருக்குங்கால் யுத்தத்தில் அசுரருக் கிளைத்தோடிய உம்பருக்குச் சகாயமாக அந்நால்வரும்

பூமிபோந்து பூமியிலுள்ள பூதரொடுசேர்ந்து அசுரரை மாய்த்துக் கைலேபுக் கிருந்தனர். அஞ்ஞான்று அசுரர் தலேவனை அசுரேந்திரனென்பான், பூதகணத் தலேவ னை அண்டாவரணனிடம் பூதர்நால்வருஞ்செய்த செயி ரைத் தெரிவித்துக்கொண்டனன். அதுகணித்த அத் தலேவன் அந்நால்வரையும் விளித்து, "நமதாஞ்ஞை யின்றி அசுரரைக் கொன்றுளீராகலின், எமது வாக்கு வலியாற் குரூர அசுரத்தன்மையடைந்து சுரர்க் கிடர் விளேத்துச் சரிக்கக்கடவீர்" என்று சபித்தனன். பின் பொருசமயத்திற் சரவண பெருமானுடைய மயில் கோழி களோடு நால்வருங்கூடிப் பெருமை மிக்குடை யுங்களேக் கருடனும் அன்னம் முதலிய வாகனங்களும் அவமதித் திருக்கின்றன வென்றுரைத்து ஒன்றுக்கொன்று பகை மூட்டி அவைகளோடு வன்போரிழைத்து வைகுண்டம் பிரமலோகம் இந்திரலோகமென்பவைகளேப் பதனழிய நாசஞ்செய்பு கடவுளர்களேக் காதிக் கருடனேயும் அன்னத்தையும் ஏனே வாகனங்களேயுங் கொன்று மீண்டு, கைலேயைக்குறுகி யிருக்குங்கால் நடந்த விருத் தாந்தமெல்லாந் தேவர்களாற் றெரிந்துகொண்ட அரியும் அயனும் குமாரசுவாமியைத் தரிசித்து விவரமாக விண்ணப்பித்தார்கள். அக்கடவுள், அந்நால்வரையும் விளித்து, "பூதர்காள்! ஆற்றிய குற்றத்திற்காக அசுரர் மரபிற் சனித்து இந்தத் தேவர்கட்குத் துன்பு புரிமின்: அக்காரணம்பற்றி எம்மால் நீங்க ளொழிவடைவீர்கள்" எனச் சபித்தருளினன். அம்மாற்றஞ் செவிமடுத்த நால் வரும் நனிவணங்கிநின்ற வேலே "எம்பெருமான்! அடியேங்க ளவ்விதஞ் சனித்தொழியினும் மயிலுருக் கொண்டு திருவடிதாங்கக் கோழியுருக்கொண்டு கொடியா யிருக்கக் கடாக்ஷித்தருடி" என்று சூரனும் பதுமனுங் கூறி அத்திறவரம் வாங்கிக்கொண்டனர். பின்னரழிந்து

போய கருடன் அன்னம் முதலியவைகளேயுந் தேவ ருலகங்களேயும் முருகக்கடவுளின் வாக்குவன்மையானது முன்னம் போனிலேபெற்று விளங்கச்செய்தது. நவின்ற நால்வரும் பூதராகுமுன்னம் புரிந்த தவத்தைக்கெடுத்த குற்றத்தையும், பூதர்களின் வசனம்பிடித்து அவர்க ளொடுகூடித் தேவர் வாகனுதிகளேக் கொல்லுமாறு கேடிழைத்த குற்றத்தையும் அஞ்ஞான்று குகப்பிரமத் திற்கு ஊர்தியுங் கொடியுமாயிருந்த மயிலுங் கோழியும் மனத்திடை ஆலோசித்து இனி யிது செய்யத்தக்க தெனக் காஞ்சிப்பதியிற் குகபிரானேத் தியானித்துத் தவங்கிடந்து அப்பிரானுணேயின்படி அவனது சாயுச்சிய பதவி யடைந்தன. குகேசனுற் கொல்லப்பட்ட சிங்கன் தாரகனெனும் பெயரிய இருவருங் கற்பாந்தத்திற் காளிக்கும் மகாசாத்தாவுக்கும் வாகனங்களாதற்குக் கைலாயத்திற் பூதவடிவாயிருக்கின்றனர். மயிலுங்கோழி யுஞ் சாயுச்சியமடைந்த பின்னர்ச் சுவாமி, அவ்விரண்டு மில்லாதிருந்தனனே? என்னின்,—சூரசங்காரம் முடித் துச் சூரனேயும் பதுமனேயும் வாகனமுங் கொடியுமாகக் கொள்ளும் முன்னரேயே வீரமாகேந்திரத்திற் சிறைப்பட் டிருந்த சயந்தன் முதலிய தேவர்கட்குக் கனவிற் றரிசன மான ஞான்று "மிகப்பெரிதான மயில்வாகனத்தின் மிசை வீற்றிருந்தவனுமாய்" என **வீரமாகேந்திரகாண்டத் தின்** ௩-ம் அத்தியாயத்து ரு, சு-ம் சுலோகங்களில் வெளியாமாறு இரகசியமான மயில்வாகனத்தை யுடை யவனுயிருந்தவாறுபோல அஞ்ஞான்றும் அத்தகைய மயில்வாகனத்தையுங் கோழிக்கொடியையு முடையவனு யிருந்தவனுவன் என்றேனும் அப்பதவிபெற்ற வேறு மயிலேயுங் கோழியையுங் கொண்டிருந்தவனுவனென்றே னுங் கோடலில் ஆசங்கையொன்றும் இன்றென்க. மேல் நுவன்றபடி வரம் வாங்கிக்கொண்ட சூரனும் பதுமனும்

பிரிவின்றி மாயையின் கருப்பத்தில் ஓருருவாகத் தோன்றிச் சூரபதுமனெனும் பெயர்கொண்டிருந்தனர்.

இங்ஙனம், இவ்வரலாற்றின்படி சூரபதுமன் பிறப்பதற்கு முன்னரேயே சுப்பிரமணியபெருமா னிருந்தனனென்பதூஉம், **சம்பவகாண்டத்து** உசு-வது அத்தியாயமியம்புமாறு சூரபதுமன் பிறந்து அரசுசெய்து தேவர்களை வருத்தியபின் அவன் சம்புமைந்தனை வந்தனனென்பதூஉம் இயைபின்றெனை ஓராசங்கை நிகழும். இங்ஙனுணர்வ தென்னெனின்:—குமாரபகவான் என்று முள்ளவனென்றும், சூரபதுமன் காலத்துள்ள விண்டு முதலிய தேவர்கள் தோன்றுமுன்னரேயே பாசடைமறை தீவிளி போல அவன் தன்னிலேக்கட் குய்யமாயிருந்து அனுபவானந்தம் போலப் பின்னர்ப் பகிர்முகப்பட்டனனெனவும், பகிர்முகப்படற்கு முன்னுள்ள பூருவகாலமே "முன்னொரு கற்பத்தில்" என **உபதேசகாண்டத்தின்** ஙட ம் அத்தியாயத்து ௪-ம் சுலோகத்தில் வெளிப்படுகிறதெனவு முணரவேண்டு மென்க.

(௯௦) 90

சீட.—குகேசனை உபாசிக்குநர் எய்துங்கதி யாது?

தரு.—யஜுர்வேதத்துப் **பிருஹதாரண்யகோபநிஷத்தின்** சு-ம் அத்தியாயத்து ௪-வது பிராஹ்மணத்தில் "யாரெப்படிச் செய்கின்றாரோ யாரெப்படி யாசரிக்கின்றாரோ அவரப்படி யாகின்றார்" எனும் பொருள் பெறப்படுதலின், அவரவர் நின்ற நிலைப்படி கதி சித்திக்குமென்றல் சரதம். ஆகலிற், குகேசனை உருவத்தியானஞ் செய்குநரெவ்வித வுருவத்தை, 'ஸோஹம் பாவனை'யா லுபாசிப்பரோ அவ்வித வுருவத்தையடைவர்: எவ்விதவுருவில்

இலயமாவதற்கு அந்தப் பாவனையாற் பழகிவருவரோ அவ்விதவுருவில் இறுதியில் இலயமடைவர்: உருவச் சித்தியைச் சாரூபகதியென்றும் உருவத்தில் இலயமடை சித்தியைச் சாரூபத்திற்குஞ் சாயுச்சியத்திற்கும் நடுநிலை யென்று மெண்ணலியைபு என்ப. உருவத்தை அன்னிய மாகப் பூசிப்பதனுந் தியானிப்பதனு முண்டாகா நின்ற சிவபுண்ணியத்தால் அப்புண்ணியர் சாலோக சாமீப கதிகளேயடைவர். இத்தீர்வுக்குச் சான்ருக அதர்வணவேதத்து **நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் ரு - ம்** உபதேசத்தில் "இறுதிநாளில் எவன் எந்த ரூபத்தை நினைத்துக்கொண்டு தேகம் விடுகின்ருனே அவனந்த ரூபத்தை யடைகின்ருனேயன்றி வேறின்றென்றல் சுருதி யின் ஆஞ்ஞை: அன்னியதாசாரத்தின லந்தந்த லோக மடைகின்ருன்" எனவரும் என்ப. உருவச்சித்தியாய சாரூப கதியுஞ் சாலோக சாமீப கதிகளைப்போல அபர முத்தியாகலின், மீண்டும் பூவுலகிற்பிறக்கும் நீர்த்தென் னின்,—நிட்காமமுண்டாகி ஞானத்தின் முயன்று முடிவு பெருதார்க்குண்டாய யாதொரு சாரூபம், அன்னணம் பிறக்கு நீர்த்தாகாமல் அதினின்றே சில காலவளவை யில் ஞானமடைந்து பரமுத்தியாய சாயுச்சியமெய்து நீர்த்தாகும்: அதுபோலப் புவியில் ஞானசமாதி கூடிப் பெத்தத்திற்கும் பரமுத்திக்கும் நடு நீர்கொண்ட சீவன் முத்தரான ஞானிகளுள், சுந்தரமூர்த்தி சுவாமிகளொப் பத் தூலவுடம்பை நீக்காமலும் மறைக்காமலும் ஊர்த் துவவுலகுக்கெய்தினேரும் மீண்டிப்புவியிற் பிறவா திங்குச் சீவன்முத்தராகச் சஞ்சரித்ததுபோல அங்குஞ் சீவன்முத்தராகவே சஞ்சரித்துச் சிலகாலவளவையிற் பரமுத்தியடைவர்: அது புரைய உருவத்தில் இலயமானு ரும் இப்புவியிற் பிறவாது சீவன் முத்தராகவேயிருந்து கற்பாந்தத்திற் பரமுத்தியடைவர்: இத்தீர்வுக்குச் சான்

ருகச் சாமவேதத்து மைத்ர‹யண்யுபநிஷத்தின் ௬ - வது பிரபாடகத்தில் "மூர்த்திகளைப் பிரமமாகவேஉபாசிக்கில் அந்தந்தத் தேவதைக்கணைக்கியமாய் மேன்மேல் உலோ கங்களிற் சஞ்சரித்துப் பிரபஞ்ச முழுதும் நசிக்கும் ஞான்று (பரம) ஆன்மாவி லொன்ருய்ப் போவன்" எனவும், மிருகேந்த்ராகமத்து ஞானபாத பஞ்சகிருத்தியப் பிரகரணத்து உ-ம் சுலோகத்தில் "சங்காரத்தின்மேற் சிவன் எவ்வணுக்களை அனுக்கிரகிப்பனே அவ்வணுக்க ளாகிய சீவர்களுடனே சிவத்துவ வியத்தியுள்ளவர்க ளாகிருர்கள்; சங்காரகாலத்திலுஞ் சிருட்டிகாலத்திலும் அனுக்கிரகிக்கப்படுகிறவர்கள் மலபரி பாகத்திற்குத் தக்கவாறு அதிகாரமற்ற முத்தியையாவது, அதிகார பதித்தன்மையையாவது அடைகிருர்கள்" எனவும் வருவன காண்க: இங்நியாய மறியாதார், உருவத்தோ டுயருலகெய்தினுர்க்கும், உருவில் இலயமானுர்க்கும் பர முத்தியேது? அவர் பிறக்கவே பிறப்பரென்று பிதற்றுவர்: அஃதறியாமையின் வீக்கமேயென்று உண்மை கடைப்பிடிக்க என்றுங் கூறுப.*

ஞானயோகத்தா லுள்ளடங்கிப் பூவுழைக் கனன சமாதி செய்யப்பட்டுளார்களும், சிவலிங்காகாரமாச் சமைந்துளார்களும் உயர்ந்த சீவன்முத்தியி லுள்ளவர் களே: பரமுத்தியு மங்ஙனமாம்: அத்தகைய சன்னிதி களில் ஈசுரப்பிரபாவமுண்டு: அதனுனே அச்சன்னிதி களில் வழிபடுவாரெண்ணு மெண்ணம் பரமேசுர சன்னிதி யின் முற்றுப்பெறுமாறு முற்றுப்பெறும்: பரமுத்தி யடைந்தோ ரெல்லைக்கண்ணும் பெத்தர் சமாதிக்

---

*குமாரபெருமான் புரி அனுக்கிரகத்திலுண்டாம் கதிகளின் விஸ்தாரமெல்லாம், இந்நூலாசிரியரது சேக்கீர்வேளிறுமாப்பி லினிதுணரக் கிடக்கின்றன.

கண்ணும் ஈசுரப் பிரபாவமின்று: அதனுல் அஞ்ஞாங்கள் களில் யாதொரு சித்தியு முண்டாதலில்லை: சித்திக்கு மேற்பட்டதே முத்தியும், சித்திக்குக் கீழ்பட்டதே பெத்தமுமென்ப. நிற்க.

குகேசன் நல்கு தரிசனத்தில் எவர், எந்தச்சாலோகம் எந்தச் சாமீபம் எந்தச்சாரூபம் விரும்புகின்றனரோ அதனை அவர்க்கு அவனருள் கொடாநிற்கும். இவைகளின் மேலாய சாயுச்சியம் வேண்டுவார்க்கும் அந்த மூர்த்தியே பரமாசாரியனுக அங்ஙன் அனுக்கிரகஞ் செய்தருளுவன். ஆண்டு, உயிர்க்குயிராயிருக்கிற குகனுகிய அந்தரான்ம சொரூபத்தை யடைவதே பரமான்மாவை யடைவதாகும். அதுவே குகேசனுடைய அமூர்த்த பரிபூரணத்தையடையும் பரமுத்தி: அதுவே சச்சிதானந்த வாழ்வு: அங்ஙனே சருக்கரையும் நாவும்போல அந்தப் பரமான்மாவின்மாட்டுச் சீவான்மாவுக்குப் பிரிவற்ற பேரின்ப அனுபவ முண்டாகாநிற்கும்: குருடன் கண்ணிற் கதிரொளி கூடியிருந்துங் கண்ணிலுள்ள மாசாற் பார்வையற்று அனுபவமில்லா திருப்பதுபோல மூல மலான்மாவில் நின்மல பரமான்மா, அனுதிசையோகமாயிருந்தும் அம் மலபந்தத்தால் ஞான திருட்டியும் ஞானுனுபவமும் இல்லாதுள்ள ஆன்மாவின் பெத்த நிலைதானே அந்தக் குருடன் கண்ணிலுள்ள மாசு தீர்ந்துழிக் காணுமனுபவம் உண்டாதல்போல மலபந்தம் நீங்குழிப் பரமானந்தானுபவமுண்டாகி முத்திநிலையாக நிகழும் என நீயறியவேண்டும். இதனுனே, என்றும் அத்துவித சம்பந்தமாயிருக்கிற சீவான்மாவுக்கு மலமே பெந்தமும், மலநீக்கமே முத்தியுமென்பது சத்தியம். பரமான்மாவுக்குப் பெந்தமுமின்று: முத்தியுமின்று. இன்னவா றறிமுறைமையின் முத்தியின்பப் பொருளாகப் பரமான்மாவும், அதனை நுகர்பவனுகப் பரமுத்தான்

மாவுமில்லாமல் அழிவற்ற மோக்கமொன்று கிளக்கற் கியையா நியாயத்தையும் அயிர்ப்பற அறிதல் தேற்றம் இதற்குச் சான்ருகச் சைவபுராண சனற்குமார சங்கிதை யிற் சிவபுண்ணியமுரைத்த அத்தியாயத்தில் "என் ஊேயே எல்லாம்வல்ல சருவசத்திமா னென்றுணர்ந்த ஞானியும் நானுமே எக்காலும் நாசமில்லாதவர்களா யிருக்கின்ருேம்'' எனச் சிவபிரானருளினனென வருவ துங் காண்க.

சீவான்மாவும் பரமான்மாவும் என்றும் பிரிவற்ற அத்துவித சம்பந்தமாயுளவென்றல் ஒன்றிலொன் றின்மை யென்னும் "அன்னியோன்னியாபாவ'' விரோத மாமெனின்,—தருக்கநூலிற் சொல்லப்படுகிற அந்த அன்னியோன்னியா பாவந்திற்கு இறைவனே விஊே தொடாது: விஊேயை இறைவன் தொடான்: இறைவ னிடத்து எவ்விகாரமுமிராது: எவ்விகாரத்தும் இறைவ னிரான் என்றல் பொருளேயல்லால் உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் ஒன்றிலொன்றிராதென்றல் பொருளன்று. ஏனெனின்,— விழிப்புலமாகின்ற எப்பொருளும் ஒன்றுக் கொன்று ஆதாரமாகவும் அவ்வாதாரத்தில் ஒன்றிலொன் றுள்ளதாகவுமே யிருக்கின்றனவென்றல் கண்கூடாகலி னென்க அசித்தாய காரிய காரணமனேத்திற்கும் அகண்டசித்தாகிய திருவருளே ஆதாரம். அவ்வாதாரத் திலேயே அறிவித்தாலறியுஞ் சித்தாகிய பசுவும், அறி வித்தாலுமறியா அசித்தியாகிய பாசமும் இருக்கின்றன. பாசபதார்த்தமாகிய தேகத்துழைப் பசுவாகிய ஆன்மாவு மிருக்கிறது. அதனுல் தேகத்திற்கு ஆதாரமென்றும் பெயர். ஆன்மாவின் ஞானத்திற்குப் பரமான்மாவின் ஞானமே ஆதாரம். அற்ருகலின், சீவான்மாவுக்குப் பரமான்மாவே ஆதாரமென்றும், இவ்விரண்டுஞ் சித்தா கலின் அனுதிசம்பந்தமுள்ளனவென்றும் ஓரவேண்டும்.

பிரமாணம்—சுக்கில யஜுர்வேதத்துக் கடவல்லியுபநிஷத்தின் உ - ம் வல்லி உ০ - ம் சுலோகத்திற் "கிருபைக் கிருப்பிடமாகிய பரமான்ம சுவரூபம் இந்த ஆன்மாவின் இருதய குகையிலிருக்கிறது" எனவும், கிருஷ்ண யஜுர் வேதத்து ஈசாவாஸ்யோபநிஷத்தின் ௬ - வது மந்திரத்தில் "தத்தென்னும்(பரமான்மாவாகிய)அது, இப்பிரபஞ்சமாகிய சருவ பிராணிகளின் [உள்ளே] மத்தியிலிருக்கிறது" எனவும், மேலே நாரதபரிவ்ராஜகோப நிஷத்தின் ௬ - ம் உபதேசத்தில் "ஈசுவரன் சீவனென்னு மிருவருங் கற்பனையற்ற அநாதியாயுள்ளார் : இவருள் ஒருவன் ஞானி, மற்றொருவன் அஞ்ஞானி" "அணுவினு மணுவாயும் பெரிதினும் பெரிதாயு மிராநின்ற ஆன்மாவானவன் இந்தச் செந்துவினது இருதய குகையிலிருக்கிறான்" எனவும் வருவன காண்க. இன்னணம் எண்ணில் சுருதி யுள. இரண்டான்மா ஒன்று யிருந்ததற்குச் சூரன் பதுமன் என்னுமிருவர் ஒருடலிற் சூரபதுமனென இருந்ததுஞ் சான்றாகும். இவ்வாறுணராது இரண்டு சித்தொன்றாக இராவென யாவரொருவ ருரைக்குமுறை, எவ்வாற்றானும் பிரமாணமாகாப் பிதற்றுரை யெனவாம். அற்றன்றென ஏகத்தை வலியுறுத்தற்கு இஞ்ஞான்று இரண்டான்மாவை ஓட்டமுயன்று அங்ஙனம் ஒட்டவில்லையெனக் காட்டுவா ரொருவருமிலர். இங்ஙனம் பாசத்தோடு கூடிய பசுவின்பாற் பாசமற்ற பதி கூடியிருப்பனென்றல், பதி நீர்மையைக் குற்றப்படுத்தாதோ? எனின்,—உவர் நீருறை மச்சமானது உவரேறுதிருத்தல்போன்றும் மாசுக்கண்ணிற் கூடிடு மார்த்தாண்டன் ஒளியானது மாசேறு திருத்தல் போன்று மிருக்குமியற்கையான் பதியாகலின் அவனுக்குக் குற்றம் விளைவதெவ்வழியானு மின்று. இதுதானே முன்மொழிந்த அன்னியோன்னியா பாவமும். நிற்க.

அகனும் புறனும் நிறைந்துள்ள குகேசனுடைய அமூர்த்த பரிபூரணத்தையடைய அவாவுவோர், அநாதியாயும், சருவாதாரமாயும், பரஞ்சோதியாயும், சருவாக்ஷரசுவரூபியாயும், காலசுவரூபியாயும், சகலாகம சுவரூபியாயும், சுருதியிற் சொல்லப்படுகிற உபநிஷத் சுவரூபியாயும், சருவதேவ சுவரூபியாயும், குகபரமான்மாவுக்குத் திருமேனியாயுமுள்ள பிரமப்பிரணவமாகிய ஓங்காரத்தையே தேடல்வேண்டும். நான்கு வேதமும் நான்கு *மகாவாக்கிய வயினடங்கும். அவற்றுட் சிரவணமாகிய 'தத் த்வமஸி' எனும் வாக்கியமும், மனனமாகிய 'ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்ம' எனும் வாக்கியமும், நிதித்தியாசனமாகிய 'அயமாத்மா ப்ரஹ்ம' எனும் வாக்கியமும், சமாதியாகிய 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' எனும் வாக்கியத்திலடங்கும். அந்த 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' "ஸோஹம்" எனும் வாக்கியமாகச் சுருங்கும். அது, முற்சொற்ற ஓமெனும் பிரணவத்தி லொடுங்கும். அதனிற் சீவான்மாவும் பரமான்மாவு மிருக்கின்றன. விவரம்:— ஸ: அஹம் என்னும் வட சொல்லிரண்டுஞ் சந்தியாம்போது ஸோஹம் எனவாகும். ஸோஹத்திலுள்ள ஸ:=அவன்=அந்தப்பரமான்மா எனப் பொருளாம். பரமான்மாவாகிய 'ஸ:' சப்தத்திற் சீவான்மாவாகிய 'அஹம்' என்னுஞ் சப்தத்தின் முதலெழுத்துச் சேர்ந்து ஸோ என ஆயதினிற்கிற ஸ: என்னும் ஞேயமும், அஹம் என்பதன்கண் எஞ்சியுள்ள ஹம் என்பதில் ஹ என்னும் சீவவிகார ஞானமும் ஒழித்துநின்ற ஓ, ம் என்னும் இரண்டனையுங்கூட்டி 'ஓம்' எனத் தகராலயத்தில் நிட்டை கூடல்வேண்டும். அங்ஙனம் அஃ

---

* இம் மகாவாக்கியங்களை வைதிக சைவசித்தாந்த பக்ஷமாக அருத்தஞ் செய்யப்பட்டிருக்கு முண்மை, திருப்பாவில் வண்மைப்பதிகத் தினிது விளங்கும்.

தடங்குமிடமே சிவகதி. இந்தப்பிரணவம் முன்னர்த் துவிதமாயிருந்து பின்னர் அத்துவிதமா யெவ்வாறொன்று படுவதாமோ, அவ்வாறதனோடு தானுஞ்சேர்ந்து தனக் காதார பரமான்மாவின்கண் முன்னிலைச் சுட்டில்லாது நின்றுவிடுவதே நிகழ்த்திய பரநிட்டையென அறிதி. இதுவே சின்முத்திரையும், பரமசிவனுக்குப் பரமசிவ குமாரன் ஓதிய பிரணவார்த்த வுண்மையைப் பிரகாசப் படுத்துமாறு "அறிவையறிவது பொருளெனவருளிய பெருமாளே" எனவரு அருணகிரிநாத சுவாமிகளின் அமுதவுரைக் கருத்துமென வுணர்க. இன்னவாறெம் மால் விவரித்துணர்த்த நீ காண்கினும் இதனை, நுனித்த மதியினர், குருவருளால் நனியுணர்ந்து அந்நிட்டை கூடுவரென்றும் அறி. மேல்விளக்கிய அவன் நானெனும் பொருள்பயக்கின்ற ஸோஹம் எனுஞ்சொல்லை யொரு வன் சொல்லிக்கொண் டிருத்தல், நினைத்துக்கொண்டிருத் தல் ஞானநிலை ஆகாது. எனக்காதார தெய்வமாகிய உன்னைவிட்டு எவ்வாற்றானும் நானில்லை : எனக்குறும் அஹசப்தமு முனக்கே சொந்தமெனத் தனது சீவச் செயலடங்கத் திருவருள் வசத்திருந்து பாவித்தலே அப்பாவனை ஆம். இதன் கண்ணேயே கருடோகம்பா வனை உவமானமும் அடங்குதல் ஏற்புடைத்து.

அன்ப! இங்ஙனம் நீ வினய வினவுக்கு யாம் போதிய விடையிறுத்தாம்.

(கூக) 91

சீட.—விரதங்களுட் குமார மூர்த்திக் குரியவை யாவை?

## அரி, பிரமன், திக்குப்பாலகர்

தரு.—கிருத்திகைப்பெண்கள் முன்னிலையாகப் பரம சிவன் ஆன்ம கோடிகட்கு அறிவித்தவாறு கிருத்திகை

நக்ஷத்திரமும், ஐப்பசி மாதந்துப் பூர்வபக்கத்து ஆருந் திதியாய சஷ்டியிற் சூரசங்காரஞ்செய்த காரணத்தானே சஷ்டிதிதியும், பகீரதமகாராசனுக்குப் பிருகுமுனிவர் பகர்ந்தபடி அம் மகாராசன் அனுட்டித்துப் பலன் பெற்றமைக் கேதுவான சுக்கிரவாரமும் விசாகப் பெருமாட்குரிய விரத தினங்களாகும். இந்தச் சுக்கிர வாரம் பராசத்திக்கும் விநாயகருக்கும் உரித்தாயிருத்தல் பற்றி அவ்வாரவிரதம், யாதானுமொரு காரியத்தைச் சித்திசெய்தற்குப் பொதுவாகவும் வலியுடைத்து. மொழிந்த மூன்று விரதத்தையும் உபதேசகாண்டத்து ௩எ - ம் அத்தியாயம் பகருமாறு அரி பிரமருந் திக்குப் பாலகரும் அனுட்டித்துப் பகைஞரை வென்றிருக் கின்றனர்.

(௯உ) 92

௬௨.— கிருத்திகை விரதம் அனுட்டிக்கும் முறை யெப்படி?

## நாரதமுனிவர், மனு, திரிசங்கு, அந்திமான், சந்திமான்

௫௫.— தென்மொழிப் புராணத்துத் தக்ஷகாண்டத்துக் கந்தவிரதப் படலத்தில் வெளியாமாறு கார்த்திகை மதியில்வரு கார்த்திகை நக்ஷத்திரத்தின் முதனாளாம் பரணிநாளுதயத்தில் யாவனொருவன், நித்திய கடன் முடித்துப் பரிசுத்தனா யொருபொழுதுண்டு மறுநாட் கார்த்திகை தினோதயத்திற் புண்ணியநதி ஆடி வெள் ளாடை உடீஇ முருக்வே ளுருவை அலங்கரித்து அருச்சித்து ஜல கந்த புஷ்ப தூப தீப நைவேத் தியங்களுடன் பூசித்து முருகவேள் சாரித்திரமான்மியங் களை வாற்சல்லியம் பிறக்கக்கேட்டு மூன்றுகைத் தீர்த்

தமே யுட்கொண்டு பகற்போது போக்கி இரவிலே தருப்பையைப் பரப்பி அதன்மீதிருந்து தெரிவையரைத் திலமளவும் நினையாது அறுமுகச்சிவன் பதாம்புயங் களையே நினைத்துத் துயில்கொளாமலிருந்து விடிந்த உரோகணிநாள் உஷற்காலத்தில் தீர்த்தமாடிக் கரும முடித்துக் கருத்தனை முன்போற் பூசித்துக் கிட்டிய சிவவிரதிகளுடனிருந்து பாரணைபண்ணி அப்பகல் உறங் காது வைகி மாலைக்கடன்முடித்து அன்றிரா உறங்க லாகும். இவ்வித விதியையே விக்கினேச்சுரர் பணித்த வாறு நான்முகன் குமாரராகிய நாரதமுனிவர், பன் னிரண்டாண்டு ஆற்றிக் கந்தபகவானைத் தரிசித்துத் தேவ இருடிகளின் முதன்மைப்பேறு பெற்றனர். இவ் விரதம் அனுட்டித்த வேதியரொருவர், மகாலட்சுமி விலாசத்தொடுகூடிய மனுச்சக்கரவர்த்தியாகி மகிதலம் புரந்தனர். மற்றொருவேதியர், திரிசங்கு எனும் பெய ரொடு இராசாதிராசனாகினர். *வேறிரண்டு வேதியர், அந்திமான் சந்திமானென்னும் பெயர்பெற்ற அரசர் களாகி உலகாண்டு இறுதியிற் கந்தபிரானருளான் மோக்கவீடு புக்கனர். (பாரணை = விரதபோஜனம்.)

இவ்விரதம்பற்றிக் கார்த்திகைமின்னார் முன்னிலை யிற் சிவபிரானருளிய திருவசன மென்னையெனின்,— **சம்பவகாண்டத்தின்** உஅ - வது அத்தியாயத்து உ௨ - க்கு மேற்பட்ட சுலோகங்களில் "நீங்கள் எம்முடைய குமாரனுக்குத் தன்னியபானஞ் செய்வித்து வளர்த் தமையால் இவன் கார்த்திகேய னெனப்படுவான் :

---

* இவ்விருவரும, ஒருமன்னனும் ஒருவேடனுமெனத் தேன் **மொழிப்புராணம்** கந்தவிரதப் படலத்துப் கஅ - ம் செய்யுளிற் பகர்கின்றது.

இற்றை நாள்முதல் நுங்கள் நாளாகிய கிருத்திகை நக்ஷத்திரத்தில் எந்தமானுடர் இப்பால சுப்பிரமணி யத்திற்குப் பிரீதியாக நீண்டகாலம் விரதமனுட்டிப் பாரோ அன்னோர்க்கு, இவன்றானே சகல விருப்பை யுந் தடையின்றிப் பூர்த்திசெய்வா னென்பதிற் சந்தேக மின்று : அங்ஙனம் புத்திரப்பேறு விரும்புவோர் அனேக புத்திரரையும், மனைவியை அவாவுவோர் நல்ல மனைவி யையும், தனம் விழைவோர் தனத்தையும், பசுவேட் போர் வேண்டிய பசுக்களையும், வித்தை விரும்புவோர் வித்தைகளையும், யாதும் விரும்பாதோர் அவிநாச மோக்கத்தையும் விசேடமா யடைவர்'' என வரும் உண்மை யுணர்க.

(கூங) 93

கூடு.— சுக்கிரவார விரதம் அனுட்டிக்கும் முறை யெப்படி?

## பகீரதன்

தரு.— ஐப்பசி மாதத்து முதற் சுக்கிரவாரமெனும் விரத தினத்திற்கு முதனாளாங் குருவாரத்தில் ஏக கால போஜனம் பண்ணிச் சுக்கிரவாரம் முழுதும் ஒன்றும் உண்ணாமலும் உறங்காமலுஞ் செய்வன செய்து சனி வாரத்திற் பாரணைபண்ணி இரவில் துயிலவேண்டும். இவ்விரதத்தைக் குடும்பத்தோடு வனவாசஞ்செய் திருந்த பகீரத மகராசன் மூவாண்டிழைத்துத் தன்னுடு கவர்ந்தாண்ட கோரனென்னும் இராக்கத ராசனையும் பிறரையும் வென்றிகொண்டு இராச்சியபாரம் நடாத்தி இறுதியில் நற்கதி புக்கனன். ஆண்டுத் தேவாதி தேவனாகிய குகபகவானுடைய கைவேலானது எழீஇ வந்தே அக்கோரனைக் கோறல் புரிந்தது என்க.

கூடு.— கந்தசஷ்டிவிரதம் அனுட்டிக்கும் முறையையும், அனுட்டித்தோர் வரலாற்றையும் விளக்கல் வேண்டும்.

## முசுகுந்தன்

தரு.—பூருவத்திற் கைலைப்பதிக் காவின் கண்ணதாய ஒரு கூவிளந் தருவடியில் எழுந்தருளியிருந்த அரனையும் அம்மையையும் முகத்திற் கறுப்புடைய ஒரு [குரங்கு=] முசுவானது காணூஉ மகிழ்ந்து அத்தருவிலேறிப் பாசடைகளைப் பறித்துப் பறித்து அன்னர் திருமுடியிலுந் திருவடியிலுமாகப் பெய்து ஆனந்தக் கூத்தாடுவதற்குப் பராபரன் களிகொண் டருள்கூர்ந்து அதனை யருகுவிளித்து அளித்த வரப்பிரசாதப்படி அது, பானுகுலத்து அரிச்சந்திரன் வமிசத்திலே முசு முகத்துடன் பிறந்து முசுகுந்தனெனும் பெயர்பூண்டுளா ரொருவராயிற்று. அவர் திருப்பரங்கிரியி னடந்த தெய்வகுஞ்சரியார் திருக்கலியாண மகோற்சவத்தை நனி தரிசித்துக் குகபிரான் திருவடிகளிற் சிறந்த பத்திமைகொண்டு சார்வபூமனு யுலகாண்டு வசிட்டரைத் தரிசித்துக் கேட்டுக்கொண்ட வடிவேற்பெருமாற்குரிய கந்தசஷ்டி விரதத்தையும், ஏனை விரதங்களையுந் தமது நகரிற் குறைவற நடாத்தினர். அங்ஙனங் குகபிரான் பிரசன்னமாகி அனுக்கிரகித்த வரத்தின்படி வீரபாகுதேவர் முதலிய இலக்ஷத்தொன்பது வீரர்களையும் அம்முசுகுந்தர்க்குச் சகோதரர்களாக இருக்கவெனு அப்பிரான் ஆஞ்ஞாபித்தனன். அக்கட்டளை மறுத்துரைத்த அவ்வீரர்களைப் பரமகுமாரன், அதட்டிய சத்தத்துடன் நோக்கி "நீயிர் கருவங்கொண்டுளராகி கட்டளை மீறினமையால் இனி, மானுட சன்மமடைந்து அவ்வரையற்குச்

சோதரர்களாயிருந்து ஆணைவழி நடந்த பின்னர்ச் சிறந்த தவம்புரிந்து பவித்திரர்களாய் எமதாணையின்படி யெம்பக்கல் வருதிர்'' எனக் கடின கட்டளையிட் டருளினன். அதுபோல் அவ்வீரர்களைச் சகோதரர்களாகச் சூழப்பெற்ற அம்முசுகுந்தர், கருவூரில் இராசகன்னிகைகளாகத் தோன்றியிருந்த அப்ஸர ஸ்திரீகளை அச் சகோதரர்கட்கு மணம் புரிவித்து வாழுஞான்று அவர்களுள் வீரபாகுவென்பார் பத்தினியாய புஷ்பகந்தி வயிற்றில் தோன்றிய சித்திரவல்லி யென்பாளை விதி ஆவளி விவாகஞ்செய்து அவளைப்புல்கி அன்னவள் கருப்பத்துதித்த ஒரு குமாரற்கு அக்கினி வருணனென்ற நாமஞ்சூட்டிக் களிமீக்கொண் டுய்ந்து தாங்கொண்ட விரத மகிமையால் தேவேந்திரனே டெதிர்த்த வலாசுரன் முதலாயுள்ளாரொடு பொருது அவ்விந்திரற்கு வெற்றியுண்டாக்குபு மூவுலகுங் கீர்த்திநாட்டுபு தேவேந்திரனிடம் ஏற்ற ஸோமாஸ்கந்த மூர்த்தியைத் திருவாரூரிற் பிரதிட்டை செய்து பூசைகள் மிக்கெ நடாத்துபு மேல் தம் புத்திரனுய அக்கினிவருணன் பால் அரசைக் கையகப்படுத்திக் கைலையிற் கண நாதகதி புக்கார். அக் கந்தசஷ்டி விரதம் அனுட்டித்தல் எவ்வாறென்னின்,— தென்மொழிப் புராணக் கந்த விரதப்படலத்தில் விளக்கப்படுமாறு ஐப்பசிமதிப் பூருவ பக்கப் பிரதமையாதியாகச் சஷ்டியந்தமாக வுள்ள ஆறுதினங்களிலும் உரிய நித்திய கருமங்கள் முடித்து, புனித நீர்பெருக்கிய ஒரு பூரண கலசத்திற் கந்த அக்ஷதைகளைச் சேர்த்து, மாந்தழைக் கொத்தைப் பொருத்துவித்து, குசையை வரன்முறையாக முடிந்து சார்த்தித் தருப்பை ஆசனத்தின் மீதேற்றி, மந்திர பூருவமாகக் குமாரசுவாமியை அதன் கண் ஆவாகனம் பண்ணி, பூஜாவிதிப்படி ஆறுகாலங்களிலும் பூசித்து,

மேல் தேவாதிதேவன் திருச்சரித்திரங்களைப் பராமுக மின்றிப் பயபக்தி விசுவாசத்துடன் செவிமடுத்துச் சித்த சந்தோடமுற்று, ஒருகைத் தீர்த்தமே அருந்தும் உபவாசத்தினின்று நித்திரை நீத்திருந்து, ஏழாநாளிற் சிவனடியாரோடு பாரணைசெய்து, அன்றிரவிற் கண் படை கொளலாம். இனையவாறு தேவரும் முனைவரு மியற்றி ஒல்லாராய அசுரர் பயத்தினின்று விடுபட்டு இட்டகாமிய பலன்களைப் பெறுவாராயினர்.

விரத காலங்களிற் கண்துயில் கோடலாற் சீவன் மலத்தழுந்தி அசுத்தமெய்தும்: அதனால் விரதபங்கமாம். ஆதலின், ஊக்கத்தோடிருக்கவேண்டும். துயிலாமைக் காகச் சூதுமுதலிய கருமங்கள் செய்தல் ஏற்புடையன அல்ல. செய்யின், வேறு பாவம் விளைக்கவேண்டிய தின்று. ஏனைக் காலங்களிற் புரிபுண்ணியத்தினின்றும் விரதகாலங்களிற் புரிபுண்ணியம் வியனுதல்போல விரத காலங்களிற் புரிபாவமும் வியனென்று அறிகுதி. விரத போஜனம் உண்டுளோன் பகற்பொழுது உறங்குவானு யின் அவனை, நூறு வேதியரைக்கொன்ற பழிவந்தடையு மென்பது நூலின் துணிபு. **கந்தவிரதப்படலத்தில்—**

பாரணம் விதியிற் செய்தோன் பகற்பொழு துறங்குமாயின்
ஆரண மறையோர் தம்மி லம்பதிற் றிருவர் தம்மைக்
காரண மின்றிக் கொன்ற கடும்பழி யெய்து மென்னு
நாரதன் மாயம் வல்லோ ளிமைத்தில னயனஞ் சற்றும்''

என வருவது காண்டி. அதனுனே தேய்வை திமிர்ந்து கொளப்போய்ச் சேறு திமிர்ந்தவாறுய் முடியாமல் நிய மத்தோடும் விரதங்களை அனுட்டித்து நற்பலன் நனிபெற வேண்டும்.

(யேலோகேமநுஜாமஹ்யம் யத்கிஞ்சிதபிபக்திதஃ।
ப்ரயச்சந்திபலந்தேஷாம் ஸர்வயஜ்ஞதபோதிகம்।)

"உலகி லெதனையேனும் அதனில் ஓரற்பமேனும் எனக்காகப் பத்தியொடு நல்குபவர்கள் சகலயாகம் சகலதப மென்பவற்றின் பலனிலும் அதிகப்பலனை யடைவர்" என நாரதர் முன்னிலையிற் குமாரசுவாமி யருளினனெனச் சம்பவகாண்டத்து ௩௩ - ம் அத்தியாயங் கூறும். ஆதலின், அச்சுவாமிக்கு எதுகொண்டு எத்துணையேனுந் திருத்திசெய்யும் நல்லோர் பாக்கியமே பாக்கியம். இன்னவாறு கூறுதல், சிறுசெம்புக் காசுக்குக் கருப்பூரம் வாங்கி யேற்றிவிட்டுச் சகமெல்லாம் ஆள்வான் வரம்பெற முயலுங் கிருபணர்போன்ற மதியீனர் மதியை மதிப்பதென்பது அன்று. இயலும் அன்புபற்றியே ஈதல் கணித்தென்க. [தேய்வை = சந்தனம்.]

இவ்விரதாதி கருமங்கள், நிராசையாய்த் தெய்வப் பிரீதியாய்ச் செய்வார்க்குச் சனன பெந்தத்தை யுண்டாக்கா: சித்தசுத்தியை உண்டாக்கும்: மேல் ஞானம் பிறக்க வழியுண்டாம். பிரமாணம்.— ஈசாவாஸ்யோபநிஷத்தின் ௨ - வது மந்திரம் (குர்வந்நேவேஹகர்மாணி ஜிஜீவிஷேச்சதம்ஸமாஃ। ஏவம்த்வயிநாந்யதேதோஸ்தி நகர்மலிப்யதே நரே ॥) "(மனிதனுயுள்) நூறுண்டு: (இதற்குளேற்பட்ட) வாழ்நாளில் (தெய்வப்பிரீதியாய) கருமங்களைத் தவறுது செய்யவேண்டும். இஃதன்றி உன் விடயமாகப் பிறிதொரு வழியுமின்று: மனிதனை உன்பாற் கருமம் பெந்தத்தை யுண்டுபண்ணுது" என இயம்புகின்றது. ஆகலிற் புறப்பற்று அகப்பற்று நூறிப் பரநிட்டானுபவம் உண்டாக்கிக் கொள்ளவொல்லாது மோக்க அவாமட்டுங் கொண்டுளாருங் கதி பெறற்கு இந்தப் பகவதர்ப்பணமான கன்மமும் ஒருபாய வழியா

யிருக்கிறதெனக் கற்றுவல்லார் கணிக்கின்ருர். இவ்வண்மை யறியாச் சிலவர், கன்மம் பெந்தமெனக் காசினிக் கன்மமெலாங் கைக்கொண்டு கதியதர் காணு துழிதருவர். அவர் யாதொன்றை நினைப்பதுங் கன்மமென்றறியார்போலும். அறிதி.

(கூரு) 95

சீட.—சுப்பிரமணியப் பிரமம் உலோகானுக்கிரக நிமித்தம் எழுந்தருளியிருக்கு மெழிலில், ஒரு சிறுவரையெடுத்து இங்ஙன் விளக்கலாமோ?

குரு.—ஐய! அனந்த நாப்படைத்த அனந்தர் அனந்த நாள்நவிலினும் அணுத்துணையும் அவ்வெழில் முடிவுபெருதென்னின் அதனை, யானே விளக்கவல்லேன். நினது திருப்திக்காக நிகழ்த்தலென்னெனின்,— பிரமாண்ட பிருதிவிதத்துவம் கிழங்காகவும், அப்பு தேயு வாயு ஆகாயம் சுரோத்திரம் துவக்கு சக்கு சிகுவை கிராணம் வாக்கு பாணி பாதம் உபத்தம் பாயு சத்தம் பரிசம் உருவம் இரசம் கந்தம் மனம் புத்தி சித்தம் அகங்காரம் புருடன் அராகம் வித்தை கலை நியதி காலம் என்ற உகூ - தத்துவங்களும் [தண்டு=] நாளமாகவும், புத்தி குணமென்பவை நாளத்தின் சூத்திரமான நூலாகவும், மாயாதத்துவம் புறவிதழைச் சுமந்து நிற்கும் முடிச்சுப் படமாகவும், சுத்தவித்தியாதத்துவம் அகவிதழாகவும், சுத்தவித்தியாபுவன கலாசத்திகள் சுஉ - ம் கேசரமாகவும், சுஉ - கலைகட்கும் ருக-அக்கரங்கட்கும் ஆதாரமான மகாமாயை கருணிகையாகவும், ஈசுரதத்துவம் காயில் வட்டமாகவும், சதாசிவதத்துவம் வித்தாகவும், ஞானம் கிரியை இச்சை ஆதியென்னு நான்கு சத்திகளால் வியாபிக்கப்பட்ட சூரிய மண்டலம் சந்திர மண்டலம் அக்கினி

மண்டலம் எனவிரிந்த சத்திதத்துவம் மகாமாயையில் வட்டம் ஈசுரதத்துவத்தில்வட்டம் கருணிகையில்வட்டம் அதன் மேற்பரவியவட்டமென்ற நான்கு வகையாகவும் விளங்குங் கமலத்திலே (அதாவது) பிருதிவிதத்துவம் முதற் சத்திதத்துவம் ஈறாகவுள்ள ௩௫-உடன் சத்திதத்துவத்தோடு சேர்ந்த சிவதத்துவம் ௧-ம் ஆக ௩௬-தத்துவங்களுமாகிய அழகிய பதும பீடத்தின் மேலே, நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி சாந்தியதீதை யெனும் அபரவிந்து பேதகலைக ளாந்தையும், இவைகளை நடாத்துஞ் சூக்குமை அதிசூக்குமை மிருதை அமிருதை வியாபினியெனும் பரவிந்து பேதகலைகளாந்தையும், இந்திகை தீபிகை உரோசிகை மோசிகை ஊர்த்துவகை யெனும் அபரநாத பேதகலைகளாந்தையும், இவைகளை நடாத்தும் அனுதை அனந்தை வியோமரூபிணி வியாபினி அனுசிரிதை யெனும் பரநாத பேதகலைகளாந்தையும், அனுதையாய் விளங்குங் கிரியாசத்தியையும் அனந்தையாய் விளங்கும் ஞான சத்தியையும் வியோம ரூபிணியாய் விளங்கும் இச்சா சத்தியையும் வியாபினியாய் விளங்கும் ஆதிசத்தியையும் அனுசிரிதையாய் விளங்கும் பராசத்தியையும் பராசத்திக்கு அதிட்டானமாய் விளங்குஞ் சிவசத்தியையுந் தனக்குத் திருமேனியாகக்கொண்டு அனுதைமுதல் அனுசிரிதையந்தமாக வுள்ள பஞ்சகலைகளும் நிவிர்த்தி முதற் சாந்தியதீதையந்த மாகவுள்ள பஞ்சகலைகளும் நிரோதினி நாதை நாதாந்தை சத்தி சமனை உன்மனையென்ற ஆறுகலைகளுமாகிய சோடசகலைகளுள் (௧) நிவிர்த்தி அழற் பிரகாசமாய் (௨) பிரதிட்டை சோமசூரியப் பிரகாசமாய் (௩) வித்தை மின்னொளியாய் (௪) சாந்தி விளக்கொளியாய் (௫) சாந்தியதீதை மிக்க தீபவொளியாய், (௬) நிரோதினி அர்த்த சந்திர

வொளியாய் (எ) நாதை மாணிக்க வொளியாய் (அ) நாதாந்தை மிகு மின்னொளியாய் (கூ) சத்தி நூறு சூரியவொளியாய் (க0) வியாபினி ஆயிரஞ் சூரிய வொளியாய் (கக) வியோம ரூபிணி (கஉ) அனந்தை (கங) அனாதை (கச) அனாசிரிதையென்னு நான்கும் பலநிறப் பெரும் பிரகாசமாய் (கரு) சமனை கோடி சூரியப் பிரகாசமாய் (கசு) உன்மனை அளவிலாச் சூரிய சந்திரப் பிரகாசமாய்ப் பிரகாசிக்கின்ற நிட்களசகள மான மூர்த்தா மூர்த்தத்தை யுடையவனாய், சத்த பாதாளங்களையும் நடாத்துஞ் செயலுடைய ஆட கேசுரருக் கதிட்டானராகவுள்ள வியாபகர் அந்தகார மான உஅ - க் கோடி நரகங்களையுங் கெடாது பிரேரிக் குஞ் செயலுடைக் கூஷ்மாண்டருக் கதிட்டானராக வுள்ள வியோமரூபர் பிரமாண்டத்தைக் காக்குஞ் செயலுடைக் காலாக்கினி ருத்திரருக் கதிட்டானராக வுள்ள அனந்தர் நெருங்கிய அண்டங்களை உச்சியிற் சுமந்து காக்குஞ் செயலுஞ் சிவசத்தியா லதிட்டிக்கப் பட்ட குண்டலியெனும் பெயருமுடைய ஆதாரசத்திக் கதிட்டானராகவுள்ள அனாதர் அவ்வாதாரசத்தியொடு கூடி அசுத்தமாயையைப் பிரேரிக்குஞ் செயலுடைய அனந்தருக் கதிட்டானராகவுள்ளவரும் மேற்சொற்ற வியாபகர் வியோமரூபர் அனந்தர் அனாதரெனு நால் வரும் நாற்றிசைகளில் தோத்திரஞ்செய்திருக்கப் பெற்ற வருமாகிய அனாசிரிதரெனும் பரனே தானாயிருப்பவனாய் அனேக ருத்திரர்களும் அரிபிரமேந்திராதி சருவதேவர் களும் பலகோடி அபர குமாரர்களும் அவரவர் தானங் களினின்று போற்றிசைக்கப் பல்லாயிரங்கோடி அண்டங் கட்குஞ்சருவாதிகார காரணக்கடவுளென மிளிர்பவனாய், நொதுமலர்க்குப் பொதுமையினின் றியைந்தவாறாகவும் அடியவருட் சரியையோர்க்குச் சிறப்பினின்று குறித்த

வடிவில் வெளிப்படாது மறைந்திருந்தும் கிரியை யோர்க்கு முருடு கடைந்தபோது தோன்று முளரி போல மந்திரநிலேயில் வெளிப்பட்டும் யோகத்தார்க்குக் கன்று காட்டிக் கறக்குங்கால் வெளியாம் பால் போல விரும்பிய வடிவாத் தோன்றியும் ஞானத் தார்க்குக் கன்றைக்காதலித்த தலேயீற்றுவின் முலேப் பால்போலக் கருணேச்சுரப்பால் அன்பேதாகுகி யெஞ் ஞான்றும் வெளிப்பட்டும் ஆங்காங்கனுக்கிரகம் புரி கருணுநிதியாய் எழுந்தருளி விளங்குந்தெய்வம் சுப்பிர மணியப்பிரமமென்றும், அகத்தியர் அத்திரி ஆங்கீரசர் இரணியவருமமாமுனிவர் உரோமமாமுனிவர் ஏரண்ட மாமுனிவர் கலேக்கோட்டுமாமுனிவர் காசியபர் கௌத மர் சத்தகூன்முனிவர் சச்சிதானந்தர் சமதக்கினி சனகர் சனற்குமாரர் சுகர் ததிமகாமுனிவர் துருவாசர் நாரதர் பதஞ்சலி பரத்துவாசர் பராசரர் பற்பமா முனிவர் பிருகுமாமுனிவர் பிஞகிமாமுனிவர் புலத்தியர் மார்க்கண்டேயர் வசிட்டர் வான்மீகி விசுவாமித்திரர் வியாக்கிரபாதர் வியாசரென்னும் முப்பத்தொரு பிர தான முனிவரும் ஏனேமுனிவர் இருடிகளும் வாழ்த்தி வழிபட்ட பரதெய்வம் அதுவென்றும் அறிவாயாக.

(கூசு) 96

சீட.— இவ்வியாசத் திதுகாறு மருளிய பிரமாண வாயிலாக முன்னேப்பழம்பொருட்கும் முன்னேப் பழம் பொருளாம் முழுமுதற் கடவுளாயுள்ள சடக்ஷர மந்திர மூர்த்தியைச் சிலர் தாழ்வா யூகிக்க யான் கண்டேன். அவ்வூகத்திற் கேது யாது?

குரு.— சம்பவகாண்டத்து ௩௧-ம் அத்தியாயத்து ௬-ம் சுலோகத்தில் "தேவர்காள்! கேவலம் மடவார்போல்

எம்மைக் குழந்தையென்று நினையன்மின் : இதோ நமது சருவசிரேட்டமாய பாரமேசுவர வுருவைப் பாரீர்'' எனக் குமாரக்கடவுள் திருவாக்காக வருவண்மையையும், இவ்வியாசத்து ௬ - வது கடாவிடையினிறுதிக்கண் எடுத்துக்காட்டிய இரண்டுசுலோகங்களிற் ''காங்கேயன் கார்த்திகேயன் முதலிய திருநாமங்கட்கெல்லாம் பரமேசுரன்றன் பொருளென்பது சிறந்த முனிவர் கொள்கையன்றி வேறின்று. கேவலம் மடவோர்தாம் பேதம் பேசுவர்'' எனவரு வண்மையையும், ௧௭ - வது கடாவிடைக்கண் எடுத்துக்காட்டிய ௩௬ - வது அத்தியாயத்துப் ௬௮ - வது சுலோகத்திற் ''புவனேசுவரீ! உன் மகன் மகிமையைச் சுருக்கிச்சொன்னேன். விரித்துச் சொல்லத்துணியின் நூறுகோடிவருடம் இடைவிடாதோதினும் இறுதிபெறுவதன்றே" எனவும் **சம்பவகாண்டத்தின்** ௩௫ - வது அத்தியாயத்துப் ௬௫ - வது சுலோகத்திற் ''சகலப்பிராணிகளின் இதயகமலங்களில் வசிப்பவன் உன்மகன்" எனவும் பரமேசுரர் பகர்ந்த துணிபாகவரு வண்மையையும் **யுத்தகாண்டத்தின்** ௨௧-ம் அத்தியாயத்து ௩௩ - ம் சுலோகத்திலே ''(குகபிராணகிய) அத்தேவனது மகாஅற்புத வலியை யாரறிய வல்லுநர்'' என ஸ்ரீநாராயணர் நவின்றதாகவரு வண்மையையும், பிறவும் இவ்வியாசத்திற் பிரகாசப்படுத்தியுள்ள நிகமாதி பிரமாண நியாயங்களையுமுணரா வெளிறும், அணுபக்ஷஞ் சம்புபக்ஷம் இற்று இற்றென அறியாநெறி வயப்பட்ட மதாபிமானமுமே அவ்வூகத்திற் கேதுவென்றுணர்.

மெய்யினிலை இய அன்பு மிகுந்துள்ளாய்! ஈண்டொரு மனுடனை யொருமனுடன் பரமகுருவாக நம்பிப் பரமகதிபெற நினைவதினின்றும், பரமகுமாரனைப் பரமகுருவாக நம்பி அக்கதிபெற நினைவது எந் நீர்மைத்தென

அறி வலியிலார்நீர்மை இந்நீர்மைத்தெனப் பன்னூல் தேர் நன்னீர்மையினர் நன்கறிகின்றாரே. இதன்மேலும் யாம் புகலவேண்டிய தெவன்?

(கூள) 97

சீட.—பெருமான்! சூக்ஷ்மஸ்தூலரஹிதம், குண வர்ணரஹிதம், அவாமநம், அதீர்க்கம், அஜநநம், அவிநாசம், ஸச்சிதாநந்தம், ஏகம், வேதாந்த சித்தாந்த ரஹஸ்ய ஸம்பூர்ண மெனப்படுவதாகி, ஹரஹரிப்ரஹ்மேந்த்ராதி கடவுளரைத் தனதிடையரு ஆனந்தத்தில் அற்ப பாகமுடையவராக நிறீஇ யாவையுமாளும் நின்மல பரமசிவமெனுஞ் சத்தத்தாற் பிரகாசிக்கும் பெரிய பொருளாயுள்ளது சுப்பிரமணிய வாச்சியனென இவ்வளவினினிதுணர்ந்தேன் : சங்கை தவிர்ந்தேன். இனி, அவ்வத்துவுக்கென்னை யாட்படுத்து மாறு நீ யாண்டிடல் வேண்டும்.

குரு.—நன்று நன்று; அன்னணமவனருளே யொன்றி நின்றருள்புரிக.

## ஸ்ரீ சுப்பிரமணிய வியாசமாகிய

நூக – வது வியாச முற்றிற்று.

---

குமரகுருபரன் றிருவடி வாழ்க.

உ

சிவமயம்

ஓம் குமாரகுருப்யோநமஃ

௩௨ - வதாகிய

# குரு சிஷ்ய சம்பவ

# வரலாற்று வியாசம்

பின்னர்ச் சீடன், விவேகபூரண குருவின்
பாத கமலங்களைப் பன்முறை பராவி
வினவ லுற்றனன்.

(க) 1

சீடன்.—சருவேசுரனாகிய சாக்ஷாது சுப்பிரமணிய பரமான்மாவை யுபாசிக்கும் எம்பெரும! நினது சம்பவ வரலா றுணர்வான் என்மனம் இங்கண் அவாவுகின்றது ஆகலின், அதனை வெளியிடும்வழி யெவ்வழி?

குரு.—நினது வரலாறு வெளிவரின் அதுவும் வெளி வருமால்.

(உ) 2

சீட.—அவ் விருதிறத்தையும் என்னையனாகிய நீயே விளக்கிடல் கெழுதகைமையன்றோ?

குரு.—நீ நசை இயது நன்றால். கேண்மோ! வெளி யெனும் ஆகாயம், பிராணன் முதலிய தசவாயுக்க ளெனும் வாயு, உயிர்த்தீ உதரத்தீ சினத்தீ யெனும்

அக்கினி, செந்நீர் புன்னீர் நாநீர் முதலியன வெனும் அப்பு, தசை சருமம் முதலியனவெனும் பிருதிவி ஆகிய ஐம்பெரும் பூதங்களையும், அந்தாளெனும் அதலம், கணைத்தாளெனும் விதலம், முழந்தாளெனுஞ் சுதலம், முழந்தாளின் மேலிடமெனும் நிதலம், தொடையெனுந் தலாதலம், குய்யமெனும் இரசாதலம், இடையெனும் பாதாளம், நாபியெனும் பூலோகம் வயிறெனும் புவர் லோகம், இதயமெனுஞ் சுவர்லோகம், தோளெனும் மகாலோகம், முகமெனுஞ் சனோலோகம், நெற்றியெனுந் தபோலோகம், சிரசெனுஞ் சத்தியலோகம் ஆகிய பதினன்கு லோகங்களையும், நாதசக்கரத் திரவி, விந்து சக்கரத்து மதி, விழியில் நிலமகன், இதயத்திற் புதன், கண்டத்திற் பொன்னன், சுக்கிலத்தில் வெள்ளி, நாபி யிற் சனி, முகத்தில் இராகு, தாளிற் கேதுவென நிற்கும் நவக்கிரகங்களையும், பிராணவாயு, சூரியகலையி னின்று சந்திரகலையிற் பொருந்தும் உத்தராயணத் தையும், அவ்வாயு, சந்திரகலையினின்று சூரியகலையிற் பொருந்துந் தக்ஷிணயனத்தையும், அவ்வாயு, சூரிய கலை சந்திரகலையென்னும் இரண்டின் நடுவணுளதும் *உயர்ந்த உத்தராயணகதிக் கேதுவாயிருக்கின்றது

---

குறிப்பு :— காருடமென்னும் புராணம் முதலியன கூறு கின்ற இந்தப் பதினன்கு லோகப்பெயர்க ளொழுங்கிற் சில பேதப்படவும் அவையற்றிற்குரிய தானங்களுட் சில மாறுற வுஞ் சாண்டில்யோபநிஷத் கூறு விவரமும் வேறு விகற்பங் களும் இந்நூலாசிரியரது தகராலயரகசியத்து முதலாங்காண் டத்து ௩0 - ம் திருச்செய்யுளின் விசேடவுரை படித்தறிந்து கொள்ளலாம்.

* இவ்வுத்தராயணகதி.—யோகவாற்றின் பூரண கும்பகத் தானே அக்கினி கலைவழியாப் பிரமரந்தரம் அண்முற் றுயிர்

மாய அக்கினி கலையிற்பொருந்தும் அமாவாசியையும்' ஞானப்பிரகாசத்தெளிவு, நினைவாகாரமயப்படு பூரணை யையும், நிசுவாசத்தோடு சுவாசநாடி, ஒன்றிலிருந்து மற்றொன்றிற்சேரும் [மாதப்பிறப்பு=] சங்கிராந்தியை யும், பிராணவாயு, *தக்ஷிணாயனகதிக் கேதுவாயிருக்

---

விட்ட யோகிகளுள் உலகுவிழைந்தார் பெறும் உயருலகும், உலகுவிழையாதார் பெறுந் தத்துவாதீத வத்துவுமாம். இங் ஙனம் பரமகுருமுகத்தானே தத்துவசோதி யுள்ளபடி புரிந்து சீவபர ஐக்கியங் கண்டாரடையும் உத்தராயணகதி யுயர்வென வாம். இக்கதியுடையார், எக்கலை வழி யெக்காலத் தெவ்வித மாக வுயிர்துறப்பினும் அவர்கதி யிழுக்காதெனலும் வேத சம்மதம்.

* இத்தக்ஷிணாயனகதி:—ஆதுலர்க்குச்சாலை முதலிய அறங் களும் அக்கினிட்டோமம் முதலிய யாகங்களும் இயற்றினோர், இடது நாசிவழி யுயிர்விட்டவுடன் பரமேசுரனாணையின்படி புகை, இரவு, கிருட்டிணபக்கம், தக்ஷிணாயனம், வருடம், பிதி ருலகு, வெள்ளிடை, சந்திரனென்னுந் தானங்களை அந்தந்தத் தெய்வங்களான் மேன்மேலடைந்து இந்திரலோகம் புக்குய்யும் வாழ்வென்ப. இக்கதி தீர்ந்தோர், ஆகாயம், வாயு, தூமம், மேகம், மழை, ஓடதி, அன்னம், புருடவிந்துவெனு மிடங்களை முன்போல் எய்துபு மகடூஉ உதரஞ்சேர்ந்து பிறப்பரென வும், இங்ஙன் மத்திம சீவர்கள் உயிர்விடுவழி நாசியாயின் மத்திய வுலகும், காதாயிற் பிதிருலகும், கண்ணாயின் துறக்க வுலகும், வாயாயின் தைத்தியவுலகும், மரும மூலைக்கண்ணாயிற் காமதேனுவுலகும், குத குய்யங்களாயிற் பைசாசவுலகும் புகு வாரெனவும், தான தருமபரோபகாரங்களும் அடியவர் பத்தி யுஞ் சிவசன்மார்க்க யோக ஞானங்களுமற்றுப் பவமே யீட்டிக் குத குய்யங்களால் உயிர்விடும் பாதகர் கொடுநர கடைவ ரெனவும், சாணளப்பான் புழுப்போலப் பல யோனிகளிலும்

கின்ற சந்திரகலையினின்று மூலகுண்டலியிற்பொருந்து சந்திரகிரகணத்தையும், அவ்வாயு, *உத்தராயண கதிக்கு ஏதுவாயிருக்கின்ற சூரியகலையினின்று அக் குண்டலியிற்பொருந்து சூரியகிரகணத்தையும், மூல முக்கோணத்தில் (மேனோக்கி நிற்கின்ற) மேரு, அதோ கோணத்தில் மந்தரம், அக்கோணத்திற்கு வலப்பக்கத் தில் வெள்ளிமலை, இடப்பக்கத்தில் இமயம், ஊர்த்துவ பாகத்தில் நிடதம், தக்ஷிணபாகத்திற் கந்தமாதனம், வாமரேகையில் வருணமென நிலைஇய ஏழு குலாசலங் களையும், மூத்திரமெனும் உப்புக்கடல், வாய் நீரெனும் நன்னீர்க்கடல், (சுக்கிலமாகிய) நீரெனும் பாற்கடல், செந் நீரெனுந் தயிர்க்கடல், மஜ்ஜையெனும் நெய்க்கடல், வாயின் மதுர நீரெனுங் கருப்பஞ்சாற்றுக்கடல், கப மெனும் மதுக்கடல் ஆகிய ஏழுகடல்களையும், என் பெனுங் சம்பு, தோலெனுஞ் சான்மலி, தசையெனுங் குசை, நரம்பெனுங் கிரௌஞ்சம், உகிரெனும் புட்கரம், கேசமெனும் பிலக்கம், மேகமெனுஞ் சாகம் ஆகிய ஏழு தீவுகளையும், தோன்றியிருந்திரிகின்ற [பேன் =]

---

புக்குழிதருவரெனவும், இவைகளைப் பகிர்முக உத்தராயண தக்ஷிணயன கதிகளென நூல்கள் நுவலுமெனவுங் கூறுப.

*இவ்வுத்தராயணகதி:— அரன் அரி அயனாதி மூர்த்திகள் மீது பத்தி செலுத்துமாற்றானே ஞான வைராக்கியமுள்ளோர், வல நாசிவழி உயிர்விட்டவுடன் பரமேசுரனாணையின்படி சுவாலை, பகல், சுக்கிலபக்கம், உத்தராயணம், வருடம், வாயு, ஆதித்தனெனுந் தானங்களை அந்தந்தத் தெய்வங்களான் மேன் மேலடைந்து இந்திரலோகம் பிரமலோகம் விஷ்ணுலோகம் உருத்திரலோக மென்பவற்றை யெய்துபு சாலோக சாமீப சாரூபங்கள் பெற்றுய்யும் வாழ்வென்றும், இக்கதியினர் ஞானத் தின்மேற் சாயுச்சியமடைவரென்றும் விளம்புப.

கரும்புழு வெண்புழு முதலியனவெனும் அனேகவுயிர்களையும், சென்னியிற் சீசைலம், நெற்றியிற் கேதாரம், புருவநடுவணிற் காசி, குசத்திற் குருக்ஷேத்திரம், இதயத்திற் பிரயாகை, இதய நடுவணிற் சிதம்பரமெனுந் திருத்தலம் ஓராறனையும், அச்சிதம்பரத்தைச் சூழ்தருஞ் சத்தம் பரிசம் உருவம் இரசம் கந்தம் அகங்காரம் மகத்தெனும் ஏழாவரணங்களையும், அங்கண் உன்மனியின் ஆயிரமிதழ்க் கமலமெனும் ஆயிரக்கான் மண்டபமொன்றனையும், அதனருகிருக்குஞ் சிவபுஷ்கரணியையும், நாநுனியிற் சரச்சுவதி, வலக்கண்ணில் ஆதித்தன், இடக்கண்ணிற் சோமன், கழுத்தின் புறத்தில் மாயனது கோரவடிவு, கழுத்தினகத்தில் மாயனது சாந்தவடிவு, இதயத்தின் புறத்தில் உருத்திரனது கோரவடிவு, இதயத்தினகத்தில் உருத்திரனது சாந்தவடிவு, நரம்புகளிற் கந்தருவராதி கணங்கள், என்புகளிற் பூதப்பிரேதாதி ஈட்டங்கள், தசையில் இராக்கதர் பைசாசரெனுங் குழுமல்கள், உரோமங்களிற் பலப்பல தெய்வக்கூட்டங்கள், வாக்கில் அக்கினி, பாதத்தில் இந்திரன், பாணியில் உபேந்திரன், பாயுவில் மிருத்தியு, உபத்தத்திற் பிரசாபதி, சுரோத்திரத்திலே திக்கு ரூபி, துவக்கில் வாயு, சக்ஷுவிற் கதிரவன், சிகுவையில் வருணன், ஆக்கிராணத்தில் அசுவினிதேவர், மனத்திற் சந்திரன், புத்தியிற் புத்திதேவதை, அகங்காரத்திற் காலாக்கினிருத்திரன், சித்தத்திற் சிவனென நிற்கும் மூர்த்திகளையுமுடைத்தாய பிண்டமென்னும் பிரமாண்டத்தின் நாப்பண் இலகொரு க்ஷேத்திரத்திற் குடிகொளும் க்ஷேத்ரஜ்ஞன் என்னும் அரசற்குப் பலவளனெலாமுடைய இருதயபுரி யெனும் இராசதானியொன்றுண்டு. அதனிடை வதிதரும் அவ்வரசனுகிய இறைவனென்பான், நிருவிகற்பியென்னும் மடந்தையைப்

புல்கி யென்னையும் விகற்பியென்னும் மடந்தையைப் புல்கி உன்னையுமீன்று எனக்கு விவேகபூரணனெவும், உனக்கு விஷயப்பிரியனெனவும் உரிய பெயர்கள் சூட்டினன். அன்னானவ்வாறீன்று அத்திறத்த பெயர்கள் சூட்டினமையாலன்றோ இம்பரெதிரெதிரிருந்து மறைவிதி தெரிந்து இத்துணைநாளா யற்புதமீக்கொள் தம்பிரான் சால்புகள் தாம்பேசலாயினோம் : அறிகுதி.

மேல், குருவுரைத்தவுரை செவிமடுத்த சீடன், ஆண்டானந்த பரவசத் தழுந்தினவனாய்த் தனது தருக்க மொழிந்து சண்முகப் பிரமத்தைத்தானே விதந்து தோத்திரிப்பவ னாயினன்.—

## தோத்திரம்

க. ஹரஹர சிவசிவ சண்முக நாதா
ஹரஹர சிவசிவ வென்முக நாதா,

உ. ஹரஹர சிவசிவ பரம விலாசா
ஹரஹர சிவசிவ வபய குகேசா,

ந. அருண கிரிபரவு மருணெறி நாதா
தரும வுறுவர்புகழ் சததள பாதா,

ச. அரிபிர மாதிக டொழுவடி வேலா
திருவடி நாரவ ருளமுறை சீலா,

ரு. எனினிய குருநித மெனுமதி யீசா
சனனவெய் தறவளி தருபர மேசா,

சு. பாசா பாச பாப விநாசா
மாசே ருத மான நடேசா,

எ. போஜா* வாஜா பூஜகர் நேசா
தேஜா ராஜா தேவஸ மாஜா,

அ. தீஞ்சுவை யருளொரு திருவா ரமுதே
ஓஞ்சர வணபவ வுருவே யருவே

எனத் தோத்திரித்து,

## பிரார்த்தனை

### கலிவிருத்தம்

அடியேனி னைச்சிறிது மறியாதொ ழித்தேன்
அடியேனி னற்கருணை யணவாது கெட்டேன்
அடியேன்வெ ளிற்றறிவி னயராசு †தொத்தா
சடியேனை விட்டிடைய வருளீச வுற்றே.

"ஓ! பிரமாணாதீதமான சருவேசுரா! தாசர் தவற்றை நீத்தருளொரு தற்கொடை வள்ளாஅல்! நன்றெனும் வலத்திலுந் தீதெனு மிடத்திலுமாக மாறிமாறி யுழிதரு நினது மாயா கிருத்தியமென்னும் பெருஞ்சூறைக் காற்றில் அகப்பட்டு அலை துகளாயிருக்கின்றேன் யான். இனி, தமியேன் அதனுழை அகப்படாது சலன மற்று நித்திய திருத்தியேயும் நின்னடியவர் அடையும் பதியைத் தரிசித் தினிதுய்யுமாறு திருவுளமிரங்கி அருடி, அருடி"

---

* போஜன் = இயற்கை நலமுளன். வாஜன் = அழுக் கற்றவன்.

† தொத்து = பழமை; "தொன்மை தொடர்பு தொத்துத் தொண்டு" என்னுஞ் சேந்தன்றிவாகரச் சூத்திரத்தா னறிக.

என அதியுருக்கத்தொடு பிரார்த்தித்த சீடனானவன், எதிரிலிருக்கின்ற தன்னாசிரியரைத் தானே பரசிவமாகப் பாவித்துப் பழிச்சிப் பின் வருமாறு நுவல்பவனாயினன்—

கட்டளைக்கலித்துறை

ஆனியி லுன்னடிக் காருண் ணி யத்தின்மெய் யாறெழுத்தின்
தேனினை யானுண்டு தேக்குமா றிற்றைநீ செய்வதற்கோர்
ஊனமின் றத்திற னேதுமுண் டேலதை யுந்துமித்துன்
தானந் தனிலெனை வைத்திடு வாயென்றன் சற்குருவே.

ஆசிரிய ரனுக்கிரகம்

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தரு.—குருவெனவி சைத்திடுவை குமரகுரு பரனைக்
கோளறுப ரத்திலுற வாறுநனி தந்தேன்
திருவுருவ மானபர தெய்வமிது தானே
தேடரிய வோருருவி லாதுமிது தானே
இருதிறனு மொருவழி யிணைக்குநிலை நின்று
வீதறுதி பேசியநி யாயவிதி கொண்டால்
கருவிலுரு வாகாவொர் கதியையுடல் போமுன்
கண்டடைதி நின்னுடைய கடமையிது வேயோ

என்று அளிகெழுமிய சீடனை ஆசிரியர் ஹஸ்த மஸ்தக சையோகஞ் செய்து புனிதனாக்கி மோக்ஷதாரகமந்திரத்தை அவனுக்கு விதிமுறையாக உபதேசித்து அவன்முகநோக்கி, அன்ப! இங்ஙன் நின்குணம் புத்தமுதம் போறலின் இன்று நீ, குமரகுருதாசனாயினை. இனி, இனிதினினிதென இனிதுய்வாயென் றாசீர்வதித்தனர். அஞ்ஞான்றச் சீடன் அத்தேசிகரின் திருவடிப் போதுமுன்

னந் தண்டாகாரமாக வீழ்ந்து வணங்கியெழீஇ அறிவின் மிக்கோய்! நினது நெஞ்சம் எவ்வாறே அவ்வாறு யான் இசைந்துளேனென்று நுவன்றனன். அன்னவாறு நுவன்றுள்ள நித்திய பாக்கியமாம் முத்திநெறிகூடுஞ் சீடனைப் பெயர்த்தும் அவ்விவேகபூரணாசாரியர் அன்போடு அளவளாவித் தழீஇ நின்று இன்றுதான் எமதெண்ணம் நிறைவேறிற்று, இனியொன்றுங் குறைவின்றென்று கூறினர். பின்னர் அக்குருவுஞ் சீடனுங் குகப்பிரமத்தின் அகண்டானந்த வாரிதோய்ந் துய்ந்தனர்.

## வாழ்த்து

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்*

முத்திதந் தாள ஞதி முருகவேள் பதங்கள் வாழ்க
பத்தர்கள் யோகர் ஞான பரர்கழற் கமலம் வாழ்க
இத்திடன் படிப்போர் கேட்போ ரிசைக்குந ரெவரும் வாழ்க
அத்துவி தத்தோல் வாழ்க வதைச்சொனன் னூலும் வாழ்க

## குருசிஷ்யசம்பவ வரலாற்று வியாசமாகிய

கூஉ - வது வியாச முற்றிற்று.

---

திவோதய ஷடக்ஷரோபதேசஞ் சம்பூரணம்.

குமரகுருபரன் றிருவடி வாழ்க.